# பொன் மொழி வாசகம்

## (இரண்டாம் புத்தகம்)


ஆசிரியர்கள் :

**புலவர் பு. செல்வராசனார்,**

தலைமைத் தமிழாசிரியர்,

சி. அப்துல் ஹகிம் இந்து முஸ்லிம் உயர்நிலைப்பள்ளி,

சென்னை.

**ஆபிரகாம் அருளப்பன்,** B. A.,

தமிழ்த்துறைத் தலைவர்,

அர்ச். சேவியர் கல்லூரி, பாளையங்கோட்டை.

பதிப்பாசிரியர் :

**சு. சே. உமாபதி,** M. A., L. T. (Dip. in. Geog.)

தலைமையாசிரியர்

சி. அப்துல் ஹகிம் இந்து முஸ்லிம் உயர்நிலைப்பள்ளி,

சென்னை.



சித்ரா பப்ளிஷிங் ஹௌஸ்

ஸ்ரீ வைகுண்டம்

1954

பதிப்புரிமை] [விலை அணா 6

# முன்னுரை

'பொன் மொழி வாசகம்' என்னும் பெயரோடு வெளிப் போதரும் தமிழ் வாசக வரிசையில் இது இரண்டாம் புத்தக மாகும். இது 1941–ஆம் ஆண்டில் அரசியலார் வெளியிட்ட பாடத் திட்டத்தைத் தழுவி எழுதப் பெற்றுளது. இதன் கண் 400 புதிய சொற்கள் இடம் பெற்றுள்ளன. மொழிப் போதனையில் முக்கியமாகக் கருதப்படுவது மொழிப் பயிற்சியேயாகும். இப்பயிற்சிக்குப் போதிய வாய்ப்பளிக் கும் முறையில் இதன்கண் பல்வேறு வகையான ஓவியங் கள் தரப்பட்டுள்ளன. ஆசிரியர்கள் அவற்றைப் பயன் படுத்திக் கொள்வது இன்றியமையாததாகும்.

ஒவ்வொரு பாடத்தின் இறுதியிலும் மொழியறிவு ஆக்கமுறும் வகையில் பயிற்சிகள் தரப்பட்டுள்ளன. இப் பயிற்சிகள் அனைத்தையும் குழந்தைகள் செய்யுமாறு தூண்ட வேண்டுவது ஆசிரியர் கடமையாகும். அன்றியும் வகுப்புக்கு ஏற்றவையாகச் சில இலக்கண பாடங்களும் சேர்க்கப்பட்டுள்ளன.

சிறுவர் சிறுமியர்க்கு இன்பு மூட்டத்தக்க இனிய எளிய பாடல்கள் இதன்கண் சேர்க்கப்பட்டுள்ளன. இப் பாட்டுக்களைக் குழந்தைகள் மனப்பாடம் செய்வது நல மாகும். இதன்கண் சேர்க்கப்பெற்றுள்ள பாடங்கள் சிறு வர் சிறுமியரின் தமிழறிவையும், பொது அறிவையும் வளரச்செய்யும் என்பது உறுதி. அறிஞர்கள் தமிழ்ச்சிறுவர் சிறுமியர்க்கு இந்நூல் பயனளிக்குமாறு செய்வார்கள் என முற்றிலும் நம்புகின்றோம்.

சென்னை
7–11–54.

ஆசிரியர்கள்.

# பொருளடக்கம்

உரையாடல் 1:—ஆசிரியர் படங்களைப் பற்றி உரை யாடல் நடத்தவேண்டும்.



உரையாடல் 2:—ஆசிரியர் படத்தைப் பற்றி உரையாடல் நடத்தவேண்டும்.



உரையாடல் 3:—ஆசிரியர் படங்களைப் பற்றி உரை யாடல் நடத்தவேண்டும்.



கோடுள்ள இடங்களில் தகுந்த எழுத்துக்களை எழுது:

1. கடி—ரம்
2. க—ம்பு
3. – –யவிமா–ம்
4. முத—
5. பெ—டி
6. சே—ல்
7. —ர்
8. எ—து
9. –ள–கு
10. —ன்
11. —ம்—
12. ம–வெ–டி
13. —னை
14. சி—க—
15. —லி
16. க—டி

# 1. விலங்குகளின் ஒலிகளும், பறவைகளின் ஒலிகளும்



# விலங்குகளின் ஒலிகள்

குதிரை கனைக்கும். எருது முக்காரமிடும்.
நாய் குரைக்கும். கழுதை கத்தும்.
கரடி உறுமும். நரி ஊளையிடும்.
யானை பிளிறும். சிங்கம் கர்ச்சிக்கும்.

# பறவைகளின் ஒலிகள்

கிளி பேசும்.
மயில் அகவும்.
சேவல் கூவும்.
காகம் கரையும்.
ஆந்தை அலறும்.
குயில் பாடும்.

பயிற்சி:

கோடுள்ள இடங்களில் தக்க சொற்களை எழுது :—

காகம் ' கா...கா ' என்று——.
நாய் 'வள்...வள் ' என்று——.
குயில் ' க்கூ...க்கூ ' என்று——.
சேவல் ' கொக்கரக்கோ ' என்று——.

# 2. வீட்டு விலங்குகள்

பசு சாதுவான பிராணி.
அது நமக்குப் பால்
தருகிறது.





எருது ஏர் உழ உதவும்.
அது வண்டியும் இழுக்கும்.

ஆட்டின் உடலில் நீண்ட
உரோமம் உண்டு.





நாய் நன்றி உள்ள மிருகம்.

அது வீட்டைக் காக்கும்.



பூனை எலி பிடிக்கும்.
அது பால் குடிக்கும்.



குதிரை வேகமாக ஓடும்.
அது வண்டி இழுக்கும்.

இம்மிருகங்களை வீடுகளில் வளர்க்-கிறோம்.

ஆகையால் இவை வீட்டு விலங்கு-கள் எனப்படும்.

விலங்கு என்னும் சொல்லுக்கு மிருகம் என்பது அர்த்தம்.

பயிற்சி :

1. பசு நமக்கு என்ன தரும் ?
2. ஆட்டினால் நமக்குப் பயன் என்ன ?
3. வேறு இரண்டு வீட்டு விலங்குகளின் பெயர்களைக் கூறு.

# 3. காட்டு விலங்குகள்



மிருகங்களுள் மிகப் பெரியது யானை.



மான் வெகு வேகமாக ஓடும்.

இவை இரண்டும் மாமிசம் புசியா.

கரடியின் உடலில் கருமை-யான நீண்ட உரோமம் உண்டு.





சிங்கம் மிருகங்களுக்கு அரசன்.



புலியின் உடலில் மஞ்சள் நிறமும், கருமை நிறமும் கலந்திருக்கும்.

குள்ளநரிதந்திரம் மிக்கது. அது நண்டு தின்னும்.



இவை காட்டில் வாழும் விலங்குகள்.

இவ்விலங்குகள் மாமிசம் தின்பவை.

இவை சாதுவானவை அல்ல; துஷ்ட மிருகங்கள்.

விடை கூறு:—

1. இரண்டு சாதுவான மிருகங்களின் பெயர் களை எழுது.
2. இரண்டு துஷ்ட மிருகங்களின் பெயர்களை எழுது.
3. மிருகங்களுக்கு அரசன் யார் ?
4. யானைக்குத் தந்தங்கள் எங்கே உள்ளன ?

# 4. கிராமத் தொழிலாளர்



நிலத்தை உழுது பயிர்

செய்பவர் *உழவர்*.



பித்தளைப் பாத்திரங்கள்

செய்பவர் *கன்னார்*.



இரும்பு வேலை செய்பவர்

*கொல்லர்*.



வீடு கட்டுபவர் *கொத்தர்*.



மரவேலை செய்பவர் *தச்சர்*.



மண்பாண்டம் செய்பவர்

*குலாலர்*.

ஆடை நெய்பவர் *நெசவாளர்*.

நகை செய்பவர் *தட்டார்*.

எவர் எதைச் செய்வார் ?

1. தையற்காரர்———.
2. கணக்கப்பிள்ளை———.
3. பாடகர்———.
4. ஆசிரியர்———.

# 5. வடமொழி எழுத்துக்கள்—1



ஜ ஸ க்ஷ

| | | |
|---|---|---|
| ஜலம் | வாஸனை | திராக்ஷை |
| ஜாடி | புஸ்தகம் | பக்ஷி |
| பஜ்ஜி | ஸிம்மம் | க்ஷேமம் |
| ஜோதி | ஸௌலபம் | லக்ஷ்மி |

ஜன்னல் கம்பி
ஜால வித்தை
ஸரஸ்வதி பூஜை
பக்ஷணம் தின்னு

# 6. வடமொழி எழுத்துக்கள்—2




# ஷ ஹ ஸ்ரீ

| | | |
|---|---|---|
| விஷம் | ஹனுமான் | ஸ்ரீ ராமர் |
| கஷாயம் | ஹாரம் | ஸ்ரீ கிருஷ்ணர் |
| பாஷை | ஹிமயம் | ஸ்ரீ காந்தி |
| புஷ்பம் | ஹோமம் | ஸ்ரீ தரன் |

ஷஷ்டி பூஜை

புஷ்ப ஹாரம்

ஹிமய பர்வதம்

# 8. ஒன்றும் ஒன்றுக்கு மேலும்



இவன் ஒரு **பையன்.**



இவர்கள் **பையன்கள்.**



இவள் ஒரு **பெண்.**



இவர்கள் **பெண்கள்.**



இது ஒரு **நாற்காலி.**



இவைகள் **நாற்காலிகள்.**



இது ஒரு **பசு.**



இவை **பசுக்கள்.**



# 9. வாகனங்கள்

1. ஒரு மாடு இழுக்கும் வண்டி
 ஒற்றை மாட்டு வண்டி.

2. இரண்டு மாடுகள் இழுக்கும் வண்டி
 இரட்டை மாட்டு வண்டி.

3. குதிரை இழுக்கும் வண்டி குதிரைவண்டி.

4. இரண்டு குதிரைகள் இழுக்கும் வண்டி
 கோச்சு வண்டி.

5. அநேகர் ஏறிச்செல்வது மோட்டார் பஸ்.
6. மோட்டார்வண்டி வேகமாய்ச் செல்லும்.
7. இரயில் வண்டி நீராவியால் ஓடுகிறது.
8. நீராவிக் கப்பலால் கடல்களைக் கடக்கலாம்.
9. ரிக்ஷா வண்டியை மனிதன் இழுக்கிறான்.
10. மூட்டைகள் ஏற்ற உதவுவது கட்டை வண்டி.
11. மனிதர் சுமந்து செல்வது பல்லக்கு.
12. ஆகாய விமானம் வானத்தில் பறக்கும்.
13. குதிரை, சவாரி செய்ய உதவும்.
14. யானையின்மேல் அரசர் செல்வர்.
15. கட்டுமரம் மீன் பிடிக்க உதவும்.

விடை எழுது :

1. மோட்டார் பஸ் எதற்கு உபயோகம் ?
2. மனிதன் இழுக்கும் மூட்டை வண்டியின் பெயர் என்ன ?
3. படகு எதற்கு உபயோகம் ?
4. இரண்டு குதிரைகள் இழுக்கும் வண்டியின் பெயர் என்ன ?

# 10. படம் சேர்த்துப் படித்தல்

நான் ஒரு வாங்கினேன்.

கந்தன் ஒரு வாங்கினான்.

 மரத்தின் மேல் இருக்கிறது.

 கன்றுக்குப் பால் தருகிறது.

பாம்பாட்டி
பெட்டியில்  இருக்கிறது.

 மிகவும் பெரிய மிருகம்.

அணிலின் முதுகில் மூன்று 
இருக்கின்றன.

எங்கள் வீட்டில் ஒரு  இருக்கிறது.

# 11. நிறங்கள்

1. கிளியின் நிறம் *பச்சை.*

2. எலுமிச்சம் பழத்தின் நிறம் *மஞ்சள்.*

3. சங்கின் நிறம் *வெண்மை.*

4. மிளகாய் வற்றலின் நிறம் *சிவப்பு.*

5. வானத்தின் நிறம் *நீலம்.*

6. காக்கையின் நிறம் *கறுப்பு.*

## பயிற்சி

அ. தகுந்த சொல்லால் கோட்டை நிரப்பு :

1. இலையின் நிறம்——. 4. இரத்தத்தின் நிறம்—.
2. சாமந்திப்பூ நிறம்—. 5. கடலின் நிறம்———.
3. பாலின் நிறம்——. 6. அடுப்புக்கரியின் நிறம்—.

ஆ. விடை எழுது :

1. உப்பின் நிறம் என்ன ?
2. மிளகின் நிறம் என்ன ?

# 12. சுவைகள்



கரும்பு இனிக்கும்.



எலுமிச்சம்பழம் புளிக்கும்.



பாக்கு துவர்க்கும்.




உப்பு உவர்க்கும்.



மிளகாய் காரும்.



பாகற்காய் கசக்கும்.

இனிப்பு, புளிப்பு, துவர்ப்பு, உவர்ப்பு, காரம், கசப்பு என்பன அறு சுவை எனப்படும்.

# 13. இரட்டைச் சொற்கள்

1. வாழைக் காய் *சீப்புச் சீப்பாய்* இருக்கும்.
2. பூக்கள் *கொத்துக் கொத்தாய்ப்* பூத்தன.
3. சிறுவர் *வரிசை வரிசையாய்* நின்றனர்.
4. தேங்காய் *குலை குலையாய்க்* காய்க்கும்.
5. ஆடுகள் *மந்தை மந்தையாய்* மேய்கின்றன.
6. நெல்லைப் *போர் போராய்க்* குவித்தார்கள்.
7. அரிசியை *மூட்டை மூட்டையாய்க்* கட்டினார்கள்.
8. மக்கள் *கூட்டம் கூட்டமாய்ச்* சென்றார்கள்.

பயிற்சி

தகுந்த இரட்டைச் சொற்களால் கோடுகளை நிரப்பு:

சுளை சுளையாய்—கட்டுக் கட்டாய்—முடிச்சு முடிச்சாய்

1. விறகைக்———கட்டினர்.
2. நெல் நாற்றை———கட்டுவார்கள்.
3. பலாப் பழத்தைச்———எடுக்கலாம்,

# 14. பிரிக்க முடியாத இரட்டைச் சொற்கள்

1. கந்தன் *கலகல* எனச் சிரித்தான்.
2. பாலன் பல்லை *நறநற* வென்று கடித்தான்.
3. உலை *தளதள* வென்று கொதித்தது.
4. கத்தி *பளபள* வென்று மின்னியது.
5. பம்பரம் *கிறுகிறு* வென்று சுழன்றது.
6. திருடன் *திறுதிறு* வென்று விழித்தான்.
7. பரதன் *படபட* வென்று பேசினான்.
8. கண்ணன் *கடகட* வெனப் புரண்டான்.

பயிற்சி

தகுந்த சொற்களால் கோடுகளை நிரப்பு :

மளமள—சலசல—வளவள

1. இலைகள்——என்று அசைந்தன.
2. பிள்ளைகள்———என்று பேசினார்கள்.
3. கிளை———என்று ஒடிந்தது.

# 15. உச்சரிப்பு

1. இது ஒரு கல்.

2. அவை பசுக்கள்.

3. பத்துப் பலம் சர்க்கரை வாங்கிவா.

4. அது நெல் அடிக்கும் களம்.

5. எனக்கு மாம்பழம் வேண்டும்.

6. ஆகாயத்தின் நிறம் நீலம்.

7. இந்த அறையின் நீளம் என்ன ?

8. தங்கக் கிண்ணத்தில் தண்ணீர் கொண்டு வா.

9. மன்னர் வெந்நீர் குடித்தார்.

10. நண்டு வலையில் இருந்து வளையில் புகுந்தது.

**இவற்றின் உச்சரிப்பை அறிந்து கொள்.**

கல்—கள் ; பலம்—களம்—பழம் ; நீலம்—நீளம் ; கிண்ணம்—மன்னர் ; தண்ணீர்—வெந்நீர்—வலை—வளை.



# 16. பறவைகள்

1. பறவை ஆகாயத்தில் எப்படிப் பறக்கிறது ?
2. பறவை தன் சிறகுகளின் உதவியால் பறக்கிறது.
3. சில பறவைகள் வெகு உயரம் பறக்கும்.
4. சில பறவைகள் வெகு தூரம் பறக்கும்.
5. எல்லாப் பறவைகளும் அப்படிச்செய்ய முடியாது.
6. பறவையின் மூக்குக்கு அலகு என்பது பெயர்.
7. பறவைகள் முட்டை இட்டுக் குஞ்சு பொரிக்கும்.

# 17. இதற்கு இது இயல்பு



காலையில் விழிக்கும்;
'கொக்கர கோ' என்று கூவும்.



நன்றி மிக்கது ;
எசமானன் வீட்டைக் காக்கும்.



உருவில் சிறியது ;
ஆனால், சுறுசுறுப்பு உள்ளது.



அழகில் சிறந்தது ;
தோகை விரித்து ஆடும்.



கம்பீரமான மிருகம்;
வேகமாக ஓடும்.



மந்த குணம் உடையது ;
சேற்றில் விழுந்து புரளும்.



உறுப்பில் சிறந்தது.



# 18. திசைகள்

**1.** சூரியன் உதிக்கும் திசை **கிழக்கு.**

**2.** சூரியன் மறையும் திசை **மேற்கு.**

**3.** நீ சூரியன் உதிக்கும் திசையை நோக்கி நின்ருல் உனது இடக்கைப்பக்கம் **வடக்கு.**

**4.** உனது வலக்கைப்பக்கம் **தெற்கு.**

**5.** சுவரில் மாட்டி உள்ள தேசப் படத்தின் திசைகளை எப்படி அறிவாய் ?




**6.** படத்தின் தலைப்பக்கம் வடக்கு.

**7.** படத்தின் கீழ்ப்பக்கம் தெற்கு.

**8.** படத்தின் இடப்பக்கம் கிழக்கு.

**9.** படத்தின் வலப்பக்கம் மேற்கு.

திசைகள் நான்கு. அவை வடக்கு, கிழக்கு. தெற்கு, மேற்கு என்பன.

**விடை எழுது :**

1. உன் வீடு எந்தத் திசையை நோக்கி இருக்கிறது ?
2. உன் பள்ளிக்கூடம் உன் வீட்டிற்கு எத்திசையில் இருக்கிறது?

# 19. உள்ளவனும் இல்லாதவனும்

1. படிப்பு உள்ளவன் பண்டிதன்.
2. படிப்பு இல்லாதவன் மூடன்.
3. பணம் உள்ளவன் பணக்காரன்.
4. பணம் இல்லாதவன் ஏழை.
5. உண்மை பேசுபவன் சத்தியவான்.
6. உண்மை பேசாதவன் பொய்யன்.
7. புத்தி உள்ளவன் அறிவாளி.
8. புத்தி இல்லாதவன் மடயன்.
9. தைரியம் உள்ளவன் தைரியசாலி.
10. தைரியம் இல்லாதவன் கோழை.
11. கோபம் உள்ளவன் கோபக்காரன்.
12. கோபம் இல்லாதவன் சாது.

**பயிற்சி**

தகுந்த சொற்களால் கோடுகளை நிரப்பு :

செவிடன்—நோயாளி—குருடன்—
நொண்டி—ஊமை.

1. கண் இல்லாதவன்———.
2. கால் இல்லாதவன்———.
3. காது கேளாதவன்———.
4. பேச முடியாதவன்———.
5. நோய் உள்ளவன்———.



# 20. சைக்கிள் வண்டி

(பாட்டு)

தங்கையே பார், தங்கையே பார்,
சைக்கிள் வண்டி இதுவே பார்! 1
சிங்கார மான வண்டி!
சீமையிலே செய்த வண்டி! 2
மாடில்லை, குதிரை இல்லை
மாயமதாய்ப் பறந்திடும் பார்! 3
காலாலே மிதிப்ப தனுல்
கடும்விசையில் போயிடும் பார்! 4
ஒன்றன்பின் ஒன்ருக
உருளும்பை தாக்களைப் பார்! 5
அக்காளும் தங்கையும் போல்
அவை போகும் அழகைப் பார்! 6

—கவிமணி, தேசிகவிநாயகம் பிள்ளை

# 21. மேல், கீழ், உள்ளே, வெளியே



புத்தகம் மேசைமேல்
இருக்கிறது.



நாற்காலியின் கீழ்
பந்து இருக்கிறது.



பணம் பெட்டியின் உள்ளே
இருக்கிறது.



நாய் வீட்டுக்கு வெளியே
படுத்திருக்கிறது.

கோடுகளைத் தகுந்த சொற்களால் நிரப்பு :

1. மேசையின் —— புத்தகம் இருக்கிறது.
2. பெட்டியின் —— பணம் இருக்கிறது.
3. வீட்டுக்கு —— நாய் படுத்திருக்கிறது.
4. நாற்காலியின் —— பந்து இருக்கிறது.



# 22. எனது வீடு

1. இது எனது வீடு. இது சிறிய வீடு.
2. வீட்டில் நான்கு அறைகள் உள்ளன.
3. வீட்டைச் சுற்றித் தோட்டம் இருக்கிறது.
4. வீட்டின் பக்கத்தில் கிணறு இருக்கிறது.
5. நாங்கள் வீட்டைச் சுத்தமாக வைத்துக் கொள்கிறோம்.
6. எங்கள் தோட்டத்தில் மா, பலா, வாழை, தென்னை முதலிய மரங்கள் உள்ளன.
7. மாலை நேரத்தில் நாங்கள் ஊஞ்சலில் உட்கார்ந்து ஆடுவோம்.

**விடை கூறு :**

1. உன் வீட்டில் எத்தனை அறைகள் உள்ளன?
2. உனது வீட்டுக்குச் சன்னல்கள் உண்டா ?



## 23. எங்கள் ஊர்

1. எங்கள் ஊர் *பொன்னூர்*.
2. எங்கள் ஊரில் சில தெருக்கள் உண்டு.
3. எங்கள் ஊரில் குடிசை வீடுகளே அதிகம்.
4. எங்கள் ஊரில் ஒரு கோவில் இருக்கிறது.
5. எங்கள் கிராமத்தில் தேர் இருக்கிறது.
6. எங்கள் ஊரில் ஒரு பள்ளிக்கூடம் இருக்கிறது.
7. எங்கள் கிராமத்தைச் சுற்றி வயல்கள் உள்ளன.

விடை கூறு :

1. உன் ஊரின் பெயர் என்ன ?
2. உன் ஊரிலுள்ள முக்கிய இடங்கள் எவை ?



## 24. கிராமச் சாவடி

1. எங்கள் ஊரில் கிராமச் சாவடி ஒன்று இருக்கிறது.
2. அங்குக் கிராம அதிகாரிகளைக் காணலாம்.
3. கிராமத் தலைவருக்குக் *கிராம முனிசிப்* என்பது பெயர். அவரை *மணியக்-காரரர்* என்றும் சொல்வது உண்டு.
4. மணியக்காரரர் நிலவரி வசூல் செய்கிறார்.
5. அவர் வழக்குகளையும் தீர்த்து வைக்கிறார்.
6. கணக்கப்பிள்ளை நிலவரிக் கணக்குகளை எழுதுவார்.

## 7. தலையாரியும், வெட்டியானும் மணியக்காரருக்கும், கணக்கப் பிள்ளைக்கும் வேண்டிய உதவிகளைச்செய்கின்றனர்.

விடை எழுது :

1. கிராமத்தில் நிலவரி வசூலிப்பவர் யார் ?
2. உங்கள் கிராமக் கணக்கப்பிள்ளையின் வேலை என்ன ?

இவற்றைத் தெரிந்துகொள் :

| *பெரியது* | | *சிறியது* |
|---|---|---|
| பசு | — | கன்று |
| எருமை | — | கன்று |
| யானை | — | கன்று |
| நாய் | — | குட்டி |
| பூனை | — | குட்டி |
| ஆடு | — | குட்டி |




# 25. மழை

1. வானத்தில் புகை போல ஒரு பொருளைப் பார்க்கிறாய்.
2. அதற்கு மேகம் என்பது பெயர்.
3. மேகத்தில் நீராவி இருக்கிறது.
4. மேகத்தின் மேல் குளிர்ந்த காற்றுப் பட்டால், நீராவி நீர்த்துளிகளாக மாறும்.
5. நீர்த்துளிகள் மழையாகப் பெய்யும்.
6. மழை இல்லாவிட்டால் எந்த ஜெந்துவும் உயிரோடு இருக்க முடியாது.
7. மழையினால் நாம் நீரைப் பெறுகிறோம்.
8. விலங்கு, பறவை, முதலிய உயிர்களும் மழை இல்லாமல் வாழ முடியாது.
9. மழை இல்லாவிட்டால் பயிர்த்தொழில் செய்ய முடியாது.



# 26. பள்ளிக்கூடம்

1. இது எனது பள்ளிக்கூடம்.
2. இதில் எட்டாம் வகுப்புவரை இருக்கிறது.
3. நான் இரண்டாம் வகுப்பில் படிக்கிறேன்.
4. எங்கள் பள்ளிக்கூடத்தில் முந்நூறு பிள்ளைகள் படிக்கிறார்கள்.
5. எங்கள் பள்ளிக்கூடத்தில் பத்து ஆசிரியர்கள் இருக்கிறார்கள்.
6. எங்கள் ஆசிரியர்கள் எல்லாரும் நல்லவர்கள்; நன்றாய்ப் படித்தவர்கள்.
7. ஆசிரியர்கள் எங்களிடம் அன்புடன் பழகுகிறார்கள்.
8. நாங்கள் நன்றாய்ப் படிக்கிறோம்.

விடை எழுது :

1. உன் பள்ளிக்கூடத்தின் பெயர் என்ன ?
2. நீ எந்த வகுப்பில் படிக்கிறாய் ?



# 27. பசுவும் கன்றும்

1. பசு சாதுவான மிருகம்.
2. பசுவை நாம் வீட்டில் வளர்க்கிறோம்.
3. பசு நமக்குப் பால் தருகிறது.
4. பசுவின் பால் உடம்பிற்கு நல்லது.
5. பசு, புல் வைக்கோல் பிண்ணுக்கு தவிடு முதலியவற்றைத் தின்னும்.
6. பசுவை அடிக்கக்கூடாது.
7. பசுவை அடித்தால் அது முட்டும்.
8. பசுவினிடம் அன்பாய் இருக்கவேண்டும்.

விடை எழுது :

1. உனது வீட்டில் பசு இருக்கிறதா ?
2. அதன் நிறம் என்ன ?



# 28. பசுவும் கன்றும்

(பாட்டு)

தோட்டத்தில் மேயுது
வெள்ளைப் பசு;—அங்கே
துள்ளிக் குதிக்குது
கன்றுக் குட்டி. 1

'அம்மா' என்குது
வெள்ளைப் பசு;—உடன்
அண்டையில் ஓடுது
கன்றுக் குட்டி. 2

நாவால் நக்குது
வெள்ளைப் பசு;—பாலை
நன்றாய்க் குடிக்குது
கன்றுக் குட்டி. 3

—கவிமணி, தேசிக விநாயகம் பிள்ளை



## 29. சூரியனும் சந்திரனும்

1. நாம் பூமியில் வசிக்கிறோம்.

2. சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் ஆகாயத்தில் காணப்படுகின்றன.

3. ஆகாயத்திற்கு வானம் என்பது வேறு பெயர்.

4. காலையில் சூரியன் கிழக்குத் திசையில் தோன்றுகிறது.

5. மாலையில் சூரியன் மேற்குத் திசையில் மறைகிறது.

6. இரவில் நட்சத்திரங்களும், சந்திரனும் வானில் தெரிகின்றன.



**7. முழு வட்டமான சந்திரன் தோன்றும் நாளைப் பௌர்ணமி என்கிறோம்.**

**8. சந்திரன் தெரியாத நாளை அமாவாசை என்கிறோம்.**

பயிற்சி :

**விடை எழுது :**

1. ஆகாயத்திற்கு வேறு பெயர் என்ன ?
2. அமாவாசையன்று சந்திரன் தெரியுமா ?
3. சூரியன் மறையும் திசை எது ?
4. இரவில் வானில் தோன்றுபவை யாவை ?

**எதிர்ப் பதங்கள் எழுது :**

வெப்பம் ×
காலை ×
பகல் ×

**கோடுள்ள இடங்களை நிரப்பு:**

1. சந்திரன்———தோன்றுகிறது.
2. சூரியன்———பிரகாசிக்கிறது.
3. நாம்———வசிக்கிறோம்.
4. ஆகாயத்தில் ——— காணப்படுகின்றன.



# 30. குல்லாய் வியாபாரி

(கதைப்படம்)

குறிப்பு

**படம் 1:** குல்லாய் வியாயாரி குல்லாய் மூட்டையோடு போகிறுர்.

**படம் 2:** வெயில் அதிகம். ஆதலால் ஓர் ஆலமரத்தின் கீழ் மூட்டையை வைக்கிறுர்.

**படம் 3:** வியாபாரி தூங்குகிறுர். குரங்குகள் ஒவ்வொன்றும் ஒரு குல்லாயை எடுத்துப் போட்டுக்கொள்கின்றன.

**படம் 4:** வியாபாரி தூங்கி விழிக்கிறுர். மூட்டை காணப்படவில்லே.

**படம் 5:** வியாபாரி கோபத்தால் தம் தலையில் இருந்த குல்லாயைக் கீழே எறிகிருர். எல்லாக் குரங்குகளும் குல்லாய்களை எறிகின்றன.

**படம் 6:** வியாபாரி குல்லாய்களை மூட்டை கட்டிக்கொண்டார்.

## பயிற்சி

1. குறிப்புக்களைப் படித்துக் கதையைச் சொல்லு.

2. கோடுகளைத் தக்க சொற்களால் நிரப்பு.

1. வியாபாரி தோளில்———தூக்கிக்கொண்டு போனுர்.
2. ஓர் ஆல———நிழலில் தங்கினுர்.
3. அந்த மரத்தில்———இருந்தன.
4. வியாபாரி———விட்டார்.
5. குரங்குகள்———இரங்கி வந்தன.
6. குரங்குகள்———ஐ அவிழ்த்தன.
7. ஒவ்வொரு குரங்கும் ஒரு———போட்டுக் கொண்டது.
8. வியாபாரி———பார்த்தார்.
9. குரங்குகள் தலைகளில்———இருந்தன.
10. வியாபாரி கோபத்தால் தமது———கீழே எறிந்தார்.
11. ———குல்லாய்களை எறிந்தன.
12. வியாபாரி———எடுத்துக் கொண்டார்.



# 31. கைத்தொழில்

(பாட்டு)

கைத்தொழில் ஒன்றைக் கற்றுக்கொள்.
கவலை உனக்கில்லை ஒத்துக்கொள்.
எத்தொழில் எதுவும் தெரியாமல்
இருந்திடல் உனக்கே சரியாமோ? 1

உழவும் தொழிலும் இல்லாமல்
உலகில் ஒன்றும் செல்லாது.
விழவும் கலையும் விருந்துகளும்
வேறுள இன்பமும் இருந்திடுமோ? 2

நெசவுக் காரர்கள் நெய்யாமல்
நிலத்தவர் உடைக்கென் செய்வார்கள்?
குசவர் செய்திடும் பாண்டமன்றோ
குடித்தனம் நடந்திட வேண்டுமென்றும்? 3

—நாமக்கல் கவிஞர்




# 32. நாணயங்கள்

1. நீ மிட்டாய் வாங்குகிறாய்.மிட்டாய்க்காரனுக்குக் காசு தருகிறாய்.
2. காசுக்கு வேறு பெயர் நாணயம் என்பது.
3. நாணயங்களின் படங்களை மேலே பார்.
4. நாணயங்களுள் மிகப் பெரியது ஒரு ரூபாய்.
5. பதினாறு அணாக்கள் கொண்டது ஒரு ரூபாய்.
6. எட்டு அணாக்கள் கொண்டது அரை ரூபாய்.
7. நான்கு அணாக்கள் கொண்டது கால் ரூபாய்.
8. நான்கு காலணாக்கள் கொண்டது ஓர் அணா.

விடை எழுது :

1. ஒரு ரூபாய்க்கு எத்தனை அரை ரூபாய்கள் ?
2. எத்தனை அணாக்கள் கொண்டது ஒரு ரூபாய் ?



# 33. ஆமையும் முயலும்

1. ஒரு காட்டில் மிருகங்கள் கூடின. அவை வேடிக்கையாய்ப் பேசின. முயல் ஆமையை ஓட்டப் பந்தயத்துக்கு அழைத்தது. ஆமை ஒப்புக்கொண்டது.

2. பந்தயம் தொடங்க வேண்டிய இடத்தில் யானை நின்றது. பந்தயம் முடிய

வேண்டிய இடத்தில் மான் நின்றது. பந்தயம் தொடங்கியது.

3. முயல் வெகு வேகமாய் ஓடிற்று. அது சேர வேண்டிய இடம் சிறிது தூரத்தில் இருந்தது. முயல் திரும்பிப் பார்த்தது. ஆமை வெகு தூரத்தில் இருந்தது.

4. ஆமை வருவதற்கு நேரம் பிடிக்கும். ஆகையால் முயல் சற்று இளைப்பாற நினைத்தது. அது ஒரு மரத்தின் நிழலில் படுத்தது. அப்படியே தூங்கிவிட்டது.

5. ஆமை எங்கும் நிற்கவே இல்லை; நேரே சென்றது. பந்தயம் முடிய வேண்டிய இடத்தை அடைந்தது. விடாமல் ஓடிய ஆமை வென்றது. முயல் தோற்றது. ஏன் தோற்றது ?

விடை எழுது :

1. காட்டில் கூடினவை எவை ?
2. மிருகங்களுக்கு வழங்கும் வேறு பெயர் என்ன?
3. ஆமை மெல்ல நடக்குமா ? வேகமாக நடக்குமா ?
4. முயல் ஏன் தோற்றது ?



# 34. தோட்டம்

1. இது ஒரு தோட்டத்தின் படம். மல்லிகை, முல்லை, சாமந்தி முதலிய பூஞ் செடிகள் உள்ளது பூந்தோட்டம் எனப்படும். வெண்டை, கத்தரி, கொத்தவரை முதலிய காய்கறிச் செடிகள் உள்ளது காய்கறித் தோட்டம் எனப்படும். மா, பலா, கிச்சிலி முதலிய பழ மரங்கள் உள்ளது பழத் தோட்டம் எனப்படும்.

2. தோட்டத்தில் உள்ள செடிகளுக்கு நீர் பாய்ச்சக் கிணறு இருக்கிறது. பட்டணங்களில் சிங்காரத் தோட்டங்கள் இருக்கும். மக்கள் அங்கு மாலை நேரத்தைக் கழிப்பார்கள்.

# 35. நெல் வயல்



1. நெல், கரும்பு முதலியவை பயிர் செய்யப்படும் இடத்-துக்கு *வயல்* என்பது பெயர். *கழனி* என்பது வய-லுக்கு வழங்கும் வேறு பெயர். வயலைச் சுற்றி வரப்புக்கள் இருப்பதால் வயலில் நீர் தேங்கி நிற்கும்.

2. உழவர் வயலை ஏரால் உழுவர். நீர் இல்லாத வயலை உழுதால், வயல் *புழுதி* ஆகும். அதில் நெல் முதலிய தானியங்களை விதைப்பர். நீர் உள்ள வயலை உழுதால்,வயல் *சேறு* ஆகும். சேற்றில் நாற்றை நடுவர். நாற்று விடும் இடத்துக்கு *நாற்றங்கால்* என்பது பெயர்.

3. நெற்பயிருக்கு வயலில் நீர் தேங்கி நிற்க வேண்டும். பயிரோடுகூட முளைத்து

வளரும் புல்பூண்டுகளைக் களைய வேண்டும். இதற்குக் *களை எடுத்தல்* என்பது பெயர்.

4. நெற்பயிர் வளர்ந்து கதிர் விடும். கதிர் முற்றிப் பழுக்கும். பழுத்த கதிரைத் தாளோடு அறுப்பர். இதற்கு *அறுவடை* என்பது பெயர்.

5. அறுத்த தாளை அரி அரியாக வைப்பார்கள். பிறகு அரிகளைச் சேர்த்துக் கட்டுக்களாகக் கட்டுவார்கள். கட்டுகளைக் களத்திற் சேர்ப்பார்கள். நெல் அடிக்கும் இடத்திற்கு *நெற்களம்* என்பது பெயர்.

6. நெற் களத்தில் கட்டுகளை அவிழ்த்து, அரிஅரியாக எடுத்து, நிலத்தின் மேல் அடிப்பார்கள். அப்போது தாளில் இருந்து நெல் பிரிந்து விழும். தாளைப் போராகப் போடுவார்கள்.

7. நெல்லை முறத்தில் வாரித் தூற்றுவார்கள். அப்போது நெல்லோடு கலந்துள்ள பதர் காற்றால் பிரிக்கப்படும். பதர் என்பது அரிசி இல்லாத நெல்.

8. தூற்றி முடிந்த பின் நெல்லைக் கோணிகளில் இட்டு மூட்டைகளாகக்கட்டு-

வார்கள். அம்முட்டைகளை வண்டியில் ஏற்றி வீட்டுக்குக் கொண்டு போவார்கள். நெல்லில் இருந்து கிடைக்கும் அரிசி நமது முக்கிய உணவுப் பொருள். நெல் நீக்கப் பட்ட தாளுக்கு *வைக்கோல்* என்பது பெயர். அது மாடுகள் தின்னப் பயன்படு-கிறது.

"காற்றுள்ள போதே தூற்றிக்கொள்"

பயிற்சி

1. கோடுள்ள இடங்களை நிரப்பு:

அ. நெல் பயிராகும்———வயல் என்பது பெயர்.

ஆ. உழவர் வயலை———உழுவர்.

இ. நாற்று விடும் இடத்துக்கு———என்பது பெயர்.

ஈ. அரிசி இல்லாத நெல்லுக்குப்——என்பது பெயர்.

2. விடை சொல்.

அ. பயிர்த் தொழில் சம்பந்தமான பழமொழி உனக்குத் தெரிந்தால் இரண்டு பழமொழிகள் சொல்.

ஆ. பயிர்த்தொழில் நடப்பதை நீ நேரில் பார்.



# 36. எஸ்கிமோக்கள்

1. நாம் வசிக்கும் பூமி உருண்டை வடிவம் உடையது. இதன் வட முனையிலும், தென் முனையிலும் குளிர் மிகக் கடுமையாக இருக்கும். ஏன் தெரியுமா ? அங்கு எப்போதும் பனி பெய்து கொண்டே இருக்கும். தரையைப் பனிக்கட்டி மூடியிருக்கும். அம்மாதிரி இடங்களிலும் மக்கள் வாழ்கிறார்கள். அவர்களுள் எஸ்கிமோக்கள் ஓர் இனத்தவர்.

2. எஸ்கிமோக்கள் வாழும் நாடு நமது நாட்டுக்கு வெகு தூரத்தில் இருக்கிறது. அந்த நாட்டில் மரங்கள் வளரா ; செடி கொடிகளும் வளரா. குட்டையான புதர்களும், சில பாசிகளும் வளரும்.

3. எஸ்கிமோக்கள் பனிக்கட்டி-களால் வீடுகட்டிக் கொள்கிறார்கள். ஏன் தெரியுமா? வீடு கட்ட மண்ணும், மரமும் வேண்டும். இவை அங்குக் கிடைப்பதே இல்லை. பனிக்கட்டிகள் கிடைக்கின்றன. ஆகையால், பனிக்கட்டிகளைக் கொண்டு வீடுகளை அமைக்கிறார்கள்.



4. எஸ்கிமோ நாட்டில் *வெண்கரடி*-*களும்* *நாய்*களும் உண்டு. அந்த நாய்-களின் உடலில் மயிர் அடர்ந்து இருக்கும். அங்கு *ஸீல்*, *வால்ரஸ்* என்னும் விலங்கு-கள் உண்டு. அவை நீரில் வாழும்.

5. எஸ்கிமோக்கள் நாய்களைப்பழக்கி, வண்டி இழுக்கச் செய்கிறார்கள். அந்த வண்டிகளுக்கு *ஸ்லெட்ஜ்* என்பது பெயர். ஸ்லெட்ஜுக்குச் சக்கரங்கள் இரா.

6. எஸ்கிமோக்கள் வெண்கரடி, ஸீல், வால்ரஸ் ஆகிய ஜெந்துக்களை வேட்டை

உயர்ந்த மரத்தின் மேல் ஏறிற்று. அது உயரத்தில் இருந்த ஒரு கிளையைப் பல-மாகப் பிடித்துக் கொண்டு தொங்கிற்று.

3. பிறகு ஒரு குரங்கு அதன் இடுப்-பைப் பிடித்துக் கொண்டது. மற்றொரு குரங்கு அதன் இடுப்பைப் பிடித்துக் கொண்டது. அப்படிப் பிடித்துக்கொண்ட பல குரங்குகள் ஒரு சங்கிலித் தொடர் போலக் காணப்பட்டன.

4. பிறகு அவை ஊஞ்சல் ஆடுவது போல ஆடின. அவை வேகமாய் ஆடிய போது, ஊஞ்சல் ஆற்றின் இக்கரைக்கும் அக்கரைக்குமாகப் போய் வந்தது. கடைசி-யில் தொங்கிய குரங்கு ஆற்றின் அக்கரை-யில் இருந்த ஒரு மரத்தின் கிளையைப் பிடித் துக் கொண்டது.

5. இரண்டு மரங்களுக்கும் இடையில் ஒரு குரங்குப் பாலம் ஏற்பட்டது. மற்றக் குரங்குகள் அப்பாலத்தின் மூலம் ம்று கரையை அடைந்தன. பிறகு இக்கரையில் இருந்த மரக்கிளையைப் பிடித்துக்கொண்டு இருந்த குரங்கு கையை விட்டது. உடனே ஊஞ்சல் அக்கரையை அடைந்தது.

**6. பிறகு ஒவ்வொரு குரங்கும் தன் பிடியை விட்டுக் கீழே குதித்தது. இவ்வாறு தங்கள் யோசனையாலும், ஒற்றுமையாலும் குரங்குகள் அரிய காரியத்தைச் செய்து முடித்தன.**

## பயிற்சி

1. **கோடுகளைத் தக்க சொற்களால் நிரப்புக:**

அ. ஒரு———பல குரங்குகள் இருந்தன.

ஆ. ஆற்றில்————அதிகமாக இருந்தது.

இ. பிறகு அவை———ஆடுவது———ஆடின.

ஈ. இரண்டு மரங்களுக்கு ஒரு————ஏற்பட்டது.

2. **எதிர்ப்பதங்கள் சொல்:**

பல ×

அந்த ×

கடைசி ×

இக்கரை ×



# 38. சந்தை

1. எங்கள் ஊர் சிற்றூர். பேருக்கு ஏற்றபடி அது சிறிய ஊர். அதில் ஐம்பது வீடுகளே உள்ளன. எங்கள் ஊரில் பெரிய கடைகள் இல்லை. ஆகையால் நாங்கள் சந்தைக்குப் போவோம். அங்கு எங்களுக்கு வேண்டிய பொருள்களை வாங்கி வருவோம்.

2. சந்தை என்பது பல வகையான பொருள்கள் விற்கும் இடம். எங்கள் ஊருக்கு இரண்டு மைல் தொலைவில் ஒரு புளியந்தோப்பு இருக்கிறது. அங்கு ஒவ்வொரு சனிக்கிழமையும் வியாபாரிகள் வரு வார்கள். அவர்கள் வண்டிகளில் பொருள் களைக் கொண்டு வருவார்கள்.

3. சிலர் அரிசி கொண்டு வருவர். சிலர் ஆடைகள் கொண்டு வருவர். சிலர் தின்பண்டங்கள் கொண்டு வருவர். சிலர் மிளகாய், தனியா, புளி, மிளகு, பூண்டு முதலிய மளிகைப் பொருள்கள் கொண்டு வருவர். அவர்கள் தங்கள் சரக்குகளைத் தோப்பில் உள்ள சிறு கொட்டகைகளில் வைத்து விற்பர்.

4. நாங்கள் சந்தைக்குப் போவோம். எங்கள் வீடுகளில் அதிகமாக உள்ள பொருள்களைக் கொண்டு போவோம். அவற்றை விற்போம். அந்தப் பணத்தைக் கொண்டு எங்களுக்கு வேண்டிய பொருள்களை வாங்கிக்கொள்வோம். இந்தச் சந்தை இல்லாவிட்டால் எங்களுக்கு மிகவும் கஷ்டமாக இருக்கும்.

பயிற்சி

கோடுகளைத் தகுந்த சொற்களால் நிரப்புக:

1. பேருக்கு ஏற்றபடி —— —— ஊர்:
2. சந்தை என்பது —— —— பொருள்கள் விற்கும் இடம்.
3. வியாபாரிகள் ——— பொருள்களைக்——— வருவார்கள்.



# மைனுவும் முயலும்—I

(உரையாடல்)

*மைனு* :—ஏ, முயலே, எனது வீட்டில் நீ வந்து இருப்பது சரியா ?

*முயல்* :—இது என்ன கேள்வி? இது ஒரு மரப் பொந்து. இங்கு நான் வந்து தங்கினேன். இதில் தவறு என்ன ?

*மைனு* :—பல நாட்களாக நான் இதில் வாழ்ந்து வருகிறேன். நீ திடீரென்று இதில் வந்து புகுந்தது தவறு இல்லையா ?

*முயல்* :—இதில் தவறு ஏதும் இல்லை. நிழல் உள்ள இடம் எல்லார்க்கும் பொது-தானே. வேண்டுமானால் இந்த வழக்கை யாரிடமாவது சொல்லி நியாயம் கேட்கலாம்.

மைனு:—சரி, அது எனக்கும் சம்மதந்தான். யாரிடம் போகலாம்?

முயல்:—யமுனை ஆற்றங்கரையில் உள்ள கூர்ம்பல்லன் என்னும் தவசியாரிடம் போகலாம்.

மைனு:—என்ன! ஒரு பூனையிடமா போவது? அதற்கு நான் ஒப்பமாட்-டேன்.

முயல்:—நாம் பூனையின் அருகில் செல்ல வேண்டா. தொலைவில் இருந்தே நமது வழக்கைக் கூறலாமே.

மைனு:—சரி, போவோம்.



மைனுவும் முயலும்—II

(உரையாடல்)

முயல்:—ஐயா, கூர்ம்பல்லரே, வணக்கம்.

மைனு:—ஐயா, தவசியாரே நமஸ்காரம்.

*பூனை* :—(கண்ணைத்திறந்து) யார் நீங்கள்? ஏன் இங்கு வந்து என் தவத்தைக் கெடுத்தீர்கள். ?

*முயல்* :—ஐயா, பெரியவரே, மன்னிக்க வேண்டும்! உம்மிடம் எங்கள் வழக்கைக் கூற வந்தோம்.

*பூனை* :—வழக்கா? உரத்துக் கூறும்.

*மைனா* :—ஆம், வழக்குதான்.

*பூனை* :—குழந்தைகளே, நான் மிகவும் வயதானவன். காது சரியாகக் கேட்பது இல்லை. நீங்கள் சொல்வதை அருகில் வந்து சொல்லுங்கள்.

*முயல்* :—அருகில் வந்தால், நீர் எங்களைக் கொல்வீர். நாங்கள் வர மாட்டோம்.

*பூனை* :—பயப்பட வேண்டா. நான் தவசி. தவம் செய்யத் தொடங்கியது முதல் நான் மாமிசம் தின்பதை விட்டு விட்டேன். ஆதலால் என் பேச்சை நம்புங்கள். அருகில் வந்து உங்கள் வழக்கைக் கூறுங்கள்.

(மைனாவும் முயலும் அருகில் சென்றன. பூனை திடீரெனப் பாய்ந்து அவற்றைக் கொன்று தின்றது.)

---

# செய்யுட் பாடங்கள்

## 1. ஆத்திசூடி

1. அறம் செய விரும்பு.
2. ஆறுவது சினம்.
3. இயல்வது கறவேல்.
4. ஈவது விலக்கேல்.
5. உடையது விளம்பேல்.
6. ஊக்கமது கைவிடேல்.
7. எண் எழுத்து இகழேல்.
8. ஏற்பது இகழ்ச்சி.
9. ஐயம் இட்டு உண்.
10. ஒப்புர ஒழுகு.
11. ஓதுவது ஒழியேல்.
12. சனிநீர் ஆடு.
13. ஞயம்பட உரை.
14. தந்தை தாய் பேண்.
15. நன்றி மறவேல்.
16. தெய்வம் இகழேல்.

## 2. உலகநீதி

1. ஓதாமல் ஒருநாளும்
இருக்க வேண்டா.

2. ஒருவரையும் பொல்லாங்கு
சொல்ல வேண்டா.

3. மாதாவை ஒரு நாளும்
மறக்க வேண்டா.

4. வஞ்சனைகள் செய்வாரோடு
இணங்க வேண்டா.

5. நெஞ்சாரப் பொய்தன்னைச்
சொல்ல வேண்டா.

6. நஞ்சுடனே ஒருநாளும்
பழக வேண்டா.

7. அஞ்சாமல் தனிவழியே
போக வேண்டா.

8. அடுத்தவரை ஒருநாளும்
கெடுக்க வேண்டா.

9. தனம்தேடி உண்ணுமல்
புதைக்க வேண்டா.

10. தெய்வத்தை ஒருநாளும்
மறக்க வேண்டா.

---

# பொன் மொழி வாசகம்

## (மூன்றும் புத்தகம்)

ஆசிரியர்கள் :
**புலவர் பு. செல்வராசனூர்,**
தலைமைத் தமிழாசிரியர்,
சி. அப்துல் ஹகிம் இந்து முஸ்லிம் உயர்நிலைப்பள்ளி,
சென்னை.

**ஆபிரகாம் அருளப்பன்,** B. A.,
தமிழ்த்துறைத் தலைவர்,
அர்ச். சேவியர் கல்லூரி, பாளையங்கோட்டை.

பதிப்பாசிரியர் :
**சு. சே. உமாபதி,** M. A., L. T., (Dip. in. Geog.)
தலைமையாசிரியர்
சி. அப்துல் ஹகிம் இந்து முஸ்லிம் உயர்நிலைப்பள்ளி,
சென்னை.

சித்ரா பப்ளிஷிங் ஹௌஸ்
ஸ்ரீ வைகுண்டம்

பதிப்புரிமை] 1954 [விலை அணு 8

# முன்னுரை

'பொன் மொழி வாசகம்' என்னும் பெயரோடு வெளிப் போதரும் தமிழ் வாசக வரிசையில் இது மூன்றாம் புத்தக மாகும். இது 1941–ஆம் ஆண்டில் அரசியலார் வெளியிட்ட பாடத் திட்டத்தைத் தழுவி எழுதப் பெற்றுளது. இதன் கண் 500 புதிய சொற்கள் இடம் பெற்றுள்ளன. மொழிப் போதனையில் முக்கியமாகக் கருதப்படுவது மொழிப் பயிற்சியேயாகும். இப்பயிற்சிக்குப் போதிய வாய்ப்பளிக் கும் முறையில் இதன்கண் பல்வேறு வகையான ஓவியங் கள் தரப்பட்டுள்ளன. ஆசிரியர்கள் அவற்றைப் பயன் படுத்திக் கொள்வது இன்றியமையாததாகும்.

ஒவ்வொரு பாடத்தின் இறுதியிலும் மொழியறிவு ஆக்கமுறும் வகையில் பயிற்சிகள் தரப்பட்டுள்ளன. இப் பயிற்சிகள் அனைத்தையும் குழந்தைகள் செய்யுமாறு தூண்ட வேண்டுவது ஆசிரியர் கடமையாகும். அன்றியும் வகுப்புக்கு ஏற்றவையாகச் சில இலக்கண பாடங்களும் சேர்க்கப்பட்டுள்ளன.

சிறுவர் சிறுமியர்க்கு இன்பமூட்டத்தக்க இனிய எளிய பாடல்கள் இதன்கண் சேர்க்கப்பட்டுள்ளன. இப் பாட்டுக்களைக் குழந்தைகள் மனப்பாடம் செய்வது நல மாகும். இதன்கண் சேர்க்கப்பெற்றுள்ள பாடங்கள் சிறு வர் சிறுமியரின் தமிழறிவையும், பொது அறிவையும் வளரச்செய்யும் என்பது உறுதி. அறிஞர்கள் தமிழ்ச்சிறுவர் சிறுமியர்க்கு இந்நூல் பயனளிக்குமாறு செய்வார்கள் என முற்றிலும் நம்புகிறேன்.

சென்னை
7–11–54.

ஆசிரியர்.

# பொருளடக்கம்

# 1. தமிழ் நாடும் தமிழ் மொழியும்

(பாட்டு)

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற-எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா !
அமிழ்தில் இனியதடி பாப்பா !—நம்
ஆன்றோர்கள் தேசமடி பாப்பா! 1

சொல்லில் உயர்வுதமிழ்ச் சொல்லே,–அதைத்
தொழுது படித்திடடி பாப்பா !
செல்வம் நிறைந்த இந்துஸ்தானம்–அதைத்
தினமும் புகழ்ந்திடடி பாப்பா ! 2

சாதிகள் இல்லையடி பாப்பா !–குலத்
தாழ்ச்சி உயர்ச்சி சொல்லல் பாவம் ;
நீதி, உயர்ந்தமதி, கல்வி,–அன்பு
நிறைய உடையவர்கள் மேலோர். 3

உயிர்கள் இடத்தில்அன்பு வேணும் ;–தெய்வம்
உண்மை யென்று தான்அறிதல் வேணும் ;
வயிரம் உடையநெஞ்சு வேணும் ;–இது
வாழும் முறைமையடி பாப்பா ! 4

—சி. சுப்பிரமணிய பாரதியார்



# 2. மயில்

1. கடவுள் உலகத்தைப் படைத்தார். உலகத்தில் உள்ள எல்லாப் பொருள்களையும் படைத்தவர் அவரே. அவர் படைத்தவற்றை நாம் நன்ருய்க் கவனித்துப் பார்க்க வேண்டும். இளமைப் பருவம் முதற்கொண்டே எதையும் ஊன்றிப் பார்க்கப் பழக வேண்டும். ஒவ்வொரு பொருளையும் ஊன்றிப் பார்த்தால், பல விஷயங்கள் நமக்குப் புலப்படும்.

2. பறவைகளில் பல வகை உண்டு. அவற்றுள் மயில் ஒன்று. மயில் காட்டுப் பறவை. மயில் மிகவும் அழகான பறவை. அது, தானியங்களையும் பூச்சி, புழுக்களையும் தின்னும். மயிலின் இறகு பார்ப்பதற்கு மிக அழகாய் இருக்கும். அந்த இறகுகளில் நீலம், மஞ்சள், பச்சை என்னும் நிறங்களைக் காணலாம்.

3. மயிலின் உடல் பெரியது ; தலை சிறியது. மயிலுக்குக் கழுத்து நீண்டிருக்கும். அதன் கால்களும் நீளமானவை. அதன் இறக்கைகள் சிறியவை. ஆதலால் மயில் வானத்தில் பறப்பதில்லை. மயில் முட்டை இட்டுக் குஞ்சு பொரிக்கும். ஆண் மயிலுக்குத் தலையின் உச்சியில் கொண்டை உண்டு. பெண் மயிலுக்குச்

கொண்டை இராது. ஆண் மயிலின் வால் இறகு நீளமாக இருக்கும். அதற்குத் தோகை என்பது பெயர். மேகத்தைக் கண்டால் மயிலுக்கு மகிழ்ச்சி உண்டாகும். அப்போது அது தோகையை விரித்து ஆடும்.

4. விரிந்த தோகை பார்ப்பதற்கு மிகவும் அழகாக இருக்கும். தோகை இறகின் முனையில் அழகான வட்டம் காணப்படும். அதனைக் கண் என்று கூறுவார்கள். மயிலின் தோகையால் விசிறி செய்யலாம். மயில் இறகு மருந்துக்கும் பயன்படுகிறது. மயிலைக் கோவில்களிலும், வீடுகளிலும் வளர்ப்பார்கள். மயில் அழகிய பறவையாக இருந்தாலும், அதன் குரல் இனிமையாக இராது. மயில் கத்துவது அகவுதல் எனப்படும்.

### அரும்பதங்கள்

| | | | |
|---|---|---|---|
| *படைத்தார்* | *பருவம்* | *இறகு* | *தோகை* |
| *இளமை* | *ஊன்றிப்பார்* | *உச்சி* | *மகிழ்ச்சி* |

### பயிற்சி

1. *விடை எழுது :*

   அ. *மயில் எங்கு வசிக்கும் ?*
   ஆ. *ஆண் மயிலுக்கும் பெண் மயிலுக்கும் உள்ள வேறுபாடுகள் எவை ?*
   இ. *மயிலின் உடலில் காணப்படும் நிறங்கள் எவை ?*
   ஈ. *மயில் எப்போது ஆடும் ?*

2. *எதிர்ப்பதங்கள் எழுது :*

   *இளமை* ×
   *பலவகை* ×
   *நீண்ட* ×

3. *பொருந்தி எழுது :*

| | |
|---|---|
| *கடவுள்* | *புழு பூச்சிகளைத் தின்னும்.* |
| *பறவைகளில்* | *தோகை விரித்து ஆடும்.* |
| *மயில்* | *உலகத்தைப் படைத்தார்.* |
| *ஆண்மயில்* | *பல வகை உண்டு.* |



## 3. வாழை

1. வாழை மரத்தை நீ பார்த்திருக்கிருயா ? வாழை மரம் உஷ்ண தேசங்களில் செழித்து வளரும். நமது நாட்டுக் கிராமங்களில் வாழைத் தோட்டங்களைக் காணலாம். வண்டல் படிந்த நிலத்திலும், மண் கலந்த களிப்பு நிலத்திலும் வாழை நன்ருகப் பயிராகும். அதற்கு நிரம்பத் தண்ணீர் வேண்டும்.

2. வாழையில் பல வகை உண்டு. பூவன், பங்-காளா, மொந்தன், பேயன், மலைவாழை என்பன அவற்-றுள் சிலவாம். வாழைக்குக் கிளை இல்லை; மட்டை-களே உண்டு. வாழையின் அடிப்பாகம் பட்டைகளால் மூடப்பட்டு இருக்கும். பட்டைகளை உரித்தால் உள்ளே தண்டு இருக்கும். வாழை இலை அகலமாகவும், நீள-மாகவும் இருக்கும்.

3. வாழைக்கு விதை இல்லை. ஆனல், அதன் கிழங்கில் இருந்து கன்றுகள் தோன்றும். அக்கன்று-களைப் பெயர்த்து எடுத்துப் பள்ளம் தோண்டிப் புதைப்-பர். பிறகு அவற்றின் மேல் பாகத்தை வெட்டிவிடுவர். சில நாட்கள் கழித்துக் குருத்து வரும். அது இலையாக

விரியும். இலைகள் பல தோன்றும். கடைசியில் ஒரு சிறிய இலை தோன்றும். அதற்குக் 'கண்ணாடி இலை' என்பது பெயர். அதன் பின் பூ தோன்றும். பூ விரிந்தால், ஒவ்வோர் இதழின் அடியிலும் சீப்புச் சீப்பாய்ப் பிஞ்சுகள் இருக்கும்; பிஞ்சு முற்றிக் காயாகும். காய் முற்றிப் பழமாகும். வாழை மரம் ஒரே ஒரு குலைதான் விடும். குலைக்குத் தாறு என்பது வேறு பெயர். குலைகளிலுள்ள காய் முற்றிப் பழுத்ததும் வாழை அழிந்துவிடும்.

4. வாழையின் எல்லாப் பாகங்களும் நமக்குப் பயன்படுகின்றன. வாழைப்பட்டையை இணைத்தால் உண்கலமாக உதவும். வாழை நார் பூ தொடுக்க உதவும். தண்டு, காய், பூ ஆகியவற்றைச் சமைத்துச் சாப்பிடவும், இலையை உண்கலமாகவும் உபயோகிக்கிறோம். பழத்தைச் சாப்பிடுகிறோம். கலியாண காலங்களில் வாழையைக் கலியாணப்பந்தலில் கட்டுகிறோம். வாழை எக்காலத்திலும் பயிராகும். ஆகையால் வாழை இலை, தண்டு, காய், பூ, பழம் என்பன எப்போதும் கிடைக்கும். மா, பலா, வாழை முக்கனிகள் எனப்படும்.

## அரும்பதங்கள்

| | | | |
|---|---|---|---|
| *உஷ்ண தேசம்* | *செழித்து* | *நிரம்ப* | *மட்டை* |
| *விதை* | *இதழ்* | *சீப்பு* | *தாறு* |
| *அழிந்து* | *பயன்* | *பூ தொடுக்க* | *உண்கலம்* |

## பயிற்சி

1. *விடை எழுது :*

   *அ. வாழை எங்குப் பயிராகும்?*

   *ஆ. வாழை மரத்துக்கும் மற்ற மரங்களுக்கும் உள்ள வேறுபாடு என்ன?*

   *இ. விதை இல்லாமையால், வாழை எப்படி விருத்தி செய்யப்படுகிறது?*

   *ஈ. வாழையின் உபயோகங்கள் யாவை?*

2. எதிர்ப் பதங்கள் எழுது :

பார்த்திருக்கிறேன் ×
நிரம்ப ×
இல்லை ×
விரியும் ×
கடைசி ×

3. கீழே உள்ள சொற்களை அமைத்து வாக்கியங்கள் எழுது:

செழித்து—கிராமங்கள்—வண்டல்மண்—களிமண்—குருத்து—பட்டை—முற்றி—அழியும்.,

**இலக்கணம் :** பெயர்ச் சோல்

ஒரு பொருள் இருந்தால், அதற்கு ஒரு பெயர் இருக்க வேண்டும். அப்பெயரை இலக்கணத்தில் பெயர்ச் சொல் என்கிறோம்.

ஒரு பொருளின் பெயரே பெயர்ச் சொல்.

இவற்றைப்படி:

| ஒன்று | பல |
|---|---|
| பழம் | பழங்கள் |
| வீடு | வீடுகள் |
| வண்டி | வண்டிகள் |
| பலகை | பலகைகள் |
| நாய் | நாய்கள் |
| பறவை | பறவைகள் |

ஒரு பொருளைக் குறிக்கும் சொல்லின் எண் ஒருமை எண். ஒன்றுக்கு மேற்பட்ட பொருள்களைக் குறிக்கும் சொல்லின் எண் பன்மை எண். இது இலக்கண வழக்கம்.

ஒரு பொருளைக் குறிப்பது, இரண்டு முதலாகப் பல பொருள்களைக் குறிப்பது என்று எண் இருவகைப்படும்.



# 4. கலைமகள் விழா

1. நம் இந்திய நாட்டில் இந்துக்கள் கல்வியையும் செல்வத்தையும் தெய்வமாகப் போற்றி வணங்குகிறார்கள். கல்விக்குத் தெய்வம் **கலைமகள்** என்பர். செல்வத்திற்குத் தெய்வம் **திருமகள்** என்பர். கலைமகளை **நாமகள்** என்றும், **சரசுவதி** என்றும் கூறுவது உண்டு. திருமகளை **இலக்குமி** என்று அழைப்பர்.

2. இந்துக்கள் கலைமகளைத் தினந்தோறும் வழிபடுகிறார்கள். மேலும், வருடந்தோறும் விழாக் கொண்டாடியும் வழிபடுகின்றார்கள். கலைமகள் விழா புரட்டாசி மாதத்தில் வரும். அன்று கலைமகள் படத்திற்கோ, உருவச் சிலைக்கோ பூமாலைகள் சூட்டி, அலங்காரம் செய்வார்கள். புத்தகங்களை எல்லாம் எடுத்து அழகாக அடுக்கிப் படத்தின் முன் வைப்பார்கள். அவைகளுக்குப் பூமாலை சூட்டிச் சந்தனம் தெளித்துக் குங்குமம் இடுவார்கள். புத்தகங்களுடன் கலைமகள் படமோ, உருவமோ வைத்திருக்கும் இடத்தில் மாவிலைத் தோரணங்கள் கட்டியும், வாழைக் கன்றுகள் நாட்டியும் அலங்கரிப்பார்கள்.

3. அங்குக் கலைமகள் எதிரில் தேங்காய், பழம், வெற்றிலை பாக்கு, அவல் கடலை முதலியன வைத்துப் படைப்பார்கள். சிலர் வடை, சுண்டல், பாயசம் முதலியனவும் வைப்பர். பள்ளியிற் படிக்கும் சிறுவர், சிறுமியர் தாங்கள் கல்வியில் சிறப்பு அடைய வேண்டும் என்று கலைமகளை வேண்டி வணங்குவார்கள். இவ்விழாவைச் சரசுவதி பூஜை என்பது வழக்கம்.

4. தொழிலாளர்கள் தங்கள் கருவிகளைக் கழுவி, துடைத்து, எண்ணெய் தடவி வரிசையாக வைப்பார்கள். அவற்றைப் பூமாலைகளால் அலங்கரிப்பார்கள்; தூபம் தீபம் காட்டி வழிபடுவார்கள். இவ்வழிபாட்டை ஆயுத பூஜை என்பது வழக்கம். இதனால் கைத்தொழிலும் ஒருவகைக் கல்வியே என்பதை நாம் அறிகிறோம் அல்லவா ?

5. கலைமகளை வழிபட்டுச் சிறப்பு அடையாதவர் இலர். முற்காலத் தமிழ்ப்புலவர் அனைவரும் கலைமகளை வழிபட்டவரே. கல்வியில் பெரியவரான கம்பர் கலைமகளைச் ' சரசுவதி அந்தாதி ' என்னும் நூல் இயற்றி வழிபட்டார். ஒட்டக்கூத்தர் என்பவர் கலைமகளுக்குக் கோவில் கட்டி வணங்கி வந்தார். குமரகுருபரர் என்பவர் 'சகல கலாவல்லி மாலை' என்னும் நூலைப் பாடிக் கலைமகளைத் துதித்தார்.

### அரும்பதங்கள்

| | | | |
|---|---|---|---|
| கல்வி | சரசுவதி | உருவச்சிலை | படைப்பார்கள் |
| செல்வம் | திருமகள் | மாலைசூட்டி | வணங்குவர் |
| கலைமகள் | இலக்குமி | தோரணங்கள் | துதித்தார் |
| நாமகள் | வழிபடு | அலங்கரிப்பர் | இயற்றி |

### பயிற்சி

1. விடை எழுது :

அ. கல்விக்குத் தெய்வம் யார் ?

ஆ. செல்வத்துக்குத் தெய்வம் யார் ?

இ. கலைமகள் விழா எந்த மாதத்தில் கொண்டாடப் படுகிறது?

ஈ. அவ்விழா எப்படிக் கொண்டாடப்படுகிறது?

உ. கம்பர் யார்? அவர் இயற்றிய நூல் யாது?

ஊ. சகலகலாவல்லி மாலையை இயற்றியவர் யார்?

2. எதிர்ப் பதங்கள் எழுது :

வரும் ×
செய்வார் ×
சிறப்பு ×
சுத்தம் ×

3. கீழ் உள்ள சொற்களை அமைத்து வாக்கியங்கள் எழுது :

கூறுவர்-அழைப்பர்-அலங்காரம்-சிறப்பு-வணங்கு - வழி படு-புலவர்-இயற்றினர்-நூல்.

### வினைச்சொல்

வினை என்றால் வேலை அல்லது தொழில். ஒரு பொருளின் தொழிலைக் குறிக்கும் சொல் வினைச்சொல் எனப்படும்.

இவற்றைப்படி:

1, மாடு புல் மேய்கிறது.
2. கந்தன் படிக்கிறான்.
3. காக்கை பறக்கிறது.

மாடு என்ன செய்கிறது? மேய்கிறது. மேய்வது மாடு செய்யும் தொழில். கந்தன் என்ன செய்கிறான்? படிக்கிறான். படித்தல் கந்தன் செய்யும் தொழில். காக்கை என்ன செய்கிறது? பறக்கிறது. பறத்தல் காக்கையின் தொழில். இவ்வாறு ஒரு பொருளின் தொழிலைத் தெரிவிக்கும் சொல் வினைச் சொல் எனப்படும்.



## 5. பருத்தி

1. மக்களுக்கு உணவு, உடை, உறையுள் மூன்றும் மிகவும் அவசியமானவை. உறையுள் என்பது வசிக்கும் வீடு. உணவு, பயிர்த் தொழிலால்கிடைக்கின்றது. உடையை நாம் எவ்வாறு பெறுகிறோம்? உலகில் பல வகை ஆடைகள் நெய்யப்படுகின்றன. அவற்றுள் கம்பள ஆடை, பட்டு ஆடை, பருத்தி ஆடை என்பன முக்கியமானவை. கம்பள ஆடை குளிர் மிகுந்த நாடுகளுக்கு ஏற்றவை. பட்டு ஆடை மிகுந்த விலை உடையது. ஆதலால், ஏழை முதல் பணக்காரர் வரையில் எல்லாரும் உபயோகிக்கக் கூடியது பருத்தி ஆடையே ஆகும்.

2. பருத்தி என்பது பருத்திச் செடியிலிருந்து கிடைக்கிறது. பருத்திச் செடி வெப்ப மண்டலத்திலும், மித வெப்ப மண்டலத்திலும் பயிராகும். அது

கரிசல் மண் நிலத்தில் நன்ருகப் பயிராகும். பருத்திக்கு நீர் அதிகம் தேவையில்லே. பருத்திக்குப் பகை பனி. பனி பெய்தால் பருத்திக் காய்கள் உதிர்ந்துவிடும்.

3. பருத்திச்செடி ஏறக்குறைய ஆறு மாத காலத்தில் பயன் தரும். கோடையில் பயிர்செய்த பருத்திச் செடி நெட்டையாகவும், குளிர் காலத்தில் பயிர் செய்த பருத்திச் செடி குட்டையாகவும் இருக்கும். பருத்தி பறிக்கும் காலத்தில் சூரிய ஒளி அதிகம் வேண்டும்.

4. பருத்திச்செடி, மூன்று அல்லது நான்கு அடி உயரம் வளரும். இச்செடிக்கு ஆணிவேர் உண்டு.



அந்த ஆணிவேர் பூமியின் அடியில் அதிக ஆழம் செல்லும். அதனல் மழை சொற்பமாக இருந்தாலும் பருத்தி பலன் தரும். பருத்தி இலே ஐந்து பிரிவுகளேயும், நரம்புகளேயும் உடையதாகக் காணப்படும். காய் முற்றி வெடிக்கும்போது, அதில் மூன்று அறைகள் காணப்படும். அந்த அறைகளில் வெண்மையான பருத்தியும், கரிய விதைகளும் இருக்கும். பருத்திக் கொட்டை மாடுகளுக்கு உணவாகும். பருத்தி விதையிலிருந்து ஒருவித நெய்யும் எடுக்கிருர்கள்.

5. நம் நாட்டில் ஏராளமாகப் பருத்தி பயிராகிறது. தமிழ் நாட்டில் கோயமுத்தூர், மதுரை, திருநெல்வேலி மாவட்டங்களில் பருத்தி அதிகம் பயிர் செய்யப்படுகிறது. பருத்தியைப் பயிர் செய்வதனல் பலர் பிழைக்கலாம். பருத்தியைச் சேகரிப்பது, அதில் உள்ள கொட்டைகளே நீக்குவது, பருத்தியை அடித்துத் தூசி

துரும்புகளைப் போக்குவது, நூல் நூற்பது, ஆடை நெய்வது என்பன பருத்தி சம்பந்தமான தொழில்கள் ஆகும். பருத்தி மென்மையானது. கொட்டை நீக்கப்பட்ட பருத்திக்குப் பஞ்சு என்பது பெயர்.

6. நம் நாட்டில் மிகப் பழமையான காலத்திலிருந்து பருத்தி பயிரிடப்பட்டு வருகிறது. பருத்தி ஆடைக்கு உடம்பிலுள்ள வியர்வையை இழுத்துக் கொள்ளும் இயல்பு உண்டு.





7. நூல் நூற்றல் மிக்க பயன் தரும் தொழில் என்று காந்தியடிகள் கூறியுள்ளார். அது மிகவும் மேன்மையான தொழில் என்றும் அவர் கூறியுள்ளார். இந்திய நாட்டு மக்கள் யாவரும் உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்ற வேற்றுமை இல்லாமல் நூல் நூற்கவேண்டும். இதுவே காந்தியடிகளின் கருத்து. இராட்டையாலும் தக்ளியாலும் நூல் நூற்கலாம். அப்படி நூற்ற நூலால் நெய்யப்படும் ஆடை, **கதர் ஆடை** எனப்படும். இக் காலத்தில் நூல் நூற்பதற்கும், ஆடைகள் நெய்வதற்கும் இயந்திரங்கள் தோன்றி உள்ளன. ஆனால், நெடுங்காலமாக நம் இந்திய நாட்டு மக்கள் கைத்தறியில் ஆடை



நெய்து வந்தார்கள். அது அயல் நாடுகளுக்கும் அனுப்பப்பட்டு வந்தது.

8. திருக்குறள் என்ற அருமையான தமிழ் நூலை இயற்றியவர் திருவள்ளுவர். அவர் நெசவுத் தொழிலைச் செய்து வந்தார் என்பதை நாம் அறிகிறோம்.

### அரும்பதங்கள்

| | | |
|---|---|---|
| உறையுள் | வெப்பமண்டலம் | பகை |
| ஆசை | மிதவெப்ப மண்டலம் | நெட்டை |
| ஏற்றவை | கரிசல் மண் | குட்டை |

### பயிற்சி

1. விடை எழுது :

அ. தமிழ் நாட்டில் பருத்தி எங்கெங்குப் பயிராகிறது?

ஆ. பருத்திக்கு ஏற்ற நிலம் எது?

இ. பருத்தி சம்பந்தமான தொழில்கள் எவை?

ஈ. பருத்திக் கொட்டையின் உபயோகங்கள் எவை?

2. எதிர்ப் பதங்கள் எழுது:

அரியமானவை ×
மிகுந்த ×
வெப்பம் ×
தரும் ×
உண்டு ×
நெட்டை ×

3. கீழே உள்ள சொற்களை அமைத்து வாக்கியங்கள் எழுதவும்:

உடை–ஆடை–உண்டி–நெசவுத்தொழில்–நூல் நூற்றல்–பனி–பகை–அயல் நாடு.



## 6. நம் நாட்டுக் கொடி

கொடி பறக்குது! கொடி பறக்குது!
கொடி பறக்குது பாரடா!
கோணல் அற்ற கோலில் எங்கள்
கொடி பறக்குது பாரடா!

மனம் உவந்து உயிர் கொடுத்த
மான முள்ள வீரர்கள்
மட்டில் லாத துன்ப முற்று
நட்டு வைத்த கொடியிது!

தனம் இழந்து, கனம் இழந்து,
தாழ்ந்து போக நேரினும்
தாயின் மானம் ஆன இந்தக்
கொடியை என்றும் தாங்குவோம்.

—நாமக்கல் கவிஞர்




# 7. சிங்கமும் சுண்டெலியும்

### கதைப் படம்

**படத்தைப் பார்த்துக் குறிப்புக்களின் உதவியால் கதையைச் சொல்லு :**

**குறிப்புக்கள்:**

படம் 1. சிங்கம் தூங்குகிறது. சுண்டெலி அதன்மீது விளையாடுகிறது.

படம் 2. சிங்கம் விழிக்கிறது ; கோபத்தால் சுண்டெலியைக் கொல்லப் பார்க்கிறது. சுண்டெலி மன்னிக்க வேண்டுகிறது.

படம் 3. சிங்கம் வலையில் அகப்பட்டுக் கொள்கிறது. சிங்கம் கத்துகிறது.

படம் 4. சத்தம் கேட்ட சுண்டெலி வருகிறது. வலையைக் கடித்துச் சிங்கத்தை விடுவிக்கிறது.



## 8. மதுரை நகரம்

1. தமிழ்மொழி வழங்கும் நாடு தமிழ்நாடு. இதனைத் தமிழகம் என்றும் கூறுவர். தமிழ்நாடு முற்காலத்தில் சேரநாடு, சோழநாடு, பாண்டிநாடு என்ற மூன்று பிரிவுகள் உடையதாக இருந்தது. அவற்றை முறையே சேரர், சோழர், பாண்டியர் என்பவர் ஆண்டு வந்தனர். சேர நாட்டுத் தலைநகர் வஞ்சிமாநகர்; சோழ நாட்டுத் தலைநகர் காவிரிப்பூம்பட்டினம்; பாண்டி நாட்டுத் தலைநகர் மதுரைமாநகர்.

2. பாண்டிநாடு 'செந்தமிழ் நாடு' என்ற சிறப்பான பெயரையும் பெறும். பாண்டிய மன்னர்கள் மதுரையில் தமிழ்ச் சங்கத்தை ஏற்படுத்தினர்; தமிழ்ப் புலவர்களை ஆதரித்தனர்; தமிழில் சிறந்த நூல்களை இயற்றுவித்தனர். மதுரையில் சங்கத்தார் கோவில் என்னும் பெயருடன் ஒரு கோவில் இருப்பதை இன்றும் காணலாம்.

3. மதுரை ஒரு பெரிய நகரம். அது வியாபாரத்திற்குப் பெயர்பெற்றது. மதுரையில் சில பஞ்சாலைகள் உள்ளன. அங்குக் கைத்தறி நெசவும், சாயத்தொழிலும் மிகுதியாக நடைபெறுகின்றன. அதனால் அங்கு மக்கள் தொகை அதிகம். அன்றியும், மதுரை ஒரு புண்ணிய ஸ்தலமாகும்.

4. மதுரை நகரின் நடுவில் **மீனாட்சி அம்மன் கோவில்** இருக்கிறது. அது மிகப் பெரிய கோவில். அதில் அநேக அழகிய கருங்கற் சிலைகள் உண்டு. அங்குள்ள சிவபெருமான் பெயர் **சோமசுந்தரக் கடவுள்**. அவருக்குச் சொக்கநாதர் என்ற பெயரும் உண்டு. மீனாட்சி அம்மன் கோவிலில் பன்னிரண்டு மாதங்களிலும் திருவிழா நடைபெறும். ஆதலால் எல்லா நாட்களிலும் ஜனங்கள் திரள் திரளாய் வந்துகொண்டும் போய்க்கொண்டும் இருப்பார்கள். அந்தக் கோவிலுக்குள் ஓர் அழகிய குளம் இருக்கிறது. அதற்குப் பொற்றாமரைக் குளம் என்பது பெயர்.

5. மதுரை நகரம் வைகை ஆற்றின் தென்கரையில் அமைந்துள்ளது. மதுரை நகரின் வீதிகள் கோவிலைச் சுற்றி ஒன்றன்பின் ஒன்றாக அமைந்துள்ளன. இவ்வூரில் இப்பொழுதும் ஒரு தமிழ்ச் சங்கம் இருக்கிறது. மதுரைக்கு மேற்கே நான்கு மைல் தொலைவில் திருப்பரங்குன்றம் என்னும் ஸ்தலம் இருக்கிறது.

6. திருமலை நாயக்கர் மஹாலும், மாரியம்மன் தெப்பக் குளமும் மதுரையில் பார்க்கத் தகுந்த இடங்களாகும். தமிழ்நாட்டின் மிகப் பழைய நகரங்களுள் மதுரை நகரமும் ஒன்றாகும். இக்காலத்திலும் அது பெருமையோடு விளங்குகிறது.

## அரும்பதங்கள்

| | | |
|---|---|---|
| தமிழகம் | மன்னர் | அமைந்துள்ளது |
| முறையே | சங்கம் | புண்ணியஸ்தலம் |
| மாநகர் | சிலைகள் | தெப்பக்குளம் |
| மஹால் | தொகை | இயற்றுவித்தனர் |

## பயிற்சி

1. விடை எழுது:

அ. தமிழ்நாடு என்று எதற்குப் பெயர்?

ஆ. பழங்காலத்தில் தமிழ்நாடு எத்தனை பகுதிகளாக விளங்கியது? அப்பகுதிகளின் பெயர்கள் யாவை?

இ. மதுரை இக்காலத்தில் பெரிய வியாபார ஸ்தலமாக விளங்கக் காரணம் யாது?

ஈ. மதுரையில் உள்ள பெரிய கோவில் எது?

உ. மதுரையில் காணத்தக்க சிறந்த இடங்கள் எவை?

2. எதிர்ப் பதங்கள் எழுது:

முற்காலம் ×
பெரிய ×
உள்ளன ×
உள்ளே ×

3. கீழ் உள்ள சொற்களை அமைத்து வாக்கியங்கள் எழுதுக:

கூறுவர்–ஆண்டனர்–நகரம்–நடுவில் – அழகிய–வீதிகள்–தொல்வு–பெருமை.




# 9. சாலை விதிகள்

1. நாம் சாலையில் செல்லும்பொழுது சில விதிகளைக் கவனிக்க வேண்டும். தெருவில் பல வகை வண்டிகள் வந்துகொண்டும், போய்க்கொண்டும் இருக்கும் அல்லவா? சென்னை போன்ற பெரிய நகரங்களின் தெருக்களில் வண்டிகள் அதிகம். நாம் அவைகளையெல்லாம் கவனித்துச் செல்லாவிட்டால் நம் உயிருக்கே ஆபத்து உண்டாகும்.

2. சாலைகளில் செல்லும்போது நாம் நண்பர்களோடு பேசிக்கொண்டும், வேடிக்கை பார்த்துக் கொண்டும் செல்லலாகாது. சென்ருல் நமக்கு முன் புறத்திலும் பின்புறத்திலும் வரும் வண்டிகளைக் கவனிக்க முடியாது. ஆகையால் நாம் வண்டியில் அகப்பட்டுக்கொள்ள நேரிடும்.

3. நடக்கும்பொழுது சாலையின் நடுவே நடப்பதை நீக்க வேண்டும். சாலை ஓரங்களில் அமைத்துள்ள நடைபாதைகளின் மீது நடந்து செல்ல வேண்-

டும். நடைபாதைகள் இல்லாவிடில் எப்பொழுதும் சாலையின் ஓரத்தில் இடப்பக்கமாகவே செல்லவேண்டும். நடைபாதையை விட்டுக் கீழே இறங்கிச் செல்வதால் விபத்துக்கள் உண்டாகின்றன.

4. சாலை ஓரமாகச் செல்லும் பொழுது கல் கண்ணுடித் துண்டு, ஆணி முதலியன கிடக்கும். ஆதலால், நாம் நடக்கும்பொழுது வழியைப்பார்த்து நடந்து செல்ல வேண்டும். அவை நம் கண்ணில் பட்டால் அவற்றை அப்புறப்படுத்த வேண்டும். வாழைப் பழத்தைத் தின்றுவிட்டு அதன் தோலை வழியில் எறிந்து விடுகிறார்கள். அவ்வாறு செய்வது பெருந்தவறு. ஏனெனில் நடந்து செல்பவர்கள் அதன்மீது காலை வைக்க நேர்ந்தால் அது வழுக்கிவிடும். அதனால் அவர்கள் கீழே விழுந்து துன்பம் அடைவார்கள்.

5. சாலையில் பலர் சேர்ந்து செல்லும்பொழுது ஒருவர் பக்கத்தில் ஒருவராகச் சுவர் வைத்தது போலச் சாலையை அடைத்துக்கொண்டு செல்லலாகாது. நாம் அவ்வாறு செல்வதால், பிறர் செல்வதற்குத் தடை செய்பவர் ஆவோம். ஒருவர் பின் ஒருவராய்ப் பிறர் செல்வதற்கு இடம் விட்டுச்செல்லுதல் வேண்டும்.

6. சாலையைக் கடக்கும்போது பாதி தூரம் வரை வலப்புறம் பார்த்துச் செல்ல வேண்டும். சாலையின் மத்தியை அடைந்த பின் இடப்புறம் பார்த்துச் செல்ல வேண்டும். இந்த விதிகளை நாம் கவனித்து நடந்து கொண்டால் விபத்துக்கள் நேரா.

7. சாலைகளில் வண்டி ஓட்டுபவர் கவனிக்க வேண்டிய விதிகள் சில உண்டு. எப்போதும் சாலையின் இடப் பக்கமாகவே வண்டியைச் செலுத்த வேண்டும். சாலைகள் கூடும் இடத்தில் போலீஸ்காரர் நிற்பார்

# 25. மௌனவாசிப்பு III

**கீழே உள்ள கதையை மௌனமாய்ப் படித்து விஞக்களுக்கு விடை எழுது :**

1. ஒரு காட்டின் அருகில் பணக்காரர் ஒருவர் மாளிகை கட்டிக்கொண்டு வசித்து வந்தார். அவர் தினந்தோறும் வேட்டையாடச் செல்வது வழக்கம்.

2. ஒரு நாள் அச்செல்வர் குழந்தையுடனும் நாயுடனும் காட்டுக்குச் சென்ருர். அன்று அவர் குழந்தையையும் நாயையும் ஓரிடத்தில் நிறுத்தி விட்டு வேட்டையாடப் போனுர். வேட்டை மேற் சென்ற அவர் நெடுந்தூரம் சென்றுவிட்டார். அப்-போது மாலேவேளே; ஆகாயம் இருண்டது; எங்கும் மூடுபனி சூழ்ந்துகொண்டது. செல்வர்க்கு அதுவரை யிலும் குழந்தையின் நிீனவே இல்லே. மூடுபனியைக் கண்டதும், அவருக்குக் குழந்தையின் நிீனவு வந்தது. அவர் மிகவும் வேகமாக வந்தும் குழந்தையைக் காண முடியவில்லே. மூடுபனியால் அவர் வழி தவறிவிட்டார். முடிவில் நாயும் குழந்தையும் இல்லாமல் வீடு வந்து சேர்ந்தார். அவரும், மீனவியும், பிறரும் அன்றிரவெல் லாம் மிக வருந்திஞர்கள்.

3. மறுநாள், பொழுது விடிந்தது. செல்வர் வேலே-யாட்கள் சிலருடன் குழந்தையைத் தேடப் போனுர். அவர் போனதும் நாய் வீட்டுக்கு வந்தது. செல்வரின் மீனவி அந்த நாய்க்குச் சில அப்பத்துண்டுகளேப் போட்டாள். அப்போது நாய் மிகவும் பசியால் வாடி இருந்தது. ஆனுலும் அது அப்பத்துண்டுகளே வாயிற் கௌவிக் கொண்டு வெளியே ஓடிற்று.

4. குழந்தையைத் தேடிச் சென்ற செல்வரும் பிறரும் பல இடங்களில் நாள் முழுவதும் சுற்றித்

திரிந்தும், குழந்தையைக் காணுமல் வீட்டுக்குத் திரும்பிவந்தனர். செல்வரின் மனைவி அடைந்த துன்பத்திற்கு அளவே இல்லை. செல்வரும் அவர் மனைவியும் அன்றிரவு தூங்கவே இல்லை. மறு நாள் காலையில் செல்வர், வேலையாட்கள் சிலருடன் குழந்தையைத் தேடச் சென்றார். அவர் சென்றதும் நாய் வந்தது. அது மெலிந்திருந்தது. பசியால் அது வாடுகிறது என்பது அதைப் பார்த்த அளவில் தெரிந்தது. அன்று செல்வரின் மனைவி நாயின் நிலையை அறிந்து நாலைந்து ரொட்டித் துண்டுகளைப் போட்டாள். நாய் அவற்றைக் கௌவிக் கொண்டு விரைவாக வீட்டை விட்டு வெளியே ஓடிற்று.

5. அன்று மாலை செல்வரும் வேலையாட்களும் காடெங்கும் தேடித் தேடிக் குழந்தையைக் காணுமல் அலுத்துப்போய் வந்தனர். செல்வரின் மனைவி குழந்தையைப்பற்றிப் பேசிக்கொண்டிருக்கையில் நாய் வந்து போவதையும், மற்ற நேரங்களில் அதனைப் பார்க்க முடியாதிருத்தலையும் கூறினுள். அதனைக் கேட்ட செல்வர் மறுநாள் நாயோடு செல்வது எனத்தீர்மானித்து மறைந்திருந்தார். நாய் வந்தது. முன்புபோல் அது பசித்திருந்தும் தனக்கிட்ட ரொட்டியைத் தான் தின்னுது வாயிற் கௌவிக் கொண்டு ஓடிற்று. அதனைப் பின்தொடர்ந்து செல்வரும் வேலையாளும் சென்றார்கள். நாய் ஒரு மலைக்குகையருகிற் சென்றது.

6. செல்வரும் வேலையாளும் அக்குகையை அடைந்தனர். என்ன ஆச்சரியம்! குழந்தையும் நாயும் ரொட்டித் துண்டுகளைத் தின்றுகொண்டிருப்பதைச் செல்வர் கண்டார்; ஓடோடிச் சென்று குழந்தையை வாரி எடுத்துக்கொண்டார். வாலை ஆட்டிக் கொண்டு நின்ற நாயை வேலையாள் எடுத்துக்கொண்டான். பிறகு

செல்வர் குழந்தையோடு வீடு வந்து சேர்ந்தார். செல்வரின் மனைவி மிகவும் சந்தோஷப்பட்டாள். நாய் குழந்தையைக் காத்து வந்த முறையைச் செல்வர் சொல்லக் கேட்டாள். மனம் மகிழ்ந்தாள். அன்று முதல் செல்வரும், அவர் மனைவியும் நாயையும் அருமைக் குழந்தை போல் காத்து வந்தனர். 'நாய் போல் நன்றியுள்ள விலங்கு வேறு உண்டா?'

**வினாக்கள்**

1. *செல்வந்தர் எங்கு வசித்தார்?*
2. *அவர் வேட்டைக்குச் சென்றபோது யாரை அழைத்துக்கொண்டு போனார்?*
3. *செல்வந்தர் குழந்தைக்கு என்ன நேரிட்டது?*
4. *தினந்தோறும் நாய் செய்தது என்ன?*
5. *குழந்தை எங்கிருந்தது?*
6. *நாயின் குணத்தைப்பற்றி நாம் அறிவது யாது?*

## 26. பறவைகள்

1. உலகில் காணப்படும் பலவகை உயிர் இனங்களுள் பறவை இனம் ஒன்று. பறக்கும் தன்மை உடையன எல்லாம் பறவைகள் என்று கூறப்படும். பூமியிலிருந்து மேலே வானில் சஞ்சரிப்பதைப் பறத்தல் என்று கூறுவர். வானில் பறவைகள் பறக்கும்பொழுது பார்த்தால், மிகவும் விந்தையாகவும், அழகாகவும் இருக்கும். எவ்வாறு அவை அந்தரத்தில் ஆதாரம் இன்றிப் பறக்கின்றன என்று சிந்தித்துப் பாருங்கள். பறவைகள் தம் இரு பக்கங்களிலும் உள்ள இறக்கைகளைப் புடைத்தலால் பறக்கின்றன. அவைகளின் உடல் பறப்பதற்கு ஏற்றவாறு இலேசாக அமைந்திருக்கின்றது. பருத்த உடல்களைப் பெற்றிருக்கும் பறவைகள் வெகு தூரம் பறக்க முடியாது.

2. பறவைகளின் இறகுகளை உற்று நோக்குங்கள். இறகுகள் பல ஒன்ருேடு ஒன்று இணைந்து நின்று இறக்கையாக அமைநதிருக்கின்றன. இறக்கையைச் சிறகு என்றும் கூறுவதுண்டு. அச்சிறகுகள் பறவை உடலின் இருபுறங்களிலும் அமைந்துள்ளன.பறவைகள் பறக்க எழும் காலத்தில் இறக்கையை விரித்துப்புடைக்கும். அவ்வாறு புடைப்பதாலும் அதன் உடல் இலேசாக இருத்தலாலும் அது மேலே எழும். அப்பொழுது பறந்து செல்வது எளிதாகும். அந்த இறக்கைகள் மற்ருெரு வகையிலும் பறவைகளுக்குப் பயன்படுகின்றன. பற-



வாத காலங்களில் இறக்கைகள் உடலோடு குவிந்து ஒடுங்குதலால் பனி, வெயில், குளிர் முதலியவற்ருல் அதன் உடலுக்குத் துன்பம் உண்டாகாதபடி காக்கின்றன.

3. பறவைகளின் கால்களில் விரல்கள் உள்ளன. அவை மரக்கிளைகளில் அமர்வதற்கு ஏற்றவாறு நுனி வளைந்து அமைந்துள்ளன. அவைகளின் நுனியில் கூர்மையான நகங்கள் உண்டு. அக்கால்கள் மிக்க வலிமையுடையனவாகும். இராசாளி, கழுகு, பருந்து, கருடன் என்பன ஓர் இனத்தைச் சேர்ந்தவை. அவற்றுள் இராசாளி என்பது ஓர் ஆட்டுக் குட்டியையும் காலிலேயே தூக்கிக் கொண்டு, மிக்க உயரத்தில் பறந்து செல்லும் ஆற்றல் உடையது.

4. பறவைகளின் மூக்கிற்கு அலகு என்பது பெயர். அவை வெவ்வேறு வகையாக அமைந்திருப்பதைக் காணலாம். அவை மாமிசத்தைக் குத்தித்தின்பதற்கும், கொட்டைகளை உடைத்துத் தின்பதற்கும் ஏற்ற வாறு அமைந்துள்ளன. பறவைகளின் அலகில் இரு துவாரங்கள் இருக்கும். அவை மூக்கைப்போலப் பயன்படுகின்றன. பறவைகளுக்கு நாக்கு என்னும் உறுப்பும் உண்டு. பறவைகளின் கண்கள் சிறியவையாயினும் கூரிய பார்வை உண்டு. சில பறவைகளுக்குப்





பகலில் கண் தெரியாது. அவற்றுள் ஆந்தை ஒன்று. அதற்கு இரவில் கண் நன்ருகத் தெரியும். பறவைகள் முட்டையிட்டுக் குஞ்சு பொறிக்கும். வௌவால் என்னும் பறவை மட்டும் மிருகத்தைப்போலக் குட்டி போடும் தன்மையுடையது. வௌவால் மரக் கிளைகளில் தலைகீழாகத் தொங்கும்.

5. சில பறவைகள் மரங்களில் கூடு கட்டி வாழும். இராசாளி, கழுகு போன்ற சில பறவைகள் மலைகளில் உச்சியில் யாரும் செல்லமுடியாத இடத்தில் கூடுகட்டி வாழும். சில பறவைகள் மரப் பொந்துகளில் வாழும். கூடுகளும் பல வகையாக இருக்கும். சில பறவைகள் நீரிலும் நிலத்திலும் வாழும்.

**6.** கழுகு, ஆந்தை, கோட்டான், பருந்து, கருடன், புறா, காகம், சிட்டுக்குருவி, உள்ளான், மைனா, கௌதாரி, மயில், குயில், கிளி, கோழி, வாத்து, நாரை, கொக்கு, தீப்பறவை முதலியன வெவ்வேறு வகையானவை. பறவைகளுள் மிகப்பெரியது தீப்பறவை. அது ஓர் ஆள் உயரம் இருக்கும்; குதிரையைவிட வேகமாக ஓடும். ஆனால் அது தன் பருத்த உடலைத் தூக்கிக் கொண்டு பறக்க முடியாது.

*அரும்பதங்கள் : உயிரினம், தன்மை, விந்தை, அந்தரம், ஆதாரம், சிந்தித்து, புடைத்தல், அமைந்திருக்கின்றன, உற்றுநோக்கு, இணைந்து, எளிது.*

**பயிற்சி**

1. *விடை எழுது :*

அ. எவை பறவை என்று கூறப்படும்?
ஆ. பறவை எவ்வாறு பறக்கிறது?
இ. இறக்கைகளால் பறவைக்கு என்ன பயன்?
ஈ. எந்தப் பறவைக்குப் பகலில் கண் தெரியாது?
உ. வௌவாலைப்பற்றி உனக்கு என்ன தெரியும்?
ஊ. பறவைகளில் மிகப் பெரியது எது?

2. கோடுள்ள இடங்களைத் தகுந்த சொற்களால் நிரப்பு :

அ. பறக்கும்———உடையது பறவை. (சக்தி, வழக்கம், தன்மை)
ஆ. பறவைகள் இறக்கைகளைப்———பறக்கின்றன. (தூக்குவதால், இறக்குவதால், புடைப்பதால்)
இ. பறவையின் விரல்களின்———கூர்மையான நகங்கள் உண்டு. (நடுவில், நுனியில், அடியில்)
ஈ. பறவைக்கு நாக்கு என்னும்———உண்டு. (பாகம், பகுதி, உறுப்பு)
உ. தீப்பறவை ஓர் ஆள்———இருக்கும். (மட்டம், உயரம், அளவு.)

3. கீழே உள்ள சொற்களை அமைத்து வாக்கியங்கள் எழுதுக:

இனம் – சஞ்சரித்து – வானில் – சிந்தித்து – புடைத்தல் – உற்றுநோக்கு – எளிது – பயன்.




## 27. தாமஸ் ஆல்வா எடிஸன்

1. இக்காலத்தில் நாம் பற்பல வசதிகளைப் பெற்று வாழ்கிறோம். மின்சாரம் நம் வாழ்க்கையில் பலவகையில் பயன்படுகிறது. மின்சார விளக்கு இருளை நீக்கிப் பளிச்சென்று வெளிச்சம் தருகிறது. ரேடியோ மூலம் பாட்டுக்களைக் கேட்கிறோம். மின்சாரத்தால் வண்டி ஓடுகிறது. இரண்டு நூற்றுண்டுகளுக்கு முன் வாழ்ந்தவர் இத்தகைய நலங்களைப் பெறவில்லை. இவற்றை யெல்லாம் நமக்குத் தேடித்தந்தவர் யார்? அவரைப்பற்றி அறிந்துகொள்ள வேண்டாவா?

2. இவற்றை எல்லாம் நமக்குத் தேடித்தந்த விஞ்ஞானி **தாமஸ் ஆல்வா எடிஸன்** என்பவர் ஆவர். அவர் 1847-ம் ஆண்டு அமெரிக்காவில் ஓகியோ ஜில்லாவில் மிலான் என்ற ஊரில் பிறந்தார். அவருடைய தந்தையார் **சாமுவேல் எடிஸன்** என்பவர் ஆவர். தாயார் **நான்ஸி எலியட்டு** என்பவர். அவர்கள் ஏழைக்-

குடும்பத்தினரே. தாமஸ் ஆல்வா எடிஸன் தம் தாயாரிடமே கல்வி கற்ருர். அவருக்கு எதனையும் கூர்ந்து பார்த்து, ஆராயும் அறிவு, இளமையிலேயே இருந்தது. அவர் சிறுவராயிருந்த பொழுது செய்த செயல்கள் அவரது பேரறிவை விளக்குவனவாயிருந்தன.

3. அவர் தம் தாயாரிடம் கற்ற கல்வியை விருத்தி செய்துகொண்டார். விஞ்ஞான நூல்களையும் இரஸாயன நூல்களையும் அவர் விரும்பிப் படித்தார். ஏழைக் குடும்பத்தில் பிறந்ததனுல், இளமையில் இரயி-லில் பத்திரிகைவிற்கும் தொழிலைச்செய்தார். பின் அவர், தாமே செய்திகளை அச்சடித்து விற்றுப் பொருள் திரட்டத் தொடங்கினுர். இரயில் வண்டியில் ஓய்வு நேரத்தில் ஆராய்ச்சி செய்வார். ஒரு சமயம் அவர் ஆராய்ச்சிக்கு வைத்திருந்த தீப்பாஷாணம் கீழே சிந்தியதால் வண்டி-யில் தீப் பிடித்துக்கொண்டது. அச்சமயம் அங்கிருந்த-வர் அடித்ததால், அவருடைய காது செவிடாகி விட்-டது.

4. ஒரு நாள் ஒரு தந்திக் குமாஸ்தாவின் குழந்தையை எடிஸன் ஆபத்தினின்றும் காப்பாற்றினுர். அதனுல் அத்தந்திக்குமாஸ்தா அவருக்குத் தந்தியடித்தலைக் கற்பித்தார். பத்து நாட்களில் அதனைக் கற்றுக்கொண்ட எடிஸன், தந்தியடிக்கும் முறையில் பல திருத்தங்களை அமைத்தார். வாக்குரிமைச் சீட்டுக்களை எண்ணும் இயந்திரத்தையும், மற்றும் பல இயந்திரங்களையும் எடிஸன் கண்டுபிடித்தார். அதனுல் அவருக்கு நாற்-பதினுயிரம் டாலர் கிடைத்தது. அதனைக் கொண்டு அவர் இரண்டு கம்பெனிகளை ஏற்படுத்தினுர். கம்பெனி என்பது வாணிகக் கழகம். அக்கம்பெனியில் தொழில் புரிந்து வந்த ஸ்டில்வெல் என்ற அம்மையாரை எடிஸன் மணந்துகொண்டார். அவ்வம்மையார் மண

மான ஒன்பது ஆண்டுகளுக்குள் மூன்று மைந்தர்களைப் பெற்றுவிட்டு இறந்து போனர்.

5. எடிஸன் டெலிபோன், கிராமபோன், திரைப் படக் காட்சி முதலானவற்றைக் கண்டுபிடித்தார். எடிஸன் தம் வாழ்நாளில் எண்ணற்ற பல புதிய பொருள்களைக் கண்டுபிடித்து நமக்கு அளித்துள்ளார். உலக நன்மையைக் கருதிச் செய்த அவரது செயலை வியந்து பாராட்டி ரஷ்யா, பிரான்ஸ், அமெரிக்கா, ஜப்பான் போன்ற நாடுகள் தங்கப் பதக்கங்களையும் பரிசுகளையும் அவருக்கு அளித்துப் பெருமைப்படுத்தின. அவர் வாழ்ந்த மாளிகை நியூஜெர்ஸியிலுள்ள ஆரஞ்சு மலையின் அடிவாரத்தில் உள்ளது. அம் மாளிகையில் அவர் வேலை செய்த இடம், புத்தக நிலயம், காட்சிப் பொருள்கள் முதலியன எல்லாம் இன்றும் உள்ளன. எடிஸன் 1931-ம் ஆண்டு தமது எண்பத்து நான்காம் வயதில் இறந்தார். அவர் நமக்குக் கூறும் அறிவுரையைக் கவனிப்போம்: "ஏழையாகப் பிறந்ததற்காக எவரும் கவலைப்பட வேண்டுவது இல்லை. நான் ஏழையாகத்தான் பிறந்தேன்; படித்துப் படித்துச் சிறந்த நிலையை அடைந்தேன்; நீங்களும் படித்துப் படித்து முன்னேறுங்கள். அறிவை விருத்தி செய்து கொள்ளுங்கள்; சிந்திக்கும் திறமையைப் பெறுங்கள்; உழைப்பைக் கைக்கொள்ளுங்கள்; தன்னம்பிக்கையுடன் இருங்கள்; செய்யும் காரியங்களில் பல முறை தோல்வியை அடைந்தாலும் தன்னம்பிக்கையும், விடா முயற்சியும் கொண்டு உழையுங்கள்; வெற்றி பெறுவது உறுதி. உங்கள் உழைப்பினல் நீங்கள் உயர்வை அடைந்து, நாட்டுக்கும் பெருமையைத் தேடிக் கொடுங்கள்." இவற்றை நாம் அமுத மொழிகளாகக் கொண்டு இவற்றின்படி நடக்க முயன்ருல், நாமும் நம் நாடும் முன்னேற்றமடைவது உறுதி.

**அரும்பதங்கள் : மின்சாரம், இருள், ரேடியோ, நலங்கள், விஞ்ஞானி, ஆராய்ச்சி, திரட்ட, வாக்குரிமை, கம்பெனி, மணந்தார், டெலிபோன், கிராமபோன், பாராட்டி.**

**பயிற்சி**

1. விடை எழுதுக:

அ. எடிசன் என்பவர் யார்?
ஆ. அவர் எங்கே பிறந்தார்?
இ. அவர் இளமை பற்றி நீ அறிந்தது யாது?
ஈ. எடிசன் உலகத்துக்குச் செய்த நன்மைகள் யாவை?

2. கீழ் வரும் சொற்களை அமைத்து வாக்கியங்கள் எழுது:

வசதிகள் – நூற்றுண்டு – நலங்கள் – விஞ்ஞானி – குடும்பம் – ஆராய்ச்சி – பொருள் திரட்டு.

8. கீழ் வரும் குறை வாக்கியங்களைப் பூர்த்தி செய்க:

அ. இக்காலத்தில் நாம் பற்பல வசதிகளைப் ———.
ஆ. முற்காலத்தவர் இத்தகைய நலங்களை ———.
இ. இவற்றையெல்லாம் நமக்குத் தேடித் தந்த விஞ்ஞானி ———.
ஈ. எடிசன் தம் தாயாரிடமே ———.

# 29. நாட்டுப் பொது வாழ்த்து

ஜன கண மன அதி நாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா !
பஞ்சாப ஸிந்து குஜராத மராதா
திராவிட உத்கல வங்கா,
விந்திய ஹிமாசல யமுனா கங்கா
உத்சல ஜலதி தரங்கா,
தவ ஸுப நாமே ஜாகே தவசுப
ஆசிஷ மாங்கே காஹே தவஜய காதா
ஜனகண மங்கள தாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா !
ஜயஹே ஜயஹே ஜயஹே !
ஜய ஜய ஜய ஜயஹே !

### பொருள்

மக்களின் உள்ளத்தில் உறையும் பாரதத்தின் பெரும் பேற்றிற்கு முதல்வனாய் உள்ள ஆதி இறைவனே! வெற்றியுண்டாகட்டும்! பஞ்சாப், சிந்து, குஜராத்தி, மராத்தி, திராவிடம், உத்கலம் (ஒரிஸா), வங்காளம், விந்தியம் முதலிய நாடுகளையும், இமயமலையையும், யமுனை, கங்கை முதலிய பொங்கும் அலைகளுடன் பொலிவுறும் யாறுகளையும் கொண்ட உனது மங்கலம் மிகுந்த பெயரைக் கூறி, உனது மங்கல மளிக்கவல்ல ஆசியை வேண்டுகிறோம்.

உன்னுடைய வெற்றியைப் பாடுகிறோம்! மக்களின் மங்கல நல்வாழ்வை நல்கும் இறைவனே! பாரதத்தின் ஆதி முதல்வனே, உனக்கு வெற்றியுண்டாகுக!

*வெற்றி! வெற்றி! வெற்றி!*

# செய்யுட்பாடங்கள்

## 1. கடவுள் வணக்கம்

வாக்குண்டாம், நல்ல மனமுண்டாம், மாமலராள்
நோக்குண்டாம், மேனி நுடங்காது;—பூக்கொண்டு
துப்பார் திருமேனித் தும்பிக்கை யான்பாதம்
தப்பாமல் சார்வார் தமக்கு. 1

வெள்ளைக் கலையுடுத்து, வெள்ளைப் பணிபூண்டு,
வெள்ளைக் கமலத்தில் வீற்றிருப்பாள்;—வெள்ளை
அரியா சனத்தில் அரசரோ டென்னைச்
சரியா சனம்வைத்த தாய். 2

**குறிப்புரை :**

1. வாக்குண்டாம் - வாக்கு+உண்டாம், பேசும் திறமை உண்டாகும்; மாமலராள் - சரசுவதி; துப்பார் – (துப்பு+ஆர்) துப்பு – பவழ நிறம், ஆர் – பொருந்திய; தும்பிக்கையான் – விநாயகர் ; சார்வார் – அடைபவர்.

2. கலை – ஆடை; பணி – ஆபரணம்; கமலம் – தாமரை; அரியாசனம் – சிங்காதனம்;

## 2. மூதுரை

நன்றி ஒருவற்குச் செய்தக்கால் அந்நன்றி
என்று தருங்கொல் எனவேண்டா;—நின்று,
தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத்
தலையாலே தான்தருத லால். 1

நல்லார் ஒருவர்க்குச் செய்த உபகாரம்
கல்மேல் எழுத்துப்போல் காணுமே;—அல்லாத
ஈரமில்லா நெஞ்சத்தார்க் கீந்த உபகாரம்
நீர்மேல் எழுத்துக்கு நேர். 2

அடுத்து முயன்றாலும் ஆகுநாள் அன்றி
எடுத்த கருமங்கள் ஆகா;—தொடுத்த
உருவத்தால் நீண்ட உயர்மரங்கள் எல்லாம்
பருவத்தால் அன்றிப் பழா. 3

நீரளவே ஆகுமாம் நீராம்பல்; தான்கற்ற
நூலளவே ஆகுமாம் நுண்ணறிவு;—மேலைத்
தவத்தளவே ஆகுமாம் தான்பெற்ற செல்வம்;
குலத்தளவே ஆகும் குணம். 4

நல்லாரைக் காண்பதுவும் நன்றே; நலமிக்க
நல்லார்சொல் கேட்பதுவும் நன்றே;—நல்லார்
குணங்கள் உரைப்பதுவும் நன்றே; அவரோடு
இணங்கி இருப்பதுவும் நன்று. 5

தீயாரைக் காண்பதுவும் தீதே; திருவற்ற
தீயார்சொல் கேட்பதுவும் தீதே;—தீயார்
குணங்கள் உரைப்பதுவும் தீதே; அவரோடு
இணங்கி இருப்பதுவும் தீது. 6

நெல்லுக் கிறைத்தநீர் வாய்க்கால் வழியோடிப்
புல்லுக்கு மாங்கே பொசியுமாம்;—தொல்லுலகில்
நல்லார் ஒருவர் உளரேல், அவர்பொருட்டு
எல்லார்க்கும் பெய்யும் மழை. 7

பண்டு முளைப்ப தரிசியே யானாலும்
விண்டுமி போனால் முளையாதாம்;—கொண்டபேர்
ஆற்ற லுடையார்க்கும் ஆகா(து) அளவின்றி
ஏற்ற கருமஞ் செயல். 8

மடல்பெரிது தாழை மகிழ்இனிது கந்தம்
உடல்சிறியர் என்றிருக்க வேண்டா;—கடல்பெரிது
மண்ணீரும் ஆகா(து); அதனருகே சிற்றூறல்
உண்ணீரும் ஆகி விடும். 9

சீரியர் கெட்டாலும் சீரியரே ; சீரியர் மற்(று)
அல்லாதார் கெட்டாலங் கென்னாகும்?—சீரிய
பொன்னின் குடமுடைந்தால் பொன்னாகும்; என்னாகும்
மண்ணின் குடமுடைந்தக் கால்? 10

**குறிப்புரை :**

1. நன்றி – உதவி; தாளுண்ட நீர் – வேரினால் கிரகித்து உண்ட நீர் ;

2. ஈரம் இல்லா – அன்பில்லாத ; ஈந்த – செய்த; நேர் – ஒப்பாகும்.

3. எடுத்த – மேற்கொண்ட; கருமங்கள் – வேலைகள்; தொடுத்த – கிளைத்த; பழா – பழுக்கமாட்டா.

4. நீர் ஆம்பல் – நீரில் இருக்கும் அல்லியின் கொடி; மேலை – பிறப்பு.

5. நலம் மிக்க – நற்குணம் மிகுந்த; இணங்கி – சேர்ந்து;

6. தீயார் – கொடியவர்; திரு அற்ற – நற்குண நற்செயல் இல்லா.

7. பொசியும் – உணவு கொடுக்கும்; தொல்உலகில் – பழமையான உலகில்.

8. பண்டு – முற்பட்ட; விண்டு – பிரிந்து; பேர் ஆற்றல் – மிக்க திறமை ; ஏற்ற கருமம் – மேற்கொண்ட செயல்.

9. மடல் – இதழ்; மண்ணீர் – உடம்பைக் கழுவும் நீர்; சிற்றூறல் – சிறு பள்ளத்தினின்று சுரக்கும் நீர்.

10. சீரியர் – உயர்ந்தவர்; சீரியர் மற்று அல்லாதார் – தாழ்குணம் உள்ளவர்.

## 3. நல்வழி

வருந்தி அழைத்தாலும் வாராத வாரா ;
பொருந்துவன போமினென்றாற் போகா;—இருந்தேங்கி
நெஞ்சம்புண் ணாக நெடுந்தூரம் தாம்நினைந்து
துஞ்சுவதே மாந்தர் தொழில். 1

ஆற்றுப் பெருக்கற் றடிசுடுமந் நாளுமவ்வா(று)
ஊற்றுப் பெருக்கால் உலகூட்டும்;—ஏற்றவர்க்கு
நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தார் ஆனாலும்
இல்லையென மாட்டார் இசைந்து. 2

ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும்
மாண்டார் வருவரோ? மாநிலத்தீர்!—வேண்டா ;
நமக்கும் அதுவழியே ; நாம்போம் அளவும்
எமக்கென்னென் றிட்டுண் டிரும். 3

ஆற்றங் கரையின் மரமும், அரசறிய
வீற்றிருந்த வாழ்வும் விழுமன்றே!—ஏற்றம்
உழுதுண்டு வாழ்வதற் கொப்பில்லை; கண்டீர்
பழுதுண்டு வேறோர் பணிக்கு. 4

சேவித்தும் சென்றிரந்தும் தெண்ணீர்க் கடல் கடந்தும்
பாவித்தும் பாராண்டும் பாட்டிசைத்தும்—போவிப்பம்
பாழின் உடம்பை வயிற்றின் கொடுமையால்
நாழி அரிசிக்கே நாம். 5

நீரும் நிழலும் நிலம்பொதியும் நெற்கட்டும்
பேரும் புகழும் பெருவாழ்வும்—ஊரும்
வருந்திருவும் வாழ்நாளும் வஞ்சமிலார்க் கென்றும்
தருஞ்சிவந்த தாமரையாள் தான். 6

நீறில்லா நெற்றிபாழ் ; நெய்யில்லா உண்டிபாழ் ;
ஆறில்லா ஊருக்(கு) அழகுபாழ் ;—மாறில்
உடன்பிறப் பில்லா உடம்பு பாழ் ; பாழே
மடக்கொடி இல்லா மனை. 7

உண்பது நாழி; உடுப்பது நான்கு முழம்;
எண்பது கோடிநினைந் தெண்ணுவன ;—கண்புதைந்த
மாந்தர் குடிவாழ்க்கை மண்ணின் கலம்போலச்
சாந்துணையும் சஞ்சலமே தான். 8

கல்லானே ஆனாலும் கைப்பொருளொன் றுண்டாயின்
எல்லாரும் சென்றங் கெதிர்கொள்வர் ;—இல்லானை
இல்லாளும் வேண்டாள்; மற்(று) ஈன்றெடுத்த தாய்வேண்
[டாள்;
செல்லா தவன்வாயிற் சொல். 9

**ஒன்றை நினைக்கின் அதுவொழிந்திட்(டு) ஒன்றாகும்;**
**அன்றி அதுவரினும் வந்தெய்தும்;—ஒன்றை**
**நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்**
**எனையாளும் ஈசன் செயல்.** 10

**குறிப்புரை :**

1. பொருந்துவன – (நாமே) வந்து அடையக்கூடியவை ; ஏங்கி – வருந்தி; நெடுந்தூரம் – பலவகையாக அல்லது நெடு நாள்; துஞ்சுவது – இறப்பது.

2. பெருக்கு – வெள்ள நீர்; அற்று – நீங்கி; நல்கூர்ந்தார் ஆனாலும் – வறியவர்களானாலும்; ஏற்றவர்க்கு - பிச்சை கேட்டவர்க்கு; இசைந்து – மனம் ஒப்பி.

3. மாநிலத்தீர் – உலகத்தில் வாழும் மக்களே, அதுவழியே- நேரத்தக்கது அதுவே; எமக்கென்னென்றிட்டுண்டிரும் - எமக்கு+ என்+என்று+இட்டு+உண்டு+ இரும்.

4. விழுமன்றே – விழும் + அன்று+ஏ ; விழும் – அழியும்; ஏற்றம் – பெருமையோடு ; கண்டீர் – அறிவீர்; பழுதுண்டு – அழிவு உண்டு ; பணி – தொழில்.

5. சேவித்தும் – (பிறர்க்கு) ஊழியம் செய்தும்; பாவித்தும் –(உயர்ந்தவராக) கருதியும்; போவிப்பம் – அழிவோம்; பாழின் உடம்பு – அழியக்கூடிய உடம்பு.

6. நிலம் பொதியும் – நிலத்திற் பொருந்தியிருக்கும் ; வருந் திரு – இடைவிடாது வளரும் செல்வம் ; தரும் – கொடுப்பாள்; சிவந்த தாமரையாள் – இலக்குமி.

7. நீரில்லா – (நீறு+ இல்லா) விபூதி இல்லாத ; உண்டி – உணவு; மாறில் – மாறுபாடு இல்லாத ; உடன்பிறப்பு – சகோதரர்: மடக்கொடி – மடப்பம் பொருந்திய கொடி போன்ற சாயலை யுடைய பெண்.

8. நாழி – ஒரு முகத்தல் அளவை; எண்ணுவன – எண்ணங்கள்; கண் புதைந்த – கண்மூடித்தனமாக ; மண்ணின் கலம் – மண்ணால் செய்யப்பட்ட பாண்டம் ; சாந்தனையும் – இறக்கும் வரையில் ; சஞ்சலம் – துன்பம்.

9. பொருள் – செல்வம் ; எதிர்கொள்வர் – மரியாதை செய்வர் ; இல்லானை – செல்வம் இல்லாதவனை ; இல்லாள் – மனைவி ; ஈன்று எடுத்த – பெற்று வளர்த்த ; செல்லாது – மதிக்கப்பட மாட்டாது.

10. எய்தும் – அடையும் அல்லது சேரும் ;

## குறத்தி பாட்டு

என்றனது திருநாடு கேட்கிறையோ தம்பீ !
ஏற்றமுள்ள இந்திரனர் ஆளுமெங்கள் நாடு ;
சந்திரர்கள் சூரியர்கள் தவம்புரியும் நாடு ;
தவமுனிவர் ரிஷிகளெல்லாம் வாழுமெங்கள் நாடு ;
கொச்சிமலை குடகுமலை எங்களது நாடு ;
குமரேசர் வாழுவதும் எங்களது நாடு ;
பச்சைமலை பவளமலை எங்களது நாடு ;
பரமசிவன் வாழுவதும் எங்களது நாடு ;
வங்காளம் சிங்காளம் மகதமெங்கள் நாடு ;
வளம்பாடி குறியுரைக்க வந்தேனடா தம்பீ !

## விவேக சிந்தாமணி

ஆபத்துக் குதவாப் பிள்ளை,
அரும்பசிக்(கு), உதவா அன்னம்,
தாபத்தைத் தீராத் தண்ணீர்,
தரித்திரம் அறியாப் பெண்டிர்,
கோபத்தை அடக்கா வேந்தன்,
குருமொழி கொள்ளாச் சீடன்,
பாபத்தைத் தீராத் தீர்த்தம்
பயனிலை ஏழுந் தானே. 1

தண்டா மரையின் உடன்பிறந்தும்
தண்தேன் நுகரா மண்டுகம் ;
வண்டே கானத் திடையிருந்தும்
வந்தே கமல மதுவுண்ணும்.
பண்டே பழகி இருந்தாலும்
அறியார் புல்லர் நல்லோரை ;
கண்டே களித்தங் குறவாடித்
தம்மிற் கலப்பர் கற்றூரே. 2

வானரம் மழைதனில் நனையத் தூக்கணம்
தான்ஒரு நெறிசொலத் தாண்டிப் பிய்த்திடும் ;
ஞானமும் கல்வியும் நவின்ற நூல்களும்
ஈனருக் குரைத்திடில் இடர தாகுமே. 3

**குறிப்புரை :**

1. தாபம்–தாகம்; பெண்டிர்–மனைவி; வேந்தன்–அரசன்; கொள்ளா–ஏற்றுக்கொள்ளாத.

2. தண்டாமரை–(தண்மை+தாமரை) குளிர்ச்சி பொருந்திய தாமரை; நுகரா–அருந்ாது; மண்டுகம்–தவளை; கானம்–காடு; கமலம்–தாமரை; மது தேன்; பண்டே–பழமையாக; புல்லர்–அற்பர்; உறவாடி–நட்புக்கொண்டு.

8. வானரம்–குரங்கு; தூக்கணம்–தூக்கணங் குருவி: நெறி–நீதி; நவின்ற–கற்ற; ஈனர்–அற்பர்; இடர்–துன்பம்.

# பொன் மொழி வாசகம்

## (ஐந்தாம் புத்தகம்)

ஆசிரியர்கள் :
**புலவர் பு. செல்வராசனார்,**
தலைமைத் தமிழாசிரியர்,
சி. அப்துல் ஹகிம் இந்து முஸ்லிம் உயர்நிலைப்பள்ளி,
சென்னை.

**ஆபிரகாம் அருளப்பன்,** B. A.,
தமிழ்த்துறைத் தலைவர்,
அர்ச். சேவியர் கல்லூரி, பாளையங்கோட்டை.

பதிப்பாசிரியர் :
**சு. சே. உமாபதி,** M. A., L. T.. (Dip. in. Geog.)
தலைமையாசிரியர்
சி. அப்துல் ஹகிம் இந்து முஸ்லிம் உயர்நிலைப்பள்ளி,
சென்னை.

**சித்ரா பப்ளிஷிங் ஹௌஸ்**
**ஸ்ரீ வைகுண்டம்**

 *1954* **[விலை அணா 12**

# முன்னுரை

பொன் மொழி வாசகம் ' என்னும் பெயரோடு வெளிவ போதரும் தமிழ் வாசக வரிசையில் இது ஐந்தாம் புத்தக மாகும். இது 1941–ஆம் ஆண்டில் அரசியலார் வெளியிட்ட பாடத் திட்டத்தைத் தழுவி எழுதப் பெற்றுளது. இதன் கண் 800 புதிய சொற்கள் இடம் பெற்றுள்ளன. மொழிப் போதனையில் முக்கியமாகக் கருதப்படுவது மொழிப் பயிற்சியேயாகும். இப்பயிற்சிக்குப் போதிய வாய்ப்பளிக் கும் முறையில் இதன்கண் பல்வேறு வகையான ஓவியங் கள் தரப்பட்டுள்ளன. ஆசிரியர்கள் அவற்றைப் பயன் படுத்திக் கொள்வது இன்றியமையாததாகும்.

ஒவ்வொரு பாடத்தின் இறுதியிலும் மொழியறிவு ஆக்கமுறும் வகையில் பயிற்சிகள் தரப்பட்டுள்ளன. இப் பயிற்சிகள் அனைத்தையும் குழந்தைகள் செய்யுமாறு தூண்ட வேண்டுவது ஆசிரியர் கடமையாகும். அன்றியும் வகுப்புக்கு ஏற்றவையாகச் சில இலக்கண பாடங்களும் சேர்க்கப்பட்டுள்ளன.

சிறுவர் சிறுமியர்க்கு இன்பமூட்டத்தக்க இனிய எளிய பாடல்கள் இதன்கண் சேர்க்கப்பட்டுள்ளன. இப் பாட்டுக்களைக் குழந்தைகள் மனப்பாடம் செய்வது நல மாகும். இதன்கண் சேர்க்கப்பெற்றுள்ள பாடங்கள் சிறு வர் சிறுமியரின் தமிழறிவையும், பொது அறிவையும் வளரச்செய்யும் என்பது உறுதி. அறிஞர்கள் தமிழ்ச்சிறுவர் சிறுமியர்க்கு இந்நூல் பயனளிக்குமாறு செய்வார்கள் என முற்றிலும் நம்புகின்றோம்.

சென்னை
7–11–54. ஆசிரியர்கள்.

# பொருளடக்கம்



## செய்யுட் பகுதி

# நாட்டுப் பொது வாழ்த்து

ஜன கண மன அதி நாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா !
பஞ்சாப ஸிந்து குஜராத மராதா
திராவிட உத்கல வங்கா,
விந்திய ஹிமாசல யமுனா கங்கா
உத்சல ஜலதி தரங்கா,
தவ ஸுப நாமே ஜாகே தவசுப
ஆசிஷ மாங்கே காஹே தவஜய காதா
ஜனகண மங்கள தாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா !
ஜயஹே ஜயஹே ஜயஹே !
ஜய ஜய ஜய ஜயஹே !

பொருள்

மக்களின் உள்ளத்தில் உறையும் பாரதத்தின் பெரும் பேற்றிற்கு முதல்வனாய் உள்ள ஆதி இறைவனே! வெற்றியுண்டாகட்டும்! பஞ்சாப், சிந்து, குஜராத்தி, மராத்தி, திராவிடம், உத்கலம் (ஒரிஸா), வங்காளம், விந்தியம் முதலிய நாடுகளையும், இமயமலையையும், யமுனை, கங்கை முதலிய பொங்கும் அலைகளுடன் பொலிவுறும் யாறுகளையும் கொண்ட உனது மங்கலம் மிகுந்த பெயரைக் கூறி, உனது மங்கல மளிக்கவல்ல ஆசியை வேண்டுகிறோம்.

உன்னுடைய வெற்றியைப் பாடுகிறோம்! மக்களின் மங்கல நல்வாழ்வை நல்கும் இறைவனே! பாரதத்தின் ஆதி முதல்வனே, உனக்கு வெற்றியுண்டாகுக!

வெற்றி! வெற்றி! வெற்றி!

# 1. அன்னைக்கு விண்ணப்பம்

## (பாட்டு)

எண்ணிய முடிதல் வேண்டும் !
நல்லவே எண்ணல் வேண்டும் !
திண்ணிய நெஞ்சம் வேண்டும் !
தெளிந்த நல்அறிவு வேண்டும் !
பண்ணிய பாவ மெல்லாம்
பரிதிமுன் பனியே போல
நண்ணிய நின்முன் இங்கு
நசித்திடல் வேண்டும் அன்னாய் !

—சி. சுப்பிரமணியப் பாரதி.

*அரும்பதங்கள்: எண்ணிய - நினைத்த செயல்கள்; எண்ணல் - நினைத்தல்; திண்ணிய - உறுதியான; பண்ணிய - செய்த; பரிதி - சூரியன்; நண்ணிய - அடைந்த; நசித்திடல் - அழிதல்; அன்னாய் - அன்னையே.*

# 2. தமிழ் மொழி

1. நமது தாய்மொழி தமிழ் மொழியாகும். தமிழ் என்னும் சொல்லுக்கு இனிமை என்பது பொருள். ஆகையால் தமிழ் மொழி மிகவும் இனிமையான மொழி என அறியலாம்.

2. இது மிகவும் பழமையான மொழியாகும். இது இன்ன காலத்தில் தோன்றியது என்று யாராலும் கூற முடியாது. முற்காலத்தில் தமிழ்மொழி தென் இந்தியா முழுமையும் பரவி யிருந்தது. பிறகு சிறிது சிறிதாகத்-தமிழ் மொழி பேசப்படும் பகுதி குறைந்துகொண்டே வந்துவிட்டது. இக்காலத்தில் -சென்னை இராச்சியத்-தின் பெரும்பகுதியில் தமிழ் மொழி வழக்கத்தில் இருக்கிறது.

3. நாம் எல்லாரும் தமிழைப் பேசுவதால் தமிழர்கள் என அழைக்கப்படுகிறோம். தமிழ் மொழி வழங்கும் பகுதி **தமிழகம்** அல்லது **தமிழ்நாடு** ஆகும். இம்மொழியில் முற்காலத்தில் உண்டான நூல்கள் **இயல் தமிழ், இசைத் தமிழ், நாடகத் தமிழ்** என மூன்று பிரிவுகளாகப் பிரிந்து விளங்கின. எனவே இது **முத்தமிழ்** எனவும் கூறப்படுகிறது,

4. தமிழ் நாட்டில் முற்காலத்தில் வாழ்ந்துவந்த சேர, சோழ, பாண்டியர் என்னும் மூவேந்தர்களும் மற்-றைய சிற்றரசர்களும் தமிழை வளர்க்க முயன்றார்கள் ; தமிழ்ப் புலவர்களை ஆதரித்து நூல்கள் இயற்றும்படி செய்தனர். பாண்டியர்கள் தம் தலைநகராகிய மதுரை-யில் சங்கம் அமைத்துத் தமிழை வளர்த்துவந்தனர். முதற்சங்கம், இடைச் சங்கம், கடைச்சங்கம் என்ற மூன்று சங்கங்கள் இருந்தன என்பது தெரிகின்றது.

5. முதற்சங்கத்திற்குத் தலைவராக விளங்கியவர் **அகத்தியர்**. அவரால் இயற்றப்பட்டது **அகத்தியம்** என்னும் இலக்கண நூல் ஆகும். அதுவே தமிழில் மிகவும் பழமையான நூல். அந்நூல் இப்பொழுது கிடைக்கவில்லை. முதற்சங்கத்தில் உண்டான மற்றைய நூல்களும் அழிந்துவிட்டன.

6. இடைச்சங்கத்திற்குத் தலைவராகத் **தொல் காப்பியர்** இருந்தார். அவரால் **தொல்காப்பியம்** என்-னும் இலக்கண நூல் இயற்றப்பட்டது, இந்நூல்தான் இக்காலத்தில் நமக்கு மிகவும் பழமையான நூலாகக்-கருதப்படுகின்றது. இச்சங்கத்தில் தோன்றிய மற்றைய நூல்கள் கிடைக்கவில்லை.

7. கடைச்சங்கத்திற்கு **நக்கீரர்** என்ற புலவர் தலைவராக விளங்கினர். இச்சங்க காலத்தில் தோன்றிய நூல்களில் மறைந்தவை போக, மற்றவற்றை எட்டுத்-தொகை, பத்துப் பாட்டு, பதினெண் கீழ்க்கணக்கு என்று வகைப்படுத்தியிருக்கிறார்கள். கடைச்சங்க காலம் ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டதாகும்.

8. கடைச்சங்கத்திற்குப் பிறகும் வேறு பல நூல்கள் தமிழில் தோன்றியிருக்கின்றன. சைவர், வைணவர், பௌத்தர், சமணர், கிறிஸ்தவர், இஸ்லாமியர் ஆகிய எல்லா மதத்தினரும் விரும்பக்கூடிய இனி-மையான பல நூல்கள் நம் தாய் மொழியாகிய தமிழில் இருக்கின்றன. நாம் அவற்றையெல்லாம் படித்துச்-சிறந்த முறையில் அறிவுபெற்று விளங்க வேண்டும்; **தமிழ் மொழியின் மேன்மைக்காகப் பாடுபட வேண்டும்.**

*அரும்பதங்கள் : இசைத்தமிழ், நாடகத்தமிழ், முத்தமிழ், இயற்றுதல், மேன்மை.*

### பயிற்சி

**I.** விடை எழுதுக :

1. தமிழ் என்னும் சொல்லுக்குப் பொருள் என்ன?
2. தமிழ் மொழி வழங்கும் பகுதி எது?
3. தமிழின் பிரிவுகள் யாவை?
4. முதற்சங்கத்திற்குத் தலைவர் யார்?
5. கடைச் சங்க நூல்கள் யாவை?

**II.** பொருத்தி எழுதுக :

| | |
|---|---|
| பாண்டியர் | அகத்தியத்தை இயற்றினர். |
| அகத்தியர் | கடைச் சங்கத்தின் தலைவர் |
| நக்கீரர் | தமிழை வளர்த்தவர். |

**III.** கோடிட்ட இடங்களை நிரப்புக :

1. கடைச்சங்க காலம்——— ———முற்பட்டது.
2. எட்டுத் தொகை, ———, ——— ஆகியவை சங்க நூல்கள் ஆகும்.
3. தமிழ் வழங்கும் பகுதி———ஆகும்.

**IV.** வாக்கியங்களில் பயன்படுத்துக :

இனிமையான - பிரிந்து - பழமையான - ஏறக்குறைய - மேன்மைக்காக.

# 3. திருவள்ளுவர்

1. " வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு,"

என்ற பாரதியார் பாடலை நீங்கள் அறிவீர்கள் அல்லவா? அப்பாடலில் பாரதியார் குறிப்பிடுகின்ற வள்ளுவர் இயற்றிய நூலே திருக்குறள் ஆகும். இது உலகில் உள்ள எல்லா மக்களுக்கும் பொதுவான உண்மைக் கருத்துக்களைத் தெரிவிக்கின்றது; பல மொழிகளில் பெயர்த்து எழுதப்பட்டிருக்கின்றது. எல்லா மதத்தைச் சேர்ந்த மக்களும் இந்நூலைப் படிக்கின்றார்கள்.

2. இதன் ஆசிரியரான திருவள்ளுவருடைய வரலாற்றைப் பற்றி நாம் தெளிவாக அறிய முடிய வில்லை. அவர் சுமார் ஆயிரத்து எண்ணூறு ஆண்டு களுக்கு முன்பு நம் தமிழ்நாட்டில் வாழ்ந்த பெரும்புல வர் ஆவர். அவர் சிறந்த தமிழறிவு உடையவராக வும், செய்யுட்கள் இயற்றுவதில் வல்லவராகவும் விளங்கினர்.




[By Courtesy S. S. Kazagam.]

3. ஆதியென்ற அம்மையாருக்கும், பகவன் என் பவர்க்கும் திருவள்ளுவர் மைந்தராகத் தோன்றினர் என்றும், வள்ளுவர் குலத்தைச் சேர்ந்த ஒருவரால் வளர்க்கப்பட்டார் என்றும் ஒருகதை வழங்கி வருகின்-றது. வள்ளுவர் எனப்படுவோர் பழந்தமிழ்நாட்டில் சிறப்போடு வாழ்ந்து வந்த குடியினர் ஆவர். அவர்-

கள் அரசனது பிறந்த நாள், திருமண நாள், முடிசூட்டும் நாள் ஆகிய சிறந்த நாட்களில் யானைமீது அமர்ந்து, முரசு கொட்டி, நகர் எங்கும் செய்தியை அறிவிக்கும் தொழிலை மேற்கொண்டவர்.

4. திருவள்ளுவருடைய இயற்பெயர் யாது என அறிய முடியவில்லை. **நாயனார், தேவர், பொய்யாமொழியார், பெருநாவலர்** முதலியன அவருடைய வேறு பெயர்கள் ஆகும். அவர் சென்னைக்கு அருகில் உள்ள **திருமயிலை** என்னும் ஊரில் வாழ்ந்து வந்தார். அதுவே இந்நாளில் **மயிலாப்பூர்** என்று வழங்கப்படுகிறது. திருவள்ளுவர் அங்கு இருந்து தம் இல்லற வாழ்க்கையைச் சிறப்பாக நடத்திவந்தார். **வாசுகி** என்னும் அம்மையார் வள்ளுவரின் மனைவியாக அமைந்து, அவரது வாழ்க்கையைச் செம்மைப்படுத்தினார். அந்த அம்மையார் கற்பிற் சிறந்து, தம் கணவருடைய கருத்து அறிந்து ஒழுகும் இயல்பினை யுடையவர்.

5. திருவள்ளுவர், செய்யும் தொழில்கள் யாவற்றிலும் சிறந்ததாகிய நெய்யும் தொழிலை மேற்கொண்டிருந்தார். அவர் இயற்றிய திருக்குறள் தமிழ் மொழியில் உள்ள **பதினெண் கீழ்க்கணக்கு** என்னும் தொகையைச் சேர்ந்ததாகும். குறள் என்னும் சொல்லுக்குக் குறுகியது என்பது பொருளாகும். இந்நூலில் மொத்தம் ஆயிரத்து முந்நூற்று முப்பது செய்யுட்கள் இருக்கின்றன. அவை யாவும் இரண்டு அடிகளைக் கொண்ட குறுகிய செய்யுட்களாக விளங்குகின்றன. ஆகையால்தான் இந்நூல் ‘குறள்’ என்னும் பெயரைப் பெற்று விளங்குகிறது. திரு என்பது இதன் சிறப்பைக் குறிக்கின்ற சொல்லாகும். **முப்பால், பொதுமறை, தமிழ்மறை** முதலியன இந்நூலின் வேறு பெயர்கள் ஆகும்.

6. திருவள்ளுவருடைய புகழ் உலகத்தின் பல பகுதிகளிலும் பரவியிருப்பதற்கு இந்நூலே காரணம் ஆகும். நாம் இந்நூலைப் படித்து, இதிற் கூறியுள்ளபடி நடத்தலே திருவள்ளுவருக்குச் செய்யும் தொண்டு ஆகும்.

*அரும்பதங்கள் : புலவர், வல்லவர், மைந்தர், இல்லற வாழ்க்கை, செம்மைப்படுத்தினர், குறள், தொண்டு.*

**பயிற்சி**

I. *விடை எழுதுக :*

1. *பாரதியார் வள்ளுவரைப் பற்றிக் கூறியுள்ளது யாது?*
2. *திருவள்ளுவருடைய பெற்றோர் யாவர்?*
3. *வள்ளுவர் எனப்படும் குலத்தினரின் தொழில் யாது?*
4. *வாசுகி அம்மையார் யார்?*
5. *திருக்குறளின் சிறப்பை எழுதுக.*

II. *கோடிட்ட இடங்களை நிரப்புக :*

1. *திருவள்ளுவர் சென்னைக்கு அருகில் உள்ள——— வாழ்ந்து வந்தார்.*
2. *குறள் என்பதற்கு——— என்பது பொருள் ஆகும்.*
3. *திருக்குறள்——— என்னும் தொகையைச் சேர்ந்தது.*
4. *திருவள்ளுவர் சுமார்———ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த பெரும் புலவர்.*

III. *எதிர்ப்பதங்கள் எழுதுக :*

*பிறப்பு ×*
*இல்லறம் ×*
*பெருமை ×*

IV. *பின்வரும் சொற்களை வாக்கியங்களில் பயன்படுத்துக:*

*பொதுவான, தெளிவாக, சிறப்போடு, கருத்து அறிந்து, பல பகுதிகளிலும், தொண்டு.*




# 4. பட்டு

1. மக்கள் பருத்தி, பட்டு, கம்பளி இவற்றினுல் ஆகிய ஆடைகளை அணிகின்றுர்கள். செல்வர்கள் உயர்ந்த விலையுள்ள ஆடைகளையும், எளியவர்கள் குறைந்த விலையுள்ள ஆடைகளையும் உடுக்கின்றுர்கள். பொதுவாக நம் நாட்டில் எல்லாரும் பருத்தி ஆடை-யை உடுக்கின்றுர்கள். ஏனெனில் பருத்தி ஆடைகள் விலையில் குறைந்தவை. மேலும் அவற்றைத் தினந்-தோறும் துவைத்துச் சுத்தம் செய்து கொள்ளலாம்.

2. பட்டாடைகள் விலை உயர்ந்தனவாதலின் அவற்றைச் செல்வரே அணிய முடியும். நம் நாட்டில் சாதாரணமான குடும்பத்திலுள்ள பெண்களும் பட்-டாடை உடுத்துவதிலேயே விருப்பம் கொள்கின்றனர். ஆதலால் நம் நாட்டில் பட்டுப் புடைவைகள் நெய்யப் படுகின்றன.

3. பட்டு நூல் ஒரு வகைப் புழுவின் வாய் எச்சிலிலிருந்து உண்டாகிறது. இப்புழு, தான் இருப்ப-தற்காகக் கூடு கட்டுகிறது. அக்கூடு அதன் வாய்

எச்சில் நூலாலானது. அக்கூட்டிலிருந்தே பட்டு எடுக்கப்படுகிறது.

4. பட்டுப்பூச்சி கடுகு போன்ற சிறிய உருவமுள்ள பல முட்டைகள் இடும். ஒரு தாய்ப் பூச்சி நானூறு முட்டைகளுக்கு மேலாக இடும். இம்முட்டைகள் சூரியனுடைய வெப்பத்தினுல் பொரியும். முட்டையிலிருந்து புழு வெளிப்படும். இது சாம்பல் நிறமாயிருக்கும். இது அரைக்கால் அங்குல நீளமுள்ளதாய் இருக்கும். இப்புழு முசுக்கட்டை இலையைத் தின்னும். ஒரு வாரத்தில் நன்ருய் வளர்ந்து விடும். பிறகு இது தன் மேல்தோலை உரித்துக் கொண்டு வெண்மை நிறத்தை அடையும். இவ்வாறு இப்புழு ஐந்து அல்லது ஆறு நாட்களுக்கு ஒரு முறையாக, நான்கு அல்லது ஐந்து முறை தோல் உரிக்கும். தோல் உரிக்க உரிக்க இதன் நிறமும் மாறிக் கொண்டே வரும். முதலில் சாம்பல் நிறத்தோடு காணப்பட்ட புழு, தோல் உரித்த பிறகு, பொன்னிறம் பெற்று விளங்கும். அந்த நிலையில் பட்டுப்புழு முசுக்கட்டை இலைகளைத் தின்பதை நிறுத்தி விடும்.

5. இவ்வாறு வளர்ச்சி பெற்ற புழு இரண்டு அங்குல நீளம் உடையதாக இருக்கும். இந்நிலையில் பட்டுப் புழு, தன் வாயின் கீழ்ப் புறத்திலிருந்து ஒரு வகைப் பிசினை வெளிப்படுத்துகின்றது. இந்தப் பிசினிலிருந்து நூல் நூற்று அந்நூலினுல் தன்னைச் சுற்றிக் கூடு கட்டிக் கொள்ளுகின்றது. இவ்வாருன கூட்டைக் கட்டிக் கொள்வதற்கு இப்புழுவிற்கு மூன்று நாட்கள் ஆகின்றன. புழு கூட்டிற்குள் இருக்கும்பொழுதும் ஒரு முறை தோல் உரித்துக் கொண்டு பொன்னிறம் அடைகின்றது. பட்டுப் புழு அந்தக் கூட்டிற்குள் இருபது

நாட்கள் உறங்கிக் கிடக்கின்றது. கடைசியில் இறகுகள் முளைத்துப் பட்டுப் பூச்சி ஆகின்றது.

6. பட்டு எடுப்பவர்கள் இப்பூச்சியை இறகு முளைத்து வெளியே பறக்கவிடுவதில்லை. இது தன்னைச் சுற்றிக் கொண்டு இருக்கின்ற கூட்டைக் கிழித்துக் கொண்டு வந்தால், பட்டு நூல் ஒன்றுக்கும் உதவாத தாகி விடும். ஆதலால் மக்கள் பூச்சியோடு கூட்டை வெந்நீரில் போட்டு விடுவார்கள். பூச்சி இறந்து விடும். பின் கூட்டை எடுத்து அதிலிருந்து பட்டு நூலை எடுக்கிறார்கள். நூலின் நுனியைக் கண்டு பிடித்து ஒழுங்காகச் சுற்றுவதென்பது எளிதான வேலையன்று. இரண்டாயிரம் பூச்சிகளைக் கொன்றால்தான் ஒரு பவுண்டு பட்டுக் கிடைக்கும்.

7. பட்டு உற்பத்தி முதலில் சீன நாட்டில்தான் தோன்றியது. பின் அது ஜப்பான் நாட்டிற்குப் பரவிற்று. ஐரோப்பியர் சீனாவிலிருந்துதான் பட்டுப்பூச்சிகளை வளர்த்துப் பட்டு உற்பத்தி செய்யும் முறையை அறிந்தனர். நம் இந்திய நாட்டில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே பட்டு ஆடை நெய்யும் வழக்கம் இருந்து வருகிறது. இக்காலத்தில் சீனா, ஜப்பான், துருக்கி, பிரான்ஸ் முதலிய தேசங்களில் பட்டு மிகுதியும் உண்டாக்கப்படுகிறது. தென்னிந்தியாவில் மைசூர், கொள்ளேகாலம், பெங்களூர் முதலிய இடங்களில் பட்டு உற்பத்தியாகிறது. மைசூர், பெங்களூர், கோயம்புத்தூர், சேலம், காஞ்சீபுரம், கூறைநாடு. மதுரை, பெத்தாபுரம் முதலிய இடங்களில் பட்டு நெசவுத் தொழில் வளர்ச்சியுற்று வருகின்றது.

8. பட்டாடையை நாம் அழகிற்காகவும் ஆசாரத்திற்காகவும் அணிகிறோம். இது உடம்பின் வெப்பத்தை வெளியே விடாது; வெளியில் உள்ள வெப்பத்

யைத் தேகத்தில் தாக்கவும் விடாது. பட்டு, குளிரையும் தடுத்துக் காக்கும் இயல்புடையது. இத்தொழிலை இக் காலத்தில் நமது நாட்டில் சிறிது சிறிதாக வளர்த்து வருகின்றனர்.

*அரும்பதங்கள் : விருப்பம் - வெப்பம் -பொரியும்-பொன் னிறம்-வெந்நீர்-எளிதான - ஆகாரம்-மதிப்பு.*

**பயிற்சி**

I. விடை எழுதுக :-

1. மக்கள் பருத்தி ஆடையை ஏன் அதிகமாக உடுக்கின் றனர்?
2. பட்டு நூல் எதனால் உண்டாகிறது?
3. பட்டுப் புழு எப்படி இருக்கும்?
4. பட்டுப் புழு எப்போது பட்டுப் பூச்சி ஆகின்றது?
5. பட்டு நூல் எவ்வாறு எடுக்கப்படுகின்றது?
6. நம் நாட்டில் பட்டு உற்பத்தியாகும் இடங்களை எழுதுக.

II. கோடிட்ட இடங்களை நிரப்புக :-

1. பட்டுப் புழு ——— தின்னும்.
2. பட்டு உற்பத்தி முதலில் ——— தோன்றியது.
3. பட்டாடை உடம்பின் ——— வெளியே விடாது.
4. பட்டுப் புழுவின் கூடு ——— இருந்து உண்டாகிறது.

III. பின்வரும் சொற்களை வாக்கியங்களில் பயன்படுத்துக :-

சாதாரணமாக, பொதுவாக, உயர்ந்த, ஒழுங்காக, முதலில், மிகுதியும்.

IV. எதிர்ப் பதங்கள் எழுதுக :-

1. உயர்ந்த ×
2. எளிய ×
3. சிறிய ×
4. மதிப்பு ×
5. கீழ்ப்புறம் ×



# 5. பொங்கல் விழா

1. ஒவ்வொரு நாட்டிலும் மக்கள் விழாக்கள் பல வற்றைக் கொண்டாடுகிருர்கள். அவற்றில் சில மதத் தொடர்பு உடையனவாகவும், சில சமூகத் தொடர்பு உடையனவாகவும் இருக்கின்றன. மக்கள் நாள்தோறும் பாடுபட்டு உழைக்கிருர்கள். எப்பொழுதும் உழைத்து உழைத்து அலுத்த உள்ளத்திற்கு உற்சாகம் வேண்டு மல்லவா? எளிய மக்கள் எக்காலத்திலும் மிகுந்த செலவு செய்து, உற்ருர் உறவினரோடு கூடி விருந் துண்டு மகிழ முடியாது. எனவே ஓர்ஆண்டில் சில குறிப்பிட்ட நாட்களில் பலருடன் கூடி மகிழ்வதற்காக மக்கள் விழாக்களைக் கொண்டாடுகிருர்கள்.

2. நம் தமிழ்நாட்டில் பற்பல விழாக்கள் கொண்-டாடப்படுகின்றன. அவற்றில் மிகவும் முக்கியமானது பொங்கல் விழா. இதனைத் தமிழ் மக்கள் சிறப்பாகக் கொண்டாடுகின்ருர்கள். இது தமிழர் விழா ஆகும். இவ்விழா உழவர்களுக்கு மிகச் சிறந்த விழாவாகும். ஆனி, ஆடி மாதங்களில் தொடங்கும் பயிர்த் தொழில்

மார்கழி, தை மாதங்களில் முடிவடைகிறது. பயிர்த்-தொழிலுக்குத் தேவையானவை மழையும் வெப்பமும் ஆகும். மழையைத் தருபவன் இந்திரன்; வெப்பத்தைத் தருபவன் சூரியன்.மார்கழியில் நெல் அறுவடையாகி உழவுத் தொழில் இனிது முடிவடைந்தவுடன், அத் தொழில் சிறக்க உதவிய தெய்வங்களுக்கு நன்றியறிதலைக் காட்டும் பொருட்டுப் பொங்கல் விழா கொண்டாடப்படுகிறது.

3. பொங்கல் விழா, போகி, பெரும் பொங்கல், மாட்டுப் பொங்கல், காணும் பொங்கல் என்று நான்கு நாட்கள் வரை கொண்டாடப்படுகின்றது. போகி என்பது இந்திரனுக்கு ஒரு பெயர் ஆகும். பயிர்களுக்கு மழையைத் தந்து உதவிய இந்திரனை வணங்கும் நாள் போகி விழாவாகும். மக்கள் பொங்கலுக்கு முன்பே வீடுகளைப் பழுது பார்த்து வெள்ளை யடித்துச் சுத்தம் செய்து வைப்பார்கள். போகி விழாவன்று விடியற் காலையில் வீட்டு வாயிலில் கூடை, முறம் போன்ற பயனற்ற பழைய பொருள்களைப் போட்டு எரிப்பார்கள். அந்த எரி-யைச் சூழ்ந்திருந்து பெரியவர்களும் சிறியவர்களும் பறை கொட்டிப் பாடி மகிழ்வார்கள். இரவில் தின்-பண்டங்கள் செய்து படைத்து இந்திரனை வழிபடுவார்கள். மார்கழி மாதக் கடைசி நாளில் போகிவிழா கொண்டாடப்படும். அந்த நாளில் யாவரும் எண்-ணெய் தேய்த்துத் தலை முழுகுவர்.

4. மறுநாளாகிய தை மாதத்தின் முதல் நாளில் பெரும் பொங்கல் கொண்டாடப்படுகிறது. அன்று வீடுகளை அலங்கரிப்பார்கள். புதுப் பானையில் பொங்கல் பொங்குவார்கள். சர்க்கரைப் பொங்கல், வெண் பொங்-கல் என இருவகைப் பொங்கல் செய்வார்கள். "பொங்கலோ பொங்கல்," என்று கூவி மகிழ்வார்கள்.

பொங்கல், கரும்பு, பழம், தேங்காய் முதலியனவற்றைச்-சூரியனுக்குப் படைத்து வழிபடுவார்கள். அன்று சிலர் புத்தாடைகளை வாங்கி உடுத்திக்கொள்வதும் உண்டு. அன்று யாவரும் மகிழ்ந்து உற்றார் உறவினர்களோடு பொங்கலை உண்பர்.

5. தை மாதத்தின் இரண்டாம் நாளில் மாட்டுப்-பொங்கல் விழா கொண்டாடப் படுகிறது. பயிர்த்-தொழிலைச் செய்ய மாடு வேண்டுமல்லவா? மாடு உழ-வர்களுக்குப் பல வகைகளில் உதவி புரிகின்றது. அது உழவர்களுக்கு மகத்தான செல்வம். 'மாடு'என்பதற்குச்-செல்வம் என்னும் பொருள் உண்டு. அந்நாளில் உழவர் கள் மாடுகளை நன்றாகக் குளிப்பாட்டி அவற்றின் கொம்புகளுக்குச் சாயம் பூசி அலங்கரிப்பார்கள்; மாடு களின் கழுத்தில் மாலைகளும் புத்தாடைகளும் அணி-விப்பார்கள்; நெற்றியில் மஞ்சள், குங்குமம், சந்தனம் பூசுவார்கள்; வெண் பொங்கல் பொங்கி அதனையும் பழங்களையும் மாடுகளுக்குக் கொடுப்பார்கள்; பிறகு அவற்றை அலங்கரித்துத் தெருக்களில் ஓட்டிக் கொண்டு செல்வார்கள்; மாடுகளை ஓடவிட்டு வேடிக் கை பார்த்து மகிழ்வார்கள்.

6. அதற்கு அடுத்த நாள் காணும் பொங்கல் ஆகும். அன்று மக்கள் தங்கள் உற்றார் உறவி னர்களைக் காணச் செல்வார்கள். பொங்கல் விழாவின் போது செல்வர்கள் வேலையாட்களுக்குப் பரிசளிப்பார்-கள். முதலாளிகள் பண்ணையாட்களுக்கு ஆடை, பணம் முதலியன அளிப்பார்கள். இவ்வாறு பொங்கல் விழா நான்கு நாட்கள் நடைபெறும். இது தமிழ்நாட்டுக்கு உரிய விழா.

உழவுத் தொழிலின் சிறப்பை விளக்குகின்ற இவ்-விழாவைத் தமிழ் மக்களாகிய நாம் சிறப்புடன் கொண் டாட வேண்டும்.

அரும்பதங்கள் : தொடர்பு, உற்ருர் உறவினர், புத்தாடைகள், அலங்கரித்தல், உழைத்து, விருந்துண்டு, பண்ணையாட்கள், பாடுபட்டு, பயனற்ற, சூழ்ந்து.

**பயிற்சி**

I. விடை எழுதுக :

1. மக்கள் ஏன் விழாக்களைக் கொண்டாடுகிறர்கள்?
2. தமிழர் விழா என்று எது ஏன் கூறப்படுகிறது?
3. பொங்கல் விழா எதற்காகக் கொண்டாடப்படுகிறது?
4. பொங்கல் விழா எத்தனை நாட்கள் கொண்டாடப்படுகிறது?
5. போகி விழாவன்று மக்கள் என்ன செய்கிறர்கள்?
6. பெரும் பொங்கல் எவ்வாறு கொண்டாடப்படுகிறது?
7. உழவர்கள் மாடுகளுக்கு எப்பொழுது பொங்கல் இடுகிறர்கள்?

II. கோடிட்ட இடங்களை நிரப்புக :

1. போகி என்பது——ஒரு பெயர் ஆகும்.
2. தை மாதத்தில்——விழா கொண்டாடப்படுகிறது.
3. மாடு என்பதற்கு——என்றும் பொருள் உண்டு.
4. காணும் பொங்கலன்று——காணச்செல்வார்கள்.

III. வாக்கியங்களில் பயன்படுத்துக :

நாள்தோறும், உழைத்து உழைத்து, பற்பல, சிறப்பாக, முக்கியமானது, மகிழ்ந்து, பலவகைகளில், வேடிக்கை.

IV. எதிர்ப்பதங்கள் எழுதுக :

1. பல ×
2. சுத்தம் ×
3. பழைய ×
4. பெரியோர் ×

# 6. தைப் பொங்கல்

பொங்கல்!இன்று பொங்கல்
புதுவருஷப் பொங்கல்!
மங்கலங்கள் பொங்க
மனையிலிடும் பொங்கல்! 1

சந்தனத்தைக் குழைத்துத்
தரையைமெழு கிடுவோம்;
சிந்துரத்தாற் கோலம்
சேர அதில் அமைப்போம். 2

எங்கள்கண பதியை
எழுந்தருளச் செய்வோம்;
மங்கலநற் பொருள்கள்
வரிசைகொள வைப்போம். 3

வாசமிக வீசும்
மலர்எடுத்து வருவோம்;
நேசமொடு வீசி
நின்றுதொழு திடுவோம். 4

இலைகள்விரித் திடுவோம்;
இளநீர்கள் வைப்போம்;
குலைகுலையாய்க் கனிகள்
கொண்டுவந்து வைப்போம். 5

பச்சைமஞ்சள் இஞ்சி
படைபடையாய் வைப்போம்;
இச்சைதரு கரும்பும்
இடையிடையே நடுவோம். 6

அகில் விறகை மாட்டி,
அடுப்பில் எரிமூட்டி,
பகவன் அடி போற்றிப்
பானையேற்றி வைப்போம். 7

தங்கத்தினால் பானை,
தரளம் என அரிசி,
பொங்கலும்பால் பொங்கல்
புத்தமுதப் பொங்கல். 8

பானையுமே பொங்கிப்
பால்வடியும் வேளை
வானம்எழக் குரவை
வழங்கி வலம் வருவோம். 9

கடவுட்கமு தளிப்போம்;
காகத்துக்கும் இடுவோம்;
உடனிருந்தெல் லோரும்
உண்டு மகிழ்ந்திடுவோம்! 10

— *கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை*

*அரும்பதவுரை*

1. *மனை - வீடு ; மங்கலம் - நல்ல செயல்.*
2. *சிந்தூரம் - செந்நிறமான பொட்டு.*
3. *கணபதி - விநாயகர்.*
4. *வாசம்-வாசனை (மணம்) ; நேசம் - அன்பு ;*
5. *கனி - பழம்.*
6. *இச்சை தரும் - விருப்பத்தைக் கொடுக்கின்ற.*
7. *அகில் - அகிற் கட்டை ; மாட்டி - இட்டு (அமைத்து) பகவன் - இறைவன்.*
8. *தரளம் - முத்து ; புத்தமுதம் - புதுச் சோறு.*




# 7. பரமார்த்த குரு கதை

1. முன் ஒரு காலத்தில் பரமார்த்தர் என்ற ஒரு குரு இருந்தார். அவருக்கு ஐந்து சீடர் இருந்தனர். அவர்கள் குருவைவிட்டு அகலாமல் நெருங்கி இருந்து, அவருக்கு உதவி புரிந்து வந்தனர். ஒருசமயம் பரமார்த்தர் மற்றைய ஊர்களிலுள்ள தம் மாணவர்களைப் பார்த்து வரும் பொருட்டுத் தம்முடன் இருந்த மாணவர்களோடு புறப்பட்டார். எல்லாரும் கால்நடையாகச் சென்றனர். பரமார்த்தர் வயதானவர். அவர்கள் சென்ற வழியில் எதிரில் ஒருவன் குதிரைமேல் ஏறிக்கொண்டு வந்தான். "நம் குருவுக்கும் குதிரை ஒன்றிருந்தால் அவர் நடந்து வருந்தாமல் பிரயாணம் செய்யலாம்," என்று சீடர்கள் ஒருவர்க்கொருவர் பேசிக்கொண்டனர். அதனைக் கேட்ட குரு, "குதிரை வாங்குவதற்கு இப்போது பணம் இல்லை. பணம் வந்த பிறகு பார்த்துக்கொள்வோம்," என்று கூறி விட்டார்.

2. குருவும் சீடரும் ஒரு சோலையில் தங்கினர். அச்சோலையின் பக்கத்தில் ஓர் ஏரியும், ஏரியின் கரையில் ஐயனுர் கோயிலும் இருந்தன. ஐயனுர் கோவிலின்முன் பெரிய குதிரை ஒன்று மண்ணுல் செய்யப்பட்டு அமைக்கப்பட்டிருந்தது, அக்குதிரையின் நிழல் ஏரி நீரில் விழுந்தது. நீர் கொண்டுபோக வந்த சீடர்கள் குதிரையின் நிழலை நீரில் கண்டனர். குதிரை நீரில் நிற்கின்றது என்று எண்ணினர். அதனைப் பிடித்துக் கொண்டு சென்று குருவுக்குக் கொடுக்கலாம் என்று பேசிக்கொண்டனர். அவர்கள் குதிரையைப் பிடிப்பது எப்படி என்று ஆராய்ந்தனர்.

3. "குதிரைக்குக் கொள்ளின்மீது பிரியம் அதிகம். ஆதலால் கொள்ளை வேகவைத்துக் கொண்டு வந்தால் குதிரை மேலே வரும். பிடித்துக்கொள்ளலாம்," என்றுன் ஒருசீடன். இரண்டாம் சீடன், "இங்குக் கொள்ளுக்கு எங்கே போவது? புல்லைக்கொண்டு வைத்தால் தின்னவரும்; பிடித்துக் கொள்ளலாம்," என்று கூறினுன். மூன்றும் சீடன், "குதிரை கனைப்பது போல் நாம் கனைத்தால், அது மேலே வரும்; அப்போது பிடித்துக் கொள்ளலாம்," என்று சொன்னுன். நான்காம் சீடன், "எருமையை நீரில் விரட்டிவிட்டால் அது தண்ணீரைக் கலக்கும்; அப்போது குதிரை வெளியே வரும்; பிடித்துக் கொள்ளலாம்," என்றுன். ஐந்தாம் சீடன், "அவை எல்லாம் இயலாதவை. மீன் பிடிப்பது போல் பிடித்துவிடலாம்," என்றுன். "அதுவே சரி," என்று அனைவரும் ஒப்புக்கொண்டனர்.

4. அவர்கள் தம் கையிலிருந்த மூங்கில் தடியைத் தூண்டிற் கோலாக்கினர்; மேலே போட்டிருந்த பழந்துணியைக் கோலின் நுனியில் முடிந்தனர். மற்றொரு நுனியில் அரிவாளைத் தூண்டில் முள்ளாக

அமைத்தனர். தாம் உண்ணக் கொண்டுவந்த பழஞ்சோற்று மூட்டையை இரையாக அமைத்தனர். தூண்டிலைத் 'தொப்'பென்று நீருக்குள் போட்டனர். தண்ணீரில் அலைகள் உண்டாயின. அதனால் குதிரை நெளிந்து ஓடுவதுபோலத் தோன்றிற்று. அலை அடங்கியதும் நீரினுள் இருந்த சோற்று மூட்டையைப் பெரிய மீன்கள் கௌவி இழுத்தன. அரிவாள் கோரைப் புல்லில் சிக்கிக்கொண்டது. குதிரை அகப்பட்டுவிட்டது என்று கருதித் தூண்டிற்கோலை ஐவரும் பிடித்து இழுத்தனர். பழந்துணி அறுந்துபோகவே அவர்கள் மல்லாந்து விழுந்தனர்.

5. அச்சமயம் அவ்வழியே வழிப்போக்கன் ஒருவன் வந்தான். ஐவரும் மல்லாந்து கிடந்ததைப்பார்த்து விஷயம் என்ன என்று கேட்டறிந்தான். அவர்கள் மூடத்தனத்திற்கு அவன் மிக இரங்கித் தன் மேலாடையால் கரையில் இருந்த மண்குதிரையை மூடினான். நீரில் குதிரை காணப்படவில்லை; அத்துணியை எடுத்ததும் நீரில் குதிரை மீண்டும் காணப்பட்டது. அதனால் ஐவரும் கரையிலிருந்த மண்குதிரையின் நிழலே நீரில் தோன்றியது என அறிந்தனர். அந்த வழிப்போக்கன், சீடர்கள் குருவின்மேல் வைத்திருந்த அன்பை அறிந்து, அவர்களைத் தன் ஊருக்கு அழைத்துச் சென்று, தன்னிடமிருந்த நொண்டிக் கிழக் குதிரை யொன்றை அவர்களுக்குக் கொடுத்தான். அக்குதிரை சிறிது ஊனமுள்ளதாயினும் குருவைத் தாங்கிச் செல்லவல்லதே என்று சீடர்கள் ஐவரும் நினைத்து அக்குதிரையுடன் குருவினிடம் வந்தார்கள். அவர்கள், நடந்த நிகழ்ச்சிகளை அவரிடம் கூறினார்கள். குரு வழிப்போக்கனது அறிவையும், நற்குணத்தையும் புகழ்ந்து பேசினார். பின்பு அவர் குதிரைமேல் ஏறிக்-

கொள்ளச் சீடர்கள் அவரைத்தொடர்ந்து சென்றனர். அவர்கள் பல ஊர்களுக்கும் சென்று, சில நாட்களுக்குப் பின் தம் ஊருக்கு வந்து சேர்ந்தார்கள்.

*அரும்பதங்கள் : சீடர்கள் - பிரயாணம் - ஆராய்ந்தனர் - தூண்டில் - இரை - அரிவாள் - மல்லாந்து - மூடத்தனம் - இரங்கி – ஊனமுள்ள - நிகழ்ச்சி.*

**பயிற்சி**

I. விடை எழுதுக :

1. சீடர்கள் குதிரைமேல் சென்றவனைக் கண்டபோது என்ன நினைத்தார்கள் ?
2. அவர்கள் ஏரி நீரில் கண்டது யாது ?
3. சீடர்கள் ஐவரும் குதிரையைப் பிடிப்பதற்காகக் கூறிய உபாயங்கள் யாவை ?
4. கடைசியில் அவர்கள் குதிரையைப் பிடிக்க எம்முறையை மேற்கொண்டார்கள் ?
5. சீடர்கள் ஏன் கீழே விழ நேர்ந்தது ?
6. வழிப்போக்கன் எவ்வாறு அவர்களுடைய அறியாமையைப் போக்கினான் ?

II. சந்தர்ப்பம் கூறுக :

1. குதிரை வாங்குவதற்கு இப்போது பணம் இல்லை.
2. அவை யெல்லாம் இயலாதவை. மீன் பிடிப்பது போல பிடித்துவிடலாம்.
3. சிறிது ஊனமுள்ளதாயினும் குருவைத் தாங்கிச் செல்ல வல்லதே.

III. வாக்கியங்களில் பயன்படுத்துக.

எல்லாரும், கால் நடையாக, இரங்கு, நினைத்து, நிகழ்ச்சியை, நற்குணம்.



# 8. மூங்கில்

1. மக்கள் வாழ்க்கைக்குப் பயன்படுவனவாகிய பொருள்கள் பலவற்றுள் மூங்கிலும் ஒன்றாகும். மூங்கில், கரும்பு, நாணல், பேய்க்கரும்பு என்பன ஓர் இனத்தைச் சேர்ந்தவை. வெப்பமும் மழையும் மிக்க காடுகளிலும், மலைகளின்மீதும் அது அதிகமாக வளரும். இந்தியா, சீனா, ஜப்பான் முதலிய நாடுகளில் மூங்கில் மிகுதியாக வளர்கின்றது. அது மக்களுக்குப் பலவகையில் பயன்படுகிறது.

2. மூங்கில் வண்டல் மண் படிந்த செழிப்பான இடங்களில் உயர்ந்து வளருமாதலால் ஆற்றங்கரைகளில் மூங்கில் புதர்கள் ஏராளமாக இருப்பதைக் காணலாம். வீட்டுப் புறக்கடைகளிலும் மூங்கில் புதர்களை வைத்து வளர்ப்பார்கள். மூங்கிலில் இருவகை உண்டு. உட்பக்கம் ஒன்றுமில்லாது குழைபோல இருப்பது ஒரு-

வகை மூங்கிலாகும். உட்பகுதி கெட்டியாக இருப்பது மற்றொரு வகை மூங்கிலாகும். உள்ளே துவாரம் உள்ள மூங்கில் 'போல் மூங்கில்' என்றும், உள்ளே கெட்டியாக இருக்கும் மூங்கில் 'கெட்டி மூங்கில்' என்றும் கூறப்படும். வாழையின் அடியில் கன்றுகள் தோன்றுவதுபோல, மூங்கிலின் அடியிலும் சிறுசெடிகள் தோன்றும். ஆதலால் ஒரு மூங்கில் செடியை வைத்தால் விரைவில் அது ஒரு புதராகப் பெருகிவிடும்.

2. மூங்கிலுக்குச் சாம்பல் நல்ல எரு. மூங்கில் இலை கரும்பின் இலைபோல் சொர சொரப்பாயும், கூர்மையாகவும் இருக்கும். மூங்கிலின் கிழங்கு, முளை, அரிசி என்பனவற்றை மக்கள் உண்பர். மூங்கில் அரிசி கோதுமையைப் போன்றிருக்கும். மலையில் வாழும் மக்களுக்கு மூங்கில் பலவகையில் பயன்படுகின்றது. மூங்கில் புதருள்ள இடத்தில் பாம்புகள் அதிகமாக வசிக்கும். காலையில் பூமியைத் தொடுவதுபோன்று தொங்கிக்கிடக்கும் மூங்கில்கள், வெயில் ஏற ஏற உயர்ந்து நிமிர்ந்து நிற்கும். இரவில் மீண்டும் பூமியை நோக்கி வளைந்துவிடும். மூங்கிலுக்குக் கரும்பைப்போல் கணுக்கள் உண்டு. ஆதலால் 'வரை' என்னும் சொல் மூங்கிலையும் அம்மூங்கில் வளரும் மலையையும் குறிக்கிறது. கழை, வேய் என்பன மூங்கிலின் வேறு பெயர்கள்.

4. மூங்கில் மனிதனுக்குப் பலவகைகளில் பயன்படுகின்றது. கிராமங்களில் நடைபெறும் குடிசைத் தொழிலுக்கு மிகுதியாகப் பயன்படுகிறது. கலியாண வீடுகளில் மூங்கிலைக் கொண்டு பந்தல் போடுகிறார்கள். மாட்டுத் தொழுவம், குடிசை இவை அமைக்க மூங்கில் பயன்படுகிறது. பருத்த கெட்டியான மூங்கில்களை வாரைகளாகவும் தூண்களாகவும் பயன்படுத்துகிறார்கள். பல்லக்கின் மேல்விதானத்தை

அமைக்க மூங்கிலைப் பயன்படுத்துகிறார்கள். பல்லக்குத் தூக்கும் கொம்பாகவும் இது பயன்படுத்தப்படுகிறது. மூங்கிலைப் பிளந்து, சிம்புகளாக்கித் தட்டி, கூடை, முறம், பாய், பெட்டி முதலியன செய்கிறார்கள். நாற்காலி, மேசைகள்கூட மூங்கிலால் செய்யப்படுகின்றன. சிறு ஓடைகளையும், வாய்க்கால்களையும் கடக்க மூங்கிலினால் பாலம் அமைத்தல் நாட்டுப்புறங்களில் வழக்கமாக இருக்கிறது. மூங்கில் இன்னும் எத்தனையோ வகைகளில் பயன்படுகிறது.

5. வில், அம்பு, ஈட்டி முதலிய ஆயுதங்கள் செய்ய மூங்கில் பயன்படுகின்றது. மூங்கிலை உடைத்து ஊறவைத்து, அரைத்துப் பசையாக்கிக் காகிதம் செய்கின்றனர். மூங்கில் இலை மருந்தாகப் பயன்படுகின்றது. மூங்கில் குருத்தை உடைத்தால் அதிலிருந்து ஒரு வகைப்பால் வரும். அந்தப் பால் கண்நோயை நீக்குகின்றது. குடியானவர்களுக்கு மூங்கில் பெரிதும் பயன்படுதலால், அவர்கள் தோட்டங்களின் வேலி ஓரத்திலும், வீட்டின் பின்புறத்திலும் மூங்கிலை வைத்து வளர்க்கிறார்கள். அவர்கள் மூங்கிலைக் கொண்டு ஓய்வு நேரங்களில் பல பொருள்களைச் செய்து விற்றுத் தம் வருவாயைப் பெருக்கிக்கொள்கின்றார்கள்.

*அரும்பதங்கள் : புல்லினம், புதர்கள், புறக்கடை, குழை, சொரசொரப்பு, வேய், வரை, தொழுவம், பாடம் செய்தல், சிம்பு, வருவாய்.*

**பயிற்சி**

I. **விடை எழுது.**

1. புல்லினத்தைச் சேர்ந்தவை யாவை?
2. மூங்கிலின் வகைகள் எவை?

3. மூங்கிலின் வேறு பெயர்கள் யாவை?
4. மூங்கில் பயன்படும் விதங்களில் நான்கினை எழுதுக.
5. இதிலிருந்து எவ்வாறு காகிதம் செய்யப்படுகின்றது?

II. கோடிட்ட இடங்களை நிரப்புக :

1. இந்தியா, ———ஜப்பான்,——— முதலிய நாடுகளில் மூங்கில் மிகுதியாக வளர்கின்றது.
2. மூங்கிலுக்கு———நல்ல எரு.
3. மூங்கில் அரிசி———போன்று இருக்கும்.
4. மூங்கிலின் குருத்தை உடைத்தால் அதிலிருந்து——— ———வரும்.

III. வாக்கியங்களில் பயன்படுத்துக :

பலவற்றுள், ஏராளமாக, வழக்கமாக, நாட்டுப்புறங் களில், ஓய்வு நேரங்களில்.

IV. எதிர்ப் பதங்கள் எழுதுக :

1. இரவு ×
2. கிழவர்கள் ×
3. பின்புறம் ×
4. வெப்பம் ×
5. விற்றல் ×

## 9. நல்ல நட்பு நன்மை பயக்கும்

1. **மகத தேசத்தில் சண்பகவனம்** என்ற ஒரு காடு இருந்தது. அக்காட்டில் மான் ஒன்றும் காகம் ஒன்றும் நட்பாயிருந்தன. மான் அக்காட்டில் எங்கும் சுற்றித் திரிந்து செழுமையான புல்லைத் தின்று, தெள்ளிய நீரைக் குடித்து மிகவும் கொழுத்திருந்தது. அந்த மானை ஒரு நரி பார்த்தது. "இந்த மான் நன்ருய்க் கொழுத்திருக்கிறது. நமக்கு நல்ல உணவாகும். ஆனுல் இதனை நாம் வெல்ல முடியாது. ஆதலால் வஞ்சனையால் கொன்று தின்னவேண்டும்," என்று நரி தனக்குள் யோசித்துக்கொண்டது.

2. ஒரு நாள் நரி மானின் அருகே வந்து, "நண்பா, சுகமா?" என்று கேட்டது. அதைக் கேட்ட மான், "நீயார்?" என்றது. அதற்கு நரி மிகவும் பணிவோடு, "நண்பா, நான் இக்காட்டில் வாழ்பவன். எனக்கு இக்காட்டில் யாரும் துணையில்லை. நான் தனியே திரிந்துகொண்டிருந்தேன். இன்று உன்னைக் கண்டது முதல், உன்னிடம் நட்புக்கொண்டு வாழ ஆசைப்படுகிறேன்," என்று கூறியது.

3. மான், "நல்லது," என்று சொல்லிற்று. அன்று மாலைப் பொழுதில் நரியும் மானும் காகம் இருந்த இடத்திற்கு வந்தன. அங்குச் சண்பக மரத்தின் மேல் காகம் இருந்தது. மான் நரிக்குக் காகத்தைக் காண்பித்து, "இவன் என் அருமையான நண்பன்," என்றது. காகம் அதனைக்கேட்டு, மானை நோக்கி, "உன் அருகில் நிற்பவன் யார்?" என்று கேட்டது. மான், "இவன் இந்தக் காட்டில் வசிப்பவன். இவன் இன்று என்னுடன் நட்புக்கொள்ள வந்து இருக்கின்ருன்." என்றது. அதற்குக் காகம், "புதிதாக வந்த

பழக்கம் இல்லாதவனை நம்பலாகாது. ஒருவனுடைய குலத்தையும், நடத்தையையும் அறியாமல் அவனுக்கு இடங்கொடுத்தால் பின் துன்பமே உண்டாகும்,' என்றது.

4. அதனைக் கேட்ட நரி, "ஒருவனுடைய இயல்பை அவனுடன் நட்புக்கொள்ளாமல் எப்படி அறிய முடியும்? நல்லோர் பிறர் சுபாவத்தை நோக்குவதில்லை. அவர்களுடைய நட்பு ஒருவரையொருவர் கண்ட மாத்திரத்தில் உண்டாகிறது," என்றது. மான் அதைக்கேட்டுக் காகத்தைப் பார்த்து, "நீ எனக்கு நண்பனாய் இருப்பதுபோல இவனும் இருக்கட்டும்; நீ தடை சொல்லாதே," என்றது.

5. பின்னர் அவை மூன்றும் நட்புக்கொண்டு வாழ்ந்து வந்தன. ஒரு நாள் நரி மானைப்பார்த்து, "நண்பா, இக்காட்டை அடுத்திருக்கும் வயலில் பயிர் செழுமையாக வளர்ந்திருக்கிறது. காட்டுகிறேன், வா," என்று கூறி, அழைத்துக்கொண்டு போய்க் காட்டிற்று. மான் அன்று முதல் அந்த வயலில் பயிரை மேய ஆரம்பித்தது. ஒரு நாள் மான் பயிரை மேய்ந்து கொண்டிருந்தபொழுது வயலுக்குரியவன் பார்த்து விட்டான்; அடுத்த நாள் வயலுக்கருகே வலையைக் கட்டி வைத்தான். வழக்கம்போல் அங்கு வந்த மான் வலையில் அகப்பட்டுக்கொண்டது. அப்போது மான் தன்னை நரிநண்பன் விடுவிப்பான் என்று எண்ணி, நரியை எதிர் நோக்கிக்கொண்டிருந்தது. மான் வலையில் அகப்பட்டுக்கொண்டு இருக்கக் கண்ட நரி, தன் எண்ணம் நிறைவேறியதென்று மகிழ்ந்து சும்மா இருந்தது.

6. மான் நரியைப் பார்த்து, "ஏன் சும்மா நிற்கிறாய்? என்னைக் கட்டியிருக்கும் வலையை அறுத்து

என்னை விடுவி. ஆபத்தில் உதவுபவன் அன்றோ சிநே-
கிதன்? துன்பம் உண்டான காலத்தில் உடையை இழந்-
தவன் கைபோல, நண்பர் உதவுவார்கள் என்று பெரி-
யோர்கள் கூறியுள்ளாரன்றோ!'' என்றது. நரி அதைக்
கேட்டு, ''நண்பா, உனக்கு உண்டாயிருக்கும் துன்-
பத்தை அறிந்து வருந்துகிறேன். இன்று என்னுடைய
விரத நாள்; ஆதலால் நான் தோல் வலையைத் தொட-
மாட்டேன். நாளையாயின் நீ என்ன சொன்னாலும் செய்-
வேன். நண்பனுக்காக உயிரையும் கொடுப்பவன் நான்,''
என்று கூறி விட்டு, ஓடிச்சென்று மானுக்குத் தெரி-
யாமல் மறைந்துகொண்டது.

7. அன்றிரவு மான் வாராமையால் அதற்கு ஏதோ ஆபத்து உண்டாயிருக்க வேண்டும் என்று காகம் எண்ணியது. அது மானைத் தேடிச்சென்று அதைக் கண்டது. காகம் மானைப் பார்த்து ''உனக்கு இத்துன்பம் எப்படி வந்தது? உன் நண்பன் நரி எங்கே?'' என்று கேட்டது. அதற்கு மான், ''உண்மை நண்பனான உன் சொல்லைக் கேளாமையால் இக்கேடு வந்தது. நரி என் இறைச்சியைத் தின்னப் பக்கத்தில் எங்கேனும் ஒளிந்துகொண்டிருப்பான்,'' என்றது. காகம் அதனைக் கேட்டு வருந்தி, ''தனக்கு நன்மை செய்கிற நண்பர் சொல்லைக் கேளாதவர்க்குத் துன்பம் விரைவில் வரும். அவர்கள் பகைவர்கட்குக் களிப்பை உண்டாக்குகிறார்-கள்,'' என்று கூறியது. அப்போது வயலுக்குரியவன் கையில் தடியோடு வந்து விட்டான். அப்போது காகம், ''நண்பா, இப்போது நீ இறந்தாற்போல் மூச்சை அடக்கிக் கொண்டு கிட; நான் உன் கண்ணைப் பொய்-யாகக் குத்துகிறேன். அவன் நீ இறந்தனை என்று கருதி வலையை அப்புறப்படுத்துவான். அதையறிந்து நான் கத்துகிறேன்; நீ ஓட்டம் பிடி,'' என்றது.

8. காகம் சொன்னபடியே மான் செய்தது. காகம், மானின் கண்ணைப் பொய்யாகக் குத்திக்கொண்டிருந்தது. வயலுக்குரியவன் மான் இறந்தது என்று எண்ணி, வலையைச் சுருட்டிக்கொண்டிருந்தான். உடனே காகம் கத்திற்று; மான் ஓட்டம் பிடித்தது. அதைப் பார்த்த வயலுக்குரியவன் தன் கையிலிருந்த தடியை வேகமாய் வீசி எறிந்தான். அத்தடி மறைந்திருந்த நரியின் மேல் பட, நரி இறந்தது. பின் காகமும் மானும் இன்பமாய் வாழ்ந்தன.

அரும்பதங்கள் : தெள்ளிய, கொழுத்திருந்தது, வெல்ல முடியாது, வஞ்சனை, நண்பா, பணிவோடு, சண்பகமரம், அருமையான, சடுதி, சுபாவம், தடை.

### பயிற்சி

1. விடை எழுது :

அ. சண்பகவனத்தில் வசித்தவை எவை?

ஆ. மானிடம் வஞ்சகமாக நட்புக்கொள்ள வந்தது எது? ஏன் அது அவ்வாறு செய்ய எண்ணியது?

இ. மானுக்கு நேர்ந்தது என்ன?

ஈ. அப்போது நரி என்ன செய்தது?

உ. மானின் உயிரைக் காப்பாற்றியது எது?

ஊ. இதனால் நாம் அறிவது என்ன?

2. எதிர்ப்பதங்கள் எழுது:

ஒன்று ×
காடு ×
கொழுத்து ×
வெற்றி ×
நல்ல நட்பு ×
முடியும் ×

3. கீழ் உள்ள சொற்களை அமைத்து வாக்கியங்கள் எழுது :

தெள்ளிய–வஞ்சனை–நட்பு–சுற்றித்திரிந்து–கொழுத்து–யோசித்து–பணிவோடு–துணையில்லை–பழக்கம்–இயல்பு.



## 10. காகம் பாம்பைக் கொன்ற கதை

(பாட்டு)

கோடுறு சினையிற் காகம்
கூடுவைத் தநேக காலம்
பேடொடு கூடி வாழும்
பெருமரப் பொந்தில் வந்தே
ஆடிய கரும்பாம்(பு) ஒன்றங்
கதுபெறு முட்டை யெல்லாம்

நாடியே குடித்துப் போட
நலிந்துளம் மெலிந்து வாடி, 1

தன்னுயிர்ப் பாங்க னுன
சம்புகன் அருகு போய்இங்(கு)
என்னசெய் குவேன்நான்' என்ன,
'இதைக்கொலல் அரிதோ! நீ போய்
மன்னவன் தேவி ஆடும்
மஞ்சன சாலை புக்குப்
பொன்னணி கொண்டு வந்து
போடுக புற்றில்' என்ன, 2

காகமப் படியே செய்யக்
காவலன் ஏவ லாளர்
ஏகிமா மரத்தின் பொந்தை
ஈர்ந்தனர்; ஈரும் போதில்
நாகமங் கிருந்து சீற,
நறுக்கினர் இருதுண் டாக;
ஆகையா லுபாயத் தாகா(து)
இலைஎன அறைந்த தன்றே. 3

*பஞ்ச தந்திரம்]* *[வீரமார்த்தாண்ட தேவர்*

*குறிப்புரை:*

*(1) கோடு உறு-கொம்புகள் பொருந்திய; கிளையில்-கிளையில்: பேடோடு-பெண் பறவையோடு; நலிந்து-நைந்து உளம்-மனம்; மெலிந்து-வருந்தி; வாடி-துன்புற்று.*

*(2) பாங்கன்-நண்பன்; சம்புகன்-நரி; மன்னவன் தேவி-இராணி; ஆடும்-குளிக்கும்; மஞ்சனச் சாலை-குளிக்கும் அறை; புக்கு-புகுந்து: பொன் அணி-பொன்னுல் செய்யப்பட்ட நகை.*

*(8) காவலன்-அரசன்; ஏவலாளர்-வேலையாட்கள்; ஏகி-சென்று; ஈர்ந்தனர்-வெட்டினர்; ஈரும்போது-வெட்டும்போது; நாகம்-பாம்பு; நறுக்கினர்-வெட்டினர்; உபாயம்-தந்திரம்.*




# 11. செவ்விந்தியர்

1. புதிய கண்டம் என்று அழைக்கப்படும் அமெரிக்கா, வட அமெரிக்கா தென் அமெரிக்கா என்று இரண்டு பிரிவுகளை உடையது. அவற்றுள் வட அமெ-ரிக்காவின் கிழக்குக் கடற்கரை, மேற்குக் கடற்கரை ஓரங்களில் பெரிய மலைத் தொடர்களும், குன்று களும் உள்ளன. உயர்ந்த பூமிக்கும் மலைக்கும் இடை-யில் புல் தவிர வேறு ஒன்றும் முளைக்காத சமவெளிகள் உள்ளன. இங்கு உள்ள நிலம் வளம் பொருந்தியதாக இல்லை. அங்கு மரங்கள் வளர்வதற்கு ஏற்ற மழை பெய்வதில்லை. அங்குள்ள புல்வெளிகள் **பிரெரீஸ்** எனப்படும். அப்புல்வெளிகளின் சில பகுதிகளில் வசிக்கும் மக்கள் **செவ்விந்தியர்கள்** எனப்படுவார்கள்.

2. செவ்விந்தியர் செந்நிறம் உடையவர்களும் அல்லர் ; இந்தியரும் அல்லர். ஆனால் அவர் செவ்-விந்தியர் என்று ஏன் தவருக அழைக்கப்படுகின்றனர் என்பதை அறிவோம். கொலம்பஸ் என்பவர் நாடுகளைக் காணவேண்டும் என்னும் வேட்கையுடன் அட்லாண்-

டிக்குப் பெருங் கடலைக் கடந்து செல்லத் துணிந்து பயணத்தை மேற்கொண்டார். கொலம்பஸின் எண்ணம் இந்தியாவைக் கண்டு பிடிக்க வேண்டும் என்பதே யாகும். அக்காலத்தில் அமெரிக்கா என்ற நாடு இருப் பதாக மக்களுக்குத் தெரியாது. அவர் வடஅமெரிக்கா வின் கிழக்குக் கரையருகிலுள்ள தீவுகளை அடைந்த போது தவருக அவைகளை இந்தியாவின் பகுதி என்று கருதி விட்டார். அதனுல் அவர் அங்கிருந்த மனிதரை இந்தியர் என்று அழைத்தார். அவர் அவர்களைக் கண்டபொழுது அம்மக்கள் தங்கள் முகங்களில் சிவப்பு நிறம் பூசிக்கொண்டிருந்தனர். ஆதலால் கொலம்பஸ் அவர்களைச் செவ்விந்தியர் என்று அழைத்தார். அவர் கள் மங்கலான சிவப்பு நிறம் வாய்ந்தவர்; நீளமாகத் தொங்கும் கருமையான தலை மயிருடையவர்.

3. செவ்விந்தியர் வாழ்க்கை ஏறக்குறைய எஸ்கிமோக்களின் வாழ்க்கையைப் போன்றதேயாகும். வேட்டையாடுவது அவர்களுடைய தொழில் ஆகும். செவ்விந்தியர்களிடம் குதிரை, ஆடு, பசு என்பன இல்லை. கோதுமையோ பிற உணவுக்குரிய தானியங் களோ அங்குப் பயிரிடப்படுவதில்லை. செவ்விந்தியர்கள் **பைஸன்** என்னும் காட்டெருமைகளை வேட்டையாடு கின்றனர். பைஸன் என்னும் காட்டெருமை பெரியது. தோள்களிலும், கழுத்தைச் சுற்றிலும் அதற்கு அடர்த்தி யான மயிர் உண்டு. அது வலிமை மிகுந்த விலங்கு ஆகும். அது அழகுடையது அன்று. அவை கூட்டங் கூட்டமாக ஓரிடத்திலிருந்து மற்ருேர் இடத்திற்குச் செல்லும் வழக்கமுடையவை.

4. செவ்விந்தியர்கள் கத்தி, வில், அம்பு, கதை என்பவற்றை வேட்டைக்கு ஏற்ற ஆயுதங்களாக உப

போகிக்கிருர்கள். **தமஹாக்** என்பது அவர்கள் பயன் படுத்தி வந்த கோடரி போன்ற ஒரு வகைக் கருவி யாகும். அது நீண்ட காம்பினை உடையது. எஸ்கிமோக் களைப்போல் செவ்விந்தியர்களுக்கும் இரும்பின் உப யோகம் தெரியாது. அதனால் அவர்களுடைய கோடரி, கத்தி, அம்பு முதலியன கல், எலும்பு, கொம்பு என்பன வற்றால் ஆகியவைகளே. சமவெளி ஓரத்தில் உள்ள மலைகளிலிருந்து மரங்களைச் செவ்விந்தியர் கொண்டு வந்து பயன்படுத்திக் கொள்கின்றனர்.

5. எஸ்கிமோக்களுக்கு 'ஸீல்' என்னும் கடல் நாய் தேவையாக இருப்பதுபோல, செவ்விந்தியர் களுக்குக் காட்டெருமையும் மானும் தேவையாக இருக் கின்றன. செவ்விந்தியரின் ஆடை காட்டெருமைத் தோலாலும், மான் தோலாலும், காட்டு ஆட்டின் தோலாலும் செய்யப்பட்டவை. அவர்கள் விலங்குகளின் தோல்களை எலும்பினுலாகிய கத்திகளால் சுரண்டிக் கழுவிப் பல நாட்கள் புகையில் வைத்துப் பக்குவப் படுத்தி உடுத்தி வருகின்றனர். அந்த ஆடைகளைச் செய்யும் தொழில் பெண்களுடையதாகும்.

6. செவ்விந்தியர்களில் ஆண்களும் பெண்களும் நீண்ட அங்கி அணிகின்றனர். காட்டெருமைத் தோலைக் குளிரைத் தடுத்துக் கொள்ளும் மேற்போர்வை யாகப் பயன்படுத்துகின்றனர். அவர்கள் காட்டெருமை, மான் ஆகியவற்றின் இறைச்சியை உணவாகக் கொள் கின்றனர்.

7. கூடாரங்களை அமைக்கும் வேலையைப் பெண் களே செய்கின்றனர். ஆண்களுக்கு வேட்டையாடும் தொழிலே முக்கியமானதாக விளங்குகிறது. அவர்க ளுடைய கூடாரங்களுக்கு 'விக்வாம்ஸ்' என்பது பெயர்.

அவர்கள் பல மரக் கொம்புகளை ஒரு பக்கத்தில் சேர்த்துக் கட்டுகின்றனர் ; மற்றப் பக்கத்துக் கொம்புகளின் அடிகளை வட்டமாக வரும்படி அமைக்கின்றனர். அவற்றின்மேல் தோல்களை மூடிக் கூடாரம் அமைக்கின்றனர். செவ்விந்தியர்கள் வெள்ளையர்களிடமிருந்து குதிரைகளைப் பெற்று அவற்றைப் பயன்படுத்த அறிந்து கொண்டனர். ஒரு குதிரையின் இரு பக்கங்களிலும் நீளமான இரு கழிகளைக் கட்டுவர். குதிரைக்குப் பின்னுல் நீண்டிருக்கும் இக்கழிகளின் குறுக்கே சிறுகழிகள் வைத்துக் கட்டுவார்கள். அவற்றின்மீது மூட்டைகளை ஏற்றிக் கொள்வார்கள். மற்ருெரு குதிரைமேல் பெண்களும் குழந்தைகளும் ஏறிக்கொண்டு செல்வார்கள். அவர்கள் பனிப் பாறைகளின்மேல் நடக்க நேரும் போது நீண்ட மர மிதியடிகளை உபயோகிப்பார்கள். அவர்களுடைய படகுகள் இலேசான மரத்தால் செய்யப்பட்டவை. அவர்களுக்கு நடனத்திலும், பழமையான பாடல்களைப் பாடுவதிலும் விருப்பம் அதிகம். பூதங்களும் பிசாசுகளும் உண்டு என்று அவர்கள் நம்புகிருர்கள். இறந்தவர்களின் பொருள்களைச் சவத்துடன் வைத்துப் புதைப்பது செவ்விந்தியருடைய வழக்கமாக இருக்கிறது.

8. செவ்விந்தியர்கள் தாம் வளர்க்கின்ற மான்களுக்கும் காட்டெருமைகளுக்கும் தேவையான புல்வெளிகளைத் தேடி இடம் மாறிக்கொண்டே இருக்கின்றனர் ; அதனுல் ஓரிடத்தில் நிலையாக வீடுகளைக் கட்டிக் கொள்ளாமல் கூடாரங்களில் வசிக்கின்றனர்.

*அரும்பதங்கள்: கண்டம், சமவெளி, பயணம், அடர்த்தியான, கோடரி, அங்கி, போர்வை, மிதியடி, வேட்டை.*

## பயிற்சி

I. 1. புதிய கண்டம் யாது? அதன் பிரிவுகள் யாவை?
2. பிரைரீஸ் என்பது என்ன?
3. கொலம்பஸ் யாரைச் செவ்விந்தியர் என்று கூறினார்? ஏன்?
4. செவ்விந்தியர்களின் உடையும், உணவும் யாவை?
5. அவர்களுடைய கூடாரங்கள் எவ்வாறு அமைக்கப்படுகின்றன?
6. செவ்விந்தியருக்கு விருப்பமான செயல்கள் யாவை?
7. அவர்கள் ஏன் நிலையாக ஓரிடத்தில் வசிப்பதில்லை?

II. கோடிட்ட இடங்களைத் தகுந்த சொற்களால் நிரப்புக :-
1. பிரைரீஸ் புல் வெளிகளில் ——— அதிகம்.
(மழை, குளிர், வெப்பம்)
2. செவ்விந்தியர்கள் —— போர்வையாகப் பயன்படுத்துகின்றனர்.
3. செவ்விந்தியர்கள் – —— வசிக்கிறார்கள்.
(கல் வீடுகளில், கூரை வீடுகளில், கூடாரங்களில்)

III. பின்வரும் சொற்களை வாக்கியங்களில் பயன்படுத்துக :-

தவறாக, மங்கலான, கடுமையான, அடர்த்தியான, கூட்டங்கூட்டமாக, பக்குவப்படுத்தி.

IV. எதிர்ப்பதங்கள் எழுதுக:-

1. கருமையான ×
2. நீண்ட ×
3. இலேசான ×
4. வலிமை ×



# 12. ஏடு காத்த கிழவி

1. சிவகங்கைக்கு அருகில் உள்ள ஒரு சிற்றூரில் புலவர் ஒருவர் வசித்து வந்தார். அவர் மிகவும் இனிய கவிகளை விரைவில் இயற்றுவார். அவருடைய முன்னோர்கள் இராமநாதபுரம், சிவகங்கை முதலான குறுநில மன்னர்கள்மீது அவ்வப்போது பல பாடல்கள் பாடிப் பரிசில் பெற்றனர். அவர்களைப் போலவே இவரும் அம்மன்னர்களைப் பாடிப் பரிசில் பெற்றார். அந்தக் கிராமத்திலுள்ளவர்களும் புலவர்களை நன்கு மதித்து ஆதரித்தனர். அதனால் புலவர் நிலபுலங்களுடையவராய்ப் பயிர்த் தொழில் செய்து வந்தார். எனவே, புலவர் கல்விச் செல்வமும், ஓரளவு பொருட் செல்வமும் பெற்று இனிது வாழ்ந்துவந்தார்.

2. அக்காலத்தில் தென்னாட்டில் தீவர்த்திக் கொள்ளைக்காரர்கள் இருந்தார்கள். அவர்கள் அக் காலத்தில் செல்வர்கள் வீடுகளுக்குச் சென்று கொள்ளையடிப்பார்கள். அவர்கள் கொள்ளையடிக்க

வரும் நாளையும் குறித்துக் கடிதம் அனுப்புவார்கள். அவர்களிடமிருந்து தப்பி வெளியே செல்லவும் முடியாது. ஊரைச் சுற்றி மறைவாக ஆட்கள் நின்று காவல் செய்வார்கள்; பயந்து ஓடுபவர்களைக் கண்டால் கொன்றுவிடுவார்கள்; பொருள்களை மறைத்துவைத்தால் பலவகைத் துன்பங்களைச் செய்வார்கள். ஆதலால் அக்காலத்தில் செல்வர்கள் வாழ்க்கை மிக்க துன்பமுடையதாக இருந்தது.

3. ஒரு கொள்ளைக் கூட்டத்தாருக்குப் புலவர் குறுநில மன்னர்களைக் கண்டு பாடிப் பெரும்பொருள் படைத்துள்ளார் என்பது எப்படியோ தெரிந்தது. அக் கொள்ளைக் கூட்டத்தார் புலவர் வீட்டைக் கொள்ளையிடுவதெனத் தீர்மானித்துத் தாங்கள் கொள்ளையிடுவதற்கு வரும் நாளையும் கடிதமூலம் தெரிவித்துவிட்டனர். புலவர்க்கு யாது செய்வதென்று தெரியவில்லை. பொருள்களை எடுத்துச் செல்லவும் முடியாது. செல்லாமலிருந்தால் கொள்ளைக் கூட்டத்தார் பறித்துக் கொள்வார்கள். எனவே புலவர் நீண்டநேரம் சிந்தித்துக் கடைசியில் ஒரு முடிவிற்கு வந்தார். அவர் தம்மிடமுள்ள நகைகள் வெள்ளிப் பாத்திரங்கள் முதலியவற்றைச் சில பெரிய பெட்டிகளில் வைத்துப் பூட்டினர்; அவற்றை வீட்டின் புறக்கடையில் குறிப்பான ஓரிடத்தில் எவரும் அறியாதபடி புதைத்துவைத்தார். அவருடைய தாய்க்கு மட்டும் அந்த இடம் தெரியும். பிறகு அவர் தம் தாயை வீட்டில் நிறுத்திவிட்டு மனைவி மக்களுடன் வேற்றூருக்குச் சென்றுவிட்டார்.

4. கிழவி வீட்டிலிருந்தாள். குறித்த நாளில் குறித்த நேரத்தில் கொள்ளைக் கூட்டத்தார் தவறாமல் வந்தனர். வீட்டின் எல்லா இடங்களிலும் சோதனை இட்டனர். ஒன்றும் அகப்படவில்லை. கள்வர் தலை

வனுக்குச் சினம் பொங்கி எழுந்தது. அவன் கிழவி யைப் பலவாறு பயமுறுத்திப் '' பொருள் எங்கே இருக் கிறது '' எனக் கேட்டான். கிழவி ஒன்றும் சொல்ல வில்லை. என்ன செய்தும் பயன் படாமையால் அவன் எங்கும் சுற்றிப் பார்த்துக்கொண்டே வந்தபொழுது பரணில் ஓலைச்சுவடிக் கட்டுகள் பல இருப்பதைக் கண்டு தன் தோழர்களிடம், 'இந்தச் சுவடிக் கட்டுகளை யாவது எடுத்துக்கொண்டு போவோம்'! என்று கூறினன்.

5. அதைக் கேட்ட கிழவியின் மனம் புண்பட் டது. '' ஐயோ, இக்கள்வர் சுவடிகளை வண்டியில் ஏற்று கின்றனரே; இச்சுவடிகளை எழுதிச் சேர்த்துவைக்க என் குடும்பத்தினர் எத்தனை ஆண்டுகள் உழைத்தனர்! எவ் வளவு உழைப்பு எடுத்துக்கொண்டனர் ! இச்சுவடி களால் அல்லவா இக்குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் புலமை பெற்று வழிவழியாகப் புலவர்களாய் விளங்கி வருகின்றனர் ? அப்புலமையால் அன்ருே மன்னர் களைப் பாடி மகிழ்வித்துப் பொருள்பெற்று இனிது வாழ் கின்றனர்? கல்விக்கும், பொருளுக்கும், குடும்பத்தின் பெருமைக்கும் காரணமாயிருக்கும் இச்சுவடிகளைக் கள்வர்கள் வாரிக்கொண்டு செல்லவிடுவதா ? இது அறமாகுமா? நம்முடைய பிற்காலச் சந்ததியார் புலமை பெற யாது செய்வர்? நூல்களுக்கு எங்குச் சென்று அலைவர்? இவை இருந்தால் பொருளைத் தேடிக்கொள்ள லாம். மற்றும் இக்கள்வர்கள் இச்சுவடிகளின் அருமை பெருமையை உணரார். இவற்றை வீணே எரித்துவிடு வர். ஆதலால் பொருளை மறைத்து வைத்திருக்கும் இடத்தைக் காண்பித்துச் சுவடிகளைக் காப்பதே என் னுடைய கடமையாகும் '' என்று அக்கிழவி தீர்மானித் துக் கொண்டாள்.

6. பிறகு கிழவி, கள்வர் தலைவனை நோக்கி, "அப்பா, ஏன் இந்தப் பழைய சுவடிகளை வண்டியில் ஏற்றுகிறாய்? அவற்றை ஒழுங்காக முன் இருந்தபடி வைத்து விடு! நான் பணம் இருக்கும் இடத்தைக் காண்பிக்கிறேன்" என்றாள். 'பணம்' என்ற சொல்லைக்கேட்டவுடன் கள்வர் தலைவன் அவ்வாறே செய்வதாக ஒப்புக் கொண்டான். சுவடிகள் மீண்டும் முன்னிருந்தபடியே அடுக்கி வைக்கப்பட்டன; கிழவி சொன்ன சொல் தவறாமல் கள்வர் தலைவனை அழைத்துக் கொண்டு சென்று பெட்டி புதைத்து வைக்கப்பட்டிருந்த இடத்தைக் காட்டினாள். திருடர்கள் தோண்டிப் பார்த்தார்கள். உள்ளே பெட்டி இருந்தது. அதனை எடுத்துக்கொண்டு வீட்டிற்குள் வந்தார்கள்.

7. கிழவியைக் கள்வர் தலைவன் கண்டான். அவனுக்கு எக்காரணத்தாலோ கிழவியிடம் அளவிலா அன்பு உண்டாயிற்று. அவன் கிழவியை நோக்கி, "நீ பணப்பெட்டியைக் காண்பித்துக் கொடுத்துச் சுவடிகளைக் காத்த காரணம் என்ன?" என்று கேட்டான். அதற்குக் கிழவி கல்வியின் அருமையையும், தன் குலத்து முன்னோர்கள் அச்சுவடிகளால் அடைந்த பெருமைகளையும் நன்மைகளையும் எடுத்துக் கூறினாள். கள்வர் தலைவன் மனம் கரைந்தது; "கல்வி யில்லா விட்டால் என் குலக் கொழுந்துகள் தீநெறியில் சென்று விடுவார்களே," என்று கிழவி கூறிய மொழிகள் அவன் மனத்தை உருக்கின. உடனே கள்வர் தலைவன் பெட்டியையும் கிழவியிடமே கொடுத்து, "அம்மையே, இன்று உம்மால் நான் மெய் அறிவு பெற்றேன்; கல்வியில்லாமையால் ஈனமும் பாவமுமான இச்செயலில் இறங்கிக் கொடிய பாவங்களைச் செய்தேன். இனி எக்காலத்திலும் கள்வர்களால் உங்கள்

குடும்பத்தினர்க்குத் தீங்கு நேராதபடி காத்துக்கொள் கிறேன்; சென்று வருகிறேன்.'' என்று கூறித் தன் கூட்டத்தாருடன் போய் விட்டான்.

8. சில நாட்கள் கழிந்த பின்னர்ப் புலவர் குடும்பத்துடன் வந்தார்; புதைத்து வைத்திருந்த பெட்டி வீட்டினுள் இருப்பதைக் கண்டார். திறந்து பார்த்த பொழுது யாவும் இருக்கக் கண்டு வியந்தார். பின் நடந்தவற்றைக் கேட்டறிந்தார். அம்மையாரின் அருஞ் செயலை எண்ணி வியந்தார். 'கல்வியே கருந்தனம்' என்னும் உண்மையை மறந்து, பொருளைப் புதைத்து வைத்து விட்டுச் சுவடிகளைப் போற்ருத தம் செயலுக்கு வெட்க முற்ருர்.

*அரும்பதங்கள்: கவி, பரிசில், திவர்த்தி, செல்வர்கள், சினம், உழைப்பு, புலமை, கள்வர், சந்ததியார், சுவடிகள், திநெறி, குலக்கொழுந்து, ஈனம், வியந்தார், கருந்தனம், போற்ருத, அறம்.*

**பயிற்சி**

1. *விடை எழுதுக:*
    1. *புலவருடைய முன்ஞேர்கள் எவ்வாறு சிறப்புப் பெற்றிருந்தார்கள் ?*
    2. *திவர்த்திக் கொள்ளைக்காரர்களுடைய இயல்பை விளக்கி எழுதுக.*
    8. *புலவர் கொள்ளைக் கூட்டத்தாருக்குப் பயந்து என்ன செய்தார் ?*
    4. *கிழவி கள்வர்கள் சுவடிக் கட்டுகளை எடுத்தபோது என்ன நினைத்தாள் ?*
    5. *அவள் கள்வர் தலைவனிடம் கூறியவை யாவை ?*
    6. *கள்வர் தலைவனின் மனம் எதனுல் உருகியது ?*
    7. *நீ இப்பாடத்திலிருந்து அறிந்துகொண்ட நீதி யாது ?*

II. சந்தர்ப்பம் கூறுக :

1. இந்தச் சுவடிக் கட்டுகளையாவது எடுத்துக்கொண்டு போவோம்.
2. இச்சுவடிகளின் அருமை பெருமையை இக்கள்வர்கள் உணரார்.
3. கல்வி பயில்லாவிட்டால் என் குலக்கொழுந்துகள் தீநெறியிற் சென்றுவிடுவார்களே.
4. உங்கள் குடும்பத்தினர்க்குத் தீங்கு நேராதபடி பார்த்துக் கொள்கின்றேன்.

III. வாக்கியங்களில் பயன்படுத்துக :

விரைவில், மதித்து, குறித்த நேரத்தில், வழிவழியாக, அளவிலா அன்பு, எக்காலத்திலும், உண்மையை.

IV. எதிர்ப்பதங்கள் எழுதுக:

1. துன்பம் ×
2. அருமை ×
3. அறம் ×
4. பாவம் ×
5. போற்றுதல் ×



# 13. அஜந்தாக் குகைகள்

1. நமது இந்திய நாடு சிறந்த நாடு ஆகும். இந்த நாட்டில் அவ்வப்போது பல மதங்கள் தோன்றிக் கல்வி, கலை, பண்பாடு, நாகரிகம், நல்லொழுக்கம் முதலியவற்றை வளர்த்து வந்திருக்கின்றன. புத்த மதம் நம் நாட்டில் சிறந்து விளங்கிய காலத்தில் புத்தமதத் துறவிகள் தென்னிந்தியாவில் பல இடங்களில் கழகங்களை ஏற்படுத்திக்கொண்டு தம் மதத்தைப் பரப்பி வந்தனர். அவ்விடங்களுள் **அஜந்தாக் குகைகளும்** ஒன்று.

2. அஜந்தா மலைக்குகைகளில் உள்ள ஓவியங்கள் காண்போர் கண்களைக் கவர்கின்றன. அஜந்தாவைப்பற்றி நெடுங்காலமாக மக்கள் அறியாமலிருந்தனர். நூற்றைம்பது வருடங்களுக்கு முன்புதான்

அஜந்தாவின் விவரம் தெரியலாயிற்று. நெடுங்காலம் அஜந்தாக் குகைகள் பெருமரங்கள், செடிகள், கொடிகள் அடர்ந்த காடுகளுக்கு இடையில் தம் பெருமை இழந்து மறைந்து கிடந்தன. அஜந்தா பரத்பூருக்கு நான்கு மைல் தூரத்தில் உள்ளது. இங்கே போக விரும்புவோர் பம்பாயிலிருந்து டில்லிக்குச் செல்லும் இரயில் மார்க்கத்தில் உள்ள பச்சோரா என்னும் ஊரில் இறங்க வேண்டும். அங்கிருந்து கிளை இருப்புப் பாதை வழியாகச் சென்று பாஹூரை அடைய வேண்டும். பரத்பூர், பாஹூரிலிருந்து பதின்மூன்று மைல் தொலைவில் உள்ளது. அங்கிருந்து அஜந்தாவிற்குச் செல்லலாம்.

3. அஜந்தா துர்க்கம் நைஜாம் இராஜ்யத்தின் வடகோடியில் உள்ளது. இதன் அருகில் ஒரு சிறிய ஆறும் ஓடுகிறது. அஜந்தாக் குன்றுகளில் இருபத்தொன்பது குகைகள் இருக்கின்றன. காட்டு வழிகளைக் கடந்து, பாறைக்குப் பாறை தாவி, செடி புதர்கள் வழியாக உடலை ஒடுக்கிக்கொண்டு சென்றால்தான் அஜந்தாக் குகைகளின் அழகைக் காணலாம். இக்குகைகளில் பௌத்த துறவிகள் தங்கள் கைத்திறனைக் காட்டியுள்ளார்கள். அஜந்தாக்குகைகளை இரு வகை-யாகப் பிரிக்கலாம். அவை சைத்தியம் என்றும் விஹாரம் என்றும் கூறப்படும்.

4. முன்னால் உயர்ந்த வளைவான மண்டபமும், முட்டை வடிவான ஜன்னல்களும் கொண்ட கோயில்களாகச் சைத்தியங்கள் உள்ளன, அவற்றின் உள்ளே புத்தபகவானுடைய உருவச் சிலைகள் இருக்கின்றன இவ்வாறு நான்கு சைத்தியங்கள் உள்ளன. மற்ற இருபத்தைந்தும் விஹாரங்கள் ஆகும். பௌத்தத் துறவிகள் தங்கி இருந்த விடுதிகள் விஹாரங்கள் ஆகும். விஹாரங்களின் நடுவில் ஒரு பெரிய மண்ட

பத்தின் பக்கங்களில் பல அறைகளும் காணப்படுகின்றன. ஒவ்வொரு மண்டபத்தின் தலைவாயிலுக்கு எதிரிலும் ஒரு மூலத்தானம் இருக்கிறது. அதில் புத்த பெருமான் சிலையும் இருக்கின்றது. இக் குகைகள் பிறைவடிவான பள்ளத்தாக்கில் அமைந்துள்ளன. குன்றுகளின் கீழும் சில குகைகள் இருக்கின்றன.

அரும்பதங்கள் : பண்பாடு, கழகம், கவர்தல், தொலைவு, கைத்திறன், விடுதிகள், பிறைவடிவம், செதுக்கப்படுதல், ஓவியங்கள்.

**பயிற்சி**

I. விடை எழுதுக :

1. மதங்கள் எவற்றை வளர்த்து வந்தன ?
2. அஜந்தாக் குகைகள் எங்கு இருக்கின்றன?
3. அங்குச் செல்வதற்கு உரிய வழி யாது?
4. அஜந்தாக் குகைகளின் வகைகள் யாவை?
5. சைத்தியம் என்பது என்ன ?
6. எவை விஹாரங்கள் எனக் கூறப்பட்டன ?
7. அஜந்தாக் குகைகளில் உள்ள காட்சிகள் யாவை?

II. கோடிட்ட இடங்களை நிரப்புக :

1. அஜந்தா———வடகோடியில் உள்ளது.
2. அஜந்தாக் குகைகளில் சைத்தியங்கள்———. விஹாரங்கள்———.
3. பரத்பூர்———இருந்து பதின்மூன்று மைல்———உள்ளது.

III. வாக்கியங்களில் பயன்படுத்துக :

பண்பாடு, அவ்வப்போது, கவர்கின்றன, மிக அழகாக, யாவரும், களித்தல்.

IV. எதிர்ப்பதங்கள் எழுதுக :

1. இறங்குதல் ×
2. நல்லொழுக்கம் ×
3. தொலைவில் ×



# 14. கோழி

## சேவற்கோழி

1. கோழீ! கோழீ! வாவா;
கொக்கோகோ என்றுவா
கோழீ! ஓடி வாவா
கொண்டைப்பூவைக் காட்டுவா

2. குத்திச் சண்டை செய்யவோ?
குப்பைகிண்டி மேயவோ?
கத்திபோலுன் கால் விரல்
கடவுள்தந்து விட்டனர்!

3. காலை கூவி எங்களைக்
கட்டில்விட் டெழுப்புவாய்;
வேலை செய்ய ஏவுவாய்
வெற்றிகொண்ட கோழியே!

## பெட்டைக் கோழி

4. கோழீ! கோழீ! வாவா;
கூரைவிட் டிறங்கிவா
கோழீ! முட்டை இடவா
கூட்டில்அடை காக்கவா

5. பெட்டைக் கோழீ! வாவா;
பிள்ளைகளைக் கூட்டிவா;
குட்டை நெல்லைக் கொட்டினேன்;
கொத்திக்கொத்தித் தின்னவா.

6. வஞ்சமாய்ப் பருந்து அதோ
வானில்வட்டம் போடுது
குஞ்சு அணைத்துக் காப்பாயோ?
கூட்டில்கொண்டு சேர்ப்பாயோ?

—கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை.



# 15. பாரி வள்ளல்

1. நமது தமிழ் நாடு மிகச் சிறந்த நாடு; மிக்க புகழ் படைத்த நாடு. அதன் சிறப்புக்கும் புகழுக்கும் பல காரணங்கள் உண்டு. அவற்றுள் ஒன்று, இந் நாட்டில் வாழ்கின்ற மக்கள் பழங்கால முதல் இன்று வரையில் இல்லை யென்று கூருது கொடுக் கின்ற கொடைத் தன்மையைப் பெற்றிருப்பதேயாகும். கொடைக் குணம் ஒருவரால் கற்பிக்கப்பட்டு வருவது அன்று. அக் குணம் இயல்பாகவே அமைந்திருக்க வேண்டும். இதனுல்தான் ஔவையார், ''நட்பும் தயை யும் கொடையும் பிறவிக் குணம்'' என்று கூறினுர். அத்தகைய பிறவிக் குணமாகிய கொடையை இயல் பாக உடையவர்கள், யார் எது கேட்டாலும் இல்லை என்னுது கொடுப்பவர். அவர்களை 'வள்ளல்' என்று யாவரும் வாயாரப் புகழ்ந்து கூறுவர்.

2. பண்டைக் காலத்தில் தமிழகத்தில் கொடை யிற் சிறந்த வள்ளல்கள் எழுவர் இருந்தனர். அவர் களைக் கடை எழு வள்ளல் என்று புலவர் கூறுவர்.

அவர்கள் **பாரி, காரி, ஆய், அதிகமான், ஓரி, நள்ளி, பேகன்** என்போர் ஆவர். அவர்களைப் பற்றிப் புலவர் பெருமக்கள் பலர் பாடியுள்ளனர். அவ்வள்ளல்களுடைய பூத உடம்பு இப் பூமியிலிருந்து மறைந்தாலும் புகழுடம்பு நிலைபெற்றிருக்கின்றது.

3. தமிழ் நாட்டில் பறம்பு நாடு என்று ஒரு பகுதி இருந்தது. அப்பகுதியில் பறம்பு மலை என்ற ஒரு மலையும் இருந்தது. பறம்பு மலையைச் சுற்றி முந்நூறு ஊர்கள் இருந்தன. அம் முந்நூறு ஊர்களைக் கொண்ட சிறு நாட்டைப் பாரி என்னும் குறுநில மன்னன் அரசாண்டு வந்தான். பாரி வேளிர் குலத்தில் பிறந்தவன். ஆதலால் அவனை வேள்பாரி என்றும் கூறுவர். பாரி அருள் நிறைந்த மனம் படைத்தவன். யார் எது கேட்டாலும் இல்லை என்னாது கொடுக்கும் இயல்புடையவன். அவன் தமிழ்க் கல்வியையும் சிறக்கக் கற்றிருந்தான். அவனிடம் நட்புப் பூண்டிருந்தவர் கபிலர் என்னும் புலவர் ஆவர். 'பாரியும் கபிலரும்' என்று சேர்த்துச் சொல்லும் வழக்கம் அவர்கள் கொண்டிருந்த நட்பின் சிறப்பை விளக்குவதாகும். பாரி தனக்குச் சொந்தமான முந்நூறு ஊர்களையும், தன்னை அடைந்த வறியவர்க்குப் பரிசிலாகக் கொடுத்துவிட்டான். என்னே அவனுடைய கொடைத் தன்மை!

4. ஒரு முறை பாரி வேட்டையாடுவதற்காகக் காட்டிற்குச் சென்றிருந்தான். அவன் காடுகளில் சுற்றித் திரிந்தான்; வேட்டை முடிந்ததும் தேரின்மீது ஏறிக் கொண்டு வந்தான்; வழியில் அவன் நாட்டின் இயற்கை அழகுகள் பலவற்றைக் கண்டு களித்தான். மான்கள் ஒருபுறம் அச்சம் இன்றித் திரிந்தன. மயில்கள் தோகை விரித்தாடின. குரங்குகள் கிளைக்குக் கிளை தாவிக்குதித்தன. எல்லாக் காட்சிகளும் மன்னன் மனத்-

தைமகிழ்வித்தன. இந்த நிலையில் ஒரு முல்லைக் கொடி மட்டும் பற்றிப் படரக் கொழுகொம்பு இல்லாமல் நிலத்தில் விழுந்து வாடிக் கிடத்தலைப் பாரி கண்டான். அவன் மனத்தில் இரக்கம் உண்டாயிற்று. தன் ஆட்சியில் ஓரறிவு உயிரும் துன்பப்படுதல் ஆகாது என்று பாரி தன் மனத்தில் எண்ணினான். உடனே அவன் சற்றும் தயங்காமல் தன் தேரை ஓட்டிச் சென்று முல்லைக்கொடி அருகில் நிறுத்தினான். அக்கொடியை அதன்மீது படரும்படி எடுத்து விட்டான். பின் பாரி கால் கடுக்க நடந்து தன்னூரை அடைந்தான். அவனுடைய செயலை அறிந்த அனைவரும் வியந்தனர். அவனுடைய கொடைத் திறத்தினைப் போற்றினர். பாரி பசுமையான முல்லைக் கொடிக்குத் தேர் ஈந்த செய்தி எங்கும் பரவியது; அதனோடு அவன் புகழும் பரவியது.

5. சேரசோழ பாண்டியர் என்பார் தமிழ் நாட்டு முடியுடை மூவேந்தர் அல்லவா? அவர்கள் செவிகளிலும் முல்லைக்குத் தேர் ஈந்த பாரியின் கொடைச் சிறப்பு எட்டியது. பாரியின் புகழைப்பற்றிக் குடிமக்கள் வியந்து பேசுதலை அவர்கள் கேட்டார்கள். "முடியுடை வேந்தராகிய தம்மினும் குறுநில மன்னனாகிய பாரி அத்தகைய பரந்த புகழை அடைவதா?" என்று அவர்கள் பொறாமை கொண்டார்கள். பொறாமைக் குணம் மேலிட மேலிடப் பாரியினிடத்தில் அவர்களுக்குப் பகைமை உண்டாயிற்று. ஏதாவது ஒரு வகையில் அவனை அழிக்க முயன்றார்கள். பாரிக்கு இரு புதல்வியர் இருந்தனர். அவர்கள் அழகிலும், கல்வி கேள்விகளிலும் சிறந்து விளங்கினர். கபிலர் அவர்களுக்கு ஆசிரியராய் இருந்தார். ஆதலால் அப் பெண்கள் கவி பாடும் ஆற்றல் பெற்றிருந்தார்கள். முடியுடை மூவேந்தரும் பாரியினுடைய பறம்பு நாட்டிற்குச் சென்றார்கள். பாரி அவர்-

களை அன்போடு வரவேற்று உபசரித்தான். பின், மூவேந்தரும் அவன் பெண்களைத் தங்களுக்கு மணம் செய்து கொடுக்கும்படி கேட்டனர். அம் மூவரில் எவ-ரேனும் இருவருக்குத் தன் பெண்களை மணம் செய்து கொடுத்தால், மற்றைய ஒருவருக்கு வருத்தமுண்டா கும் என்று எண்ணிப் பாரி தன் பெண்களை அவர்-களுக்கு மணம் செய்து கொடுக்க முடியாதென மறுத்து விட்டான்.

6. பாரியின் மீது மூவேந்தருக்கும் பகைமை வளர்ந்தது. அதனால் அவர்கள் ஒருங்கு சேர்ந்து படை திரட்டிக்கொண்டு பாரியைப் போரில் கொல்லத் துணிந்து வந்தனர். மூவரும் சேனைகளுடன் வந்து பறம்பு மலையை முற்றுகையிட்டனர். பாரி அதற்குச் சிறிதும் அஞ்சவில்லை. பாரி தன் சேனையைக்கொண்டு கோட்டையைக் காத்தான். கபிலர் கிளிகளைப் பழக்கி விடுத்து வேறிடங்களிலிருந்து தானியங்களைக் கொண்டு வரச் செய்து உதவினார். அம்மட்டோ! கபிலர் மூவேந்தரைப் பார்த்து, ''முடிவேந்தர்களே, எவ்வளவு காலம் நீங்கள் முற்றுகை இட்டாலும் உங்களால் பறம்பு மலையைக் கைப்பற்ற முடியாது. இம்மலையில் மூங்கில் அரிசி, பலாப் பழம், தேன், அருவி நீர் என்-பன உள்ளன. பாரியின் படைவீரர்கள் அஞ்சாமல் போர் புரிவர். அவனோ முந்நூறு ஊர்களையும் தன்னை இரந்து கேட்டவர்க்குக் கொடுத்துவிட்டான். நானும் பாரியும் குன்றுமே எஞ்சி இருக்கின்றோம். போரை நிறுத்தி விட்டு, நீங்கள் ஆடிக்கொண்டும், பாடிக்-கொண்டும் அவனிடம் சென்று இரப்பீர்களானால், அவன் தன்னுடைய உயிரையும் கொடுப்பான். அவ்வாறன்றி, அவனை எதிர்த்து வெற்றி பெறுதல் உங்க-ளால் இயலாத காரியமாகும்'' என்று கூறினார்.

7. வேந்தர்கள் மூவரும் கபிலரின் நல்லுரையை ஏற்றுக்கொள்ளாது பலநாட்கள் பாரியுடன் போர்புரிந்தனர். ஆனால் அவர்களால் பாரியை வெல்ல முடியவில்லை. போரினால் பாரியை வெல்ல முடியாதென்பதை நன்குணர்ந்த அவர்கள் போரை நிறுத்திவிட்டு வஞ்சகத்தால் பாரியைக் கொன்றனர். பாரியின் மறைவைக்குறித்துக் கபிலரும், பாரிமகளிரும் பாடிய பாட்டுக்கள் மனத்தை உருக்கும் தன்மையை யுடையன. பின்னர்க் கபிலர், பாரியின் இரு மகளிரையும் அழைத்துக்கொண்டு பறம்பு மலையை விட்டு நீங்கினார். கபிலர் அம் மகளிரைத் தக்கவரிடம் அடைக்கலமாக வைத்து விட்டுப் பாரியின் நினைவாகவே இருந்து, பட்டினி கிடந்து தம் உயிரை விட்டார். மூவேந்தரும் பாரியைக் கொன்று பழி சூடினர். ஆனால் பாரியோ உயிரைக் கொடுத்துப் புகழை நிலை நிறுத்தினான். பாரியைப் போன்ற புரவலனையும், கபிலரைப்போன்ற புலவரையும் தோற்றுவித்துப் பெரும் புகழ் படைத்தது நம் தமிழ் நாடு.

*அரும்பதங்கள் : பண்டைக் காலம், கொடைத் தன்மை, தலைய, வள்ளல், பூதவுடம்பு, புகழுடம்பு, அருள், பரிசில், அச்சம், கொழுகொம்பு, ஈதல், கேள்வி, ஆற்றல், முற்றுகையிடுதல், குறுநில மன்னர், இரத்தல், நல்லுரை, புரவலர்.*

### பயிற்சி

I. *விடை எழுதுக :-*

1. *தமிழகத்தில் வாழ்ந்த ஏழு வள்ளல்கள் யாவர்?*
2. *பாரி எந்த நாட்டை ஆண்டு வந்தான்?*
8. *பாரியின் இயல்புகள் யாவை?*
4. *கபிலர் என்பவர் யார்?*
5. *பாரி காட்டில் கண்ட இயற்கைக் காட்சிகள் யாவை?*
6. *அவன் செய்த அருஞ்செயல் யாது?*

7. மூவேந்தர்கள் ஏன் பாரிமீது பகைமை கொண்டனர்?
8. கபிலர் மூவேந்தர்களிடம் கூறியவை யாவை?
9. கபிலர் பாரி இறந்த பிறகு என்ன செய்தார்?

II. கோடிட்ட இடங்களைத் தகுந்த சொற்களால் நிரப்புக:-

1. பாரி வள்ளல் தன்னுடைய——— வறியவர்க்குக் கொடுத்து விட்டான்.
(பறம்பு மலையை, பறம்பு நாட்டை, முந்நூறு ஊர்களை)

2. பாரி———குலத்தில் பிறந்தவன்.
(சேரர், வேளிர், சோழர்.)

3. கபிலர்———உயிர் நண்பராக விளங்கினார்.
(நள்ளியின், ஓரியின், பாரியின், பேகனின்.)

III. வாக்கியங்களில் பயன்படுத்துக:-

புகழ்படைத்த, வாயார, வியந்து, அன்போடு, வரவேற்று, நல்லுரை.

IV. எதிர்ப் பதங்கள் எழுதுக :-

இல்லை ×
இயற்கை ×
துன்பம் ×

## 16. நிலப் பாகுபாடு

1. தமிழில் இன்று கிடைக்கும் நூல்களுள் மிகப் பழமையானது தொல்காப்பியம். தொல்காப்பியம் ஓர் இலக்கண நூல். அதனை இயற்றியவர் தொல்காப்பியர் என்ற புலவர். தொல்காப்பியத்தில் நிலத்தின் பாகுபாடுகளைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது. பூமியின் அமைப்பை நாம் கவனித்தால் மலைப் பகுதி, காட்டுப் பகுதி, சமவெளிப் பகுதி, கடற்கரைப் பகுதி என்ற பிரிவுகள் இருப்பதை அறிந்துகொள்ள முடியும். இவற்றை முறையே குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்-தல் என்னும் பெயர்களால் தொல்காப்பியர் குறித்-

துள்ளார். இந்த நான்கு வகைப் பிரிவுகளும் உள்ளதால் நிலத்திற்கு 'நானிலம்' என்னும் பெயரும் உண்டா-யிற்று. பாலை என்ற நிலப்பகுதி ஒன்று உண்டு. அங்கு மலையும், காடும் கதிரவன் வெப்பத்தால் நீரும் நிழலு மில்லாமல் வரண்டுபோய்ப் பரற்கற்கள் நிறைந்திருக்-கும். இப் பாலையையும் சேர்த்து நிலத்தை ஐவகையாக வும் கூறுவார்கள்.

2. குறிஞ்சி : மலையும், மலையைச் சார்ந்த இடங் களும் குறிஞ்சி யென்ற நிலப் பகுதியாகும். மலையில் குறிஞ்சிப் பூ பூக்கும். அது நீல நிறமாக இருக்கும். குறிஞ்சிப் பூ பூத்திருக்கும் பொழுது மலையும் நீல நிற-மாயிருக்கும். மலையில் வாழும் மக்களின் வாழ்க்கை கடினமானதே. ஆயினும் இன்பமானது. மலைகளில் வாழ்வோர் உயர்ந்த சிகரங்களையும் அவற்றின்மேல் படியும் மேகங்களையும், அருவிகளையும், மரங்களையும், சூரியனின் தோற்றம், மறைவு என்பவற்றையும் கண்டு களிப்பார்கள். அவர்கள் மலை நெல், மூங்கிலரிசி, வள் ளிக்கிழங்கு, பலாப்பழம், தேன், தினை முதலியனவற்-றைப் பெறுவார்கள். யானை, புலி, கரடி, காட்டுப்பன்றி, மான் முதலிய விலங்குகளை வேட்டையாடுவார்கள். மயில் முதலிய பறவைகளைக் கண்டு மகிழ்வார்கள். அவர்கள் தாம் வாழும் சிறிய ஊரினைச் சிறுகுடி என்-றும் குறிச்சி என்றும் கூறுவார்கள். அவர்கள் குறிஞ்சி நிலத்திற்குரிய தெய்வமான முருகனை வழிபடுவார் கள். அவர்கள் முருகனைக் குறித்து ஆடும் கூத்திற்குக் குரவைக் கூத்து என்பது பெயர். இந்நில மக்கள் குற வர், குறத்தியர் எனப்படுவர்.

3. முல்லை : காடும், காட்டைச் சார்ந்த இடங் களும் முல்லை எனப்படும். முல்லை இயற்கைக் காட்சி கள் நிறைந்த நிலம். காடுகளில் பல்வேறு வகை மரங்

கள், செடிகள், கொடிகள் நிறைந்திருக்கும். பல்வேறு வகை வடிவங்களை உடைய இலைகள், காய்கள், பூக்கள் முதலியன கண்களுக்கு இன்பம் அளிக்கும். இந்நிலத்தில் வாழும் மக்கள் மாடுகளை மேய்ப்பதையே சிறப்பான தொழிலாகக் கொண்டவர். இவர்களுடைய ஊர்கள் பாடி என்றும் சேரி என்றும் கூறப்படும். இந்நில மக்கள் புன்செய்ப் பயிர்களான வரகு, சாமை முதலியனவற்றை விளைவிப்பார்கள். பசுக்களிடமிருந்து பெறும் பாலையும், அதிலிருந்து உண்டாக்கப்படும் தயிர் வெண்ணெய் முதலியவற்றையும் விற்பார்கள். இவர்கள் முல்லை நிலக் கடவுளான திருமாலை வழிபடுவார்கள். முல்லை நிலப் பெண்கள் திருமாலைக் குறித்துக் குரவைக் கூத்து ஆடுவர்; இந்நில மக்கள் ஆயர், ஆய்ச்சியர் எனப்படுவர்.

4. மருதம் : வயலும், வயலைச் சார்ந்த இடங்களும் மருதம் எனப்படும். இது சமவெளி; இங்கு ஆறுகள், வாய்க்கால்கள், குளங்கள், ஏரிகள் முதலியன மிகுந்திருக்கும். நீர் வளமும் நிலவளமும் நிறைந்திருக்கும். இங்குள்ள மக்கள் தாம் வாழும் இடங்களை ஊர் என்று அழைப்பார்கள். நன்செய்ப் பயிர்களான நெல், கரும்பு, கோதுமை என்பவற்றை இங்குள்ளவர்கள் பயிர் செய்வார்கள். இந்நில மக்களிற் பெரும்பாலோர் உழவர்களும், உழத்தியரும் ஆவர். உழவுத் தொழிலுக்கு மழை முக்கியமானது. மழையைத் தருபவன் இந்திரன். இந்திரன் தேவர்களுக்குத் தலைவன். இந்நில மக்கள் இந்திரனுக்கு விழா நடத்துவார்கள். பொங்கல் பண்டிகைக்கு முதல் நாளான போகிப் பண்டிகை இந்திரனுக்குச் செய்யும் விழாவே யாகும். போகி என்பது இந்திரனுக்கு ஒரு பெயர். சிலப்பதிகாரம், மணிமேகலை என்னும் நூல்களில் பண்டைக் காலத்தில்

மருதநில மக்கள் இந்திரனுக்குக் காவிரிப்பூம்பட்டினத்தில் விழா நடத்தினார்கள் என்று கூறப்பட்டுள்ளது.

5. **நெய்தல்** : கடலும், கடல் சார்ந்த இடமும் நெய்தல் எனப்படும். இங்குக் கடலும் அதனை அடுத்து மணற் பரப்புமே காணப்படும். கடலை அடுத்த நிலங்களில் வாழும் மக்கள் பரதவர் எனப்படுவர். இம்மக்கள் உப்புக் காய்ச்சுவதையும், மீன் பிடித்தலையும் தொழிலாக உடையவர்கள். இவர்கள் கட்டுமரங்களிலும், படகுகளிலும் கடலில் நீண்ட தூரம் சென்று மீன் பிடித்து வருவர். கடலில் பலவகை மீன்கள் வாழ்கின்றன. அவற்றுள் சுறுமீன் என்பது ஒன்று. அதற்குக் கொம்பு உண்டு. நெய்தலுக்குரிய தெய்வம் வருணன். நெய்தல் நிலமக்கள் வாழும் இடம் பட்டினம் என்றும், பாக்கம் என்றும் கூறப்படும். நெய்தல் நிலமக்களுக்குக் கதிரவன் தோற்றமும் மறைவும் அளவிலாத இன்பக் காட்சியை அளிக்கும்.

6. பாலை நிலத்து மக்கள் வழிப்போக்கர்களை வழிப்பறி செய்தும், கொள்ளையடித்தும் வாழும் தன்மையுடையோர் என்பர். அந்நிலத்தில் எப்பொருளும் விளைவதில்லை. மரஞ்செடி கொடிகளும், பறவைகளும் அங்கு அதிகமாக இல்லை. இவர்கள் வாழ்க்கை மிகவும் துன்பமானதாகும். இவர்கள் காளியை வழிபடுவர்.

7. இவ்வாறான பிரிவுகள் முன்பு இருந்தன என்று நூல்கள் கூறுகின்றன. மனிதன் சிந்திக்கும் ஆற்றலைப் பெற்ற நாள்முதல் விஞ்ஞான அறிவு பெருகிக் கொண்டே வருகிறது. விஞ்ஞான அறிவின் வளர்ச்சியினால் மனிதன் தனக்கு நன்மை தருவனவற்றைச் செய்து கொள்கிறான். அதனால் அவன் வாழ்க்கை நடத்துதல் எளியதாகின்றது. நாகரிகம் வளர வளரப்

போக்குவரவுச் சாதனங்கள் பல ஏற்படுகின்றன. மக்கள் ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு மிக எளிதில் செல்கிறார்கள். மக்களுக்குள் நட்பு வளர்கின்றது. வாழ்க்கையில் மாறுதல்களும் ஏற்படுகின்றன. மலையோ, காடோ, பாலையோ எங்காயினும் மனிதன் தன் வாழ்க்கையை நடத்த வழி செய்துகொள்ளுகிறான். எனவே, இப் பழையகால நிலப் பாகுபாட்டின் வழியே அந்த அந்த நிலத்தின் இயற்கைப் பண்புகளைக் கண்டு நாம் மகிழலாம் அன்றோ !

*அரும்பதங்கள்; பாகுபாடு, நானிலம், கதிரவன், பரற்கல், ஐவகை, சிகரம், குரவைக்கூத்து, சார்ந்த, விஞ்ஞானம், நாகரிகம், பண்பு.*

**பயிற்சி**

I. *விடை எழுது:-*

1. *நிலத்தின் பிரிவுகள் யாவை?*
2. *நானிலம் என பூமி ஏன் கூறப்படுகிறது?*
3. *குறிஞ்சி நில மக்களின் இயல்பை எழுதுக.*
4. *முல்லை நிலத்துக் கடவுள் யார்?*
5. *மருத நில மக்களின் தொழில் யாது?*
6. *பரதவர் எந்நிலத்தைச் சேர்ந்தவர்கள்?*

II. *சேர்த்து எழுதுக:-*

| | |
|---|---|
| *குறவர்கள்* | *மருத நிலம்* |
| *ஆயர்கள்* | *போகி விழா* |
| *உழவர்* | *குறிஞ்சி நிலம்* |
| *இந்திரன்* | *முல்லை நிலம்.* |

III. *வாக்கியங்களில் பயன்படுத்துக:-*

*கூத்து, பல்வேறு வகை, வளர்ச்சி, சாதனங்கள், மாறுதல்.*



# 17. இராசராச சோழர்

1. தமிழகம் முற்காலத்தில் சேரநாடு, சோழநாடு, பாண்டியநாடு என்ற மூன்று பெரும் பிரிவினையுடையதாக இருந்தது. அவற்றைச் சேர, சோழ, பாண்டியர் என்பார் ஆண்டு வந்தனர். அவர்கள் தமிழகத்து முடி மன்னரும் பழங்குடியினருமாவர். அம்மூவேந்தரும் தமிழ்ப் புலவர்களை ஆதரித்துத் தமிழ் மொழியை வளர்த்து வந்தனர். அம்மன்னர்களிற் பலர் தமிழை நன்கு கற்றுக் கவி பாடும் சிறப்புப் பெற்றிருந்தனர். அவர்களிற் பலர் புலவர் பாடும் புகழுடையோராய் விளங்கினர். கல்வி, அறிவு, ஆண்மை, ஆற்றல், அருள், அளித்தல், ஆட்சித் திறமை முதலியவற்றில் மிகச் சிறந்து விளங்கினர்.

2. அம்மூவேந்தருள் சோழர் குடியினர் தொன்று தொட்டு உறையூரையும் காவிரிப்பூம் பட்டினத்தையும் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்து வந்தனர் . அச்சோழ மன்னர்களின் வரலாறுகளில் சில பகுதிகளைப் புறநானூறு போன்ற நூல்களில் காணலாம். அவர்

களில் மிகச் சிறந்த சோழ மன்னன் **கரிகால் வளவன்** என்பவன். இப்பெரு மன்னன் காலத்தில் சோழநாடு பல்வகையிலும் விரிந்து சிறப்புற்றிருந்தது. இவன் காவிரிக்கு அணை கட்டினான்; நாட்டை வளப்படுத்தினான். இவன் சேர, சோழ, பாண்டிய நாடுகளைத் தன் கீழ்ப்படுத்தி ஆண்டான்.

3. கரிகால் வளவனுடைய காலத்திற்குப் பின், சில நூற்றாண்டுகள் வரையில் சோழர்கள் வலிமை குன்றி இருந்தனர். பல்லவர் என்பார் தொண்டை நாட்டில் காஞ்சிபுரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்தனர். அவர்கள் சோழ நாட்டைக் கைப்பற்றிச் சோழனைத் தமக்குக் கப்பங் கட்டும் சிற்றரசனாக்கிக் கொண்டார்கள். பிற்காலத்தில் **விசயாலயன்** என்னும் சோழ மன்னன் பல்லவர்களை வென்றான். அவன் பின்னோர் **பிற்காலச் சோழர்** எனப்பட்டனர். அவர்களுள் கரிகாலனைப்போலச் சிறப்புடன் விளங்கியவர் **இராசராச சோழர்** ஆவர்.

4. இராசராச சோழரின் தந்தையார் சுந்தர சோழர் எனப்படுவார். இராசராசர் தம் சிறிய தந்தையாகிய மதுராந்தகச் சோழர் அரசாள விரும்பிய காலம் வரை அதாவது நாற்பது ஆண்டுகள் வரையில் இளவரசராகவே இருந்து, பின் அரசரானார். அதனால் இராசராசர் அரசியல் நுட்பங்களை நன்கு அறிந்து கொள்ள முடிந்தது. இராசராசர் கி. பி. 985 முதல் 1014 வரை அரசாண்டார். இவர் காலத்தில் தஞ்சாவூர் சோழநாட்டுத் தலைநகராக விளங்கிற்று.

5. இராசராசர் அரசரானதும் தம் படை வலிமையைப் பெருக்கிக் கொண்டார். இவரிடத்தில் வலிமை பொருந்திய தரைப்படையும், கப்பற்படையும் இருந்தன. இவர் அரியணை ஏறியதும் தமக்குப் பகைவர்களாய்

இடையூறு செய்து வந்த சேர, பாண்டியர்கள் மீது படையெடுத்துச் சென்று நான்கு ஆண்டுகள் போர் புரிந்து வெற்றி பெற்ருர்; அதனுல் மும்முடிச் சோழர் என்ற பட்டமும் பெற்ருர்.

6. அக்காலத்தில் வேங்கை நாட்டைச் சத்தி வர்மர் என்பவர் ஆண்டு வந்தார். அவரை அவருடைய பகைவர் துன்பப்படுத்தித் துரத்தி விட்டனர். அதனுல், சத்திவர்மர் இராசராசரிடம் வந்து தம்மைக் காப் பாற்றுமாறு வேண்டிக் கொண்டார். இராசராசர் வேங்கை நாட்டின் மீது படையெடுத்துச் சென்று, பகைவர்களே ஒழித்துச் சத்திவர்மருக்கு நாட்டை மீட்டுக் கொடுத்தார். சத்திவர்மரின் தம்பியாரான விமலாதித்தருக்குத் தம் மகள் குந்தவ்வை என்ப வரை மணம் செய்து கொடுத்தார். சத்திவர்மருக்குப் பின் வேங்கை நாட்டுக்கு விமலாதித்தர் அரசராஞர்.

7. பின்னர், இராசராசர் வேங்கை நாட்டுக்கு வடக்கே இருந்த கலிங்க நாட்டின் மீது படையெடுத் துச் சென்று வெற்றி கொண்டார். இவர் அங்கிருந்த மகேந்திர மலேயின் மீது வெற்றித் தூண் ஒன்றையும் நாட்டுவித்தார். பின்னர், இராசராசர், மைசூர் நாட்டின் கீழ்ப் பகுதியான கங்கபாடியை வென்று அதன் தலேநக ரான தழைக் காட்டிற்கு இராசராசபுரம் என்ற பெய ரையும் வைத்தார். இராசராசர் கொங்குநாடு, குடகு நாடு, கொல்லம், கொடுங்கோளூர் முதலியவற்றையும் வென்ருர். இதனுல் சோழ நாடு பெரும் பரப்புடைய தாயிற்று.

8. பின்னர் இராசராசர் இலங்கை மீது படை யெடுத்துச் சென்று, இலங்கை மன்னனே வென்ருர். அதன் தலேநகரான அநுராதபுரத்தை அழித்தார். பொலன்நருவா என்ற வேறு ஒரு நகரைத் தலேநகராக்-

கிஞர். அந்நகரில் ஒரு சிவன் கோவிலேக் கட்டினர். இலங்கை நாட்டிற்கு மும்முடிச் சோழ மண்டலம் என்ற பெயரும் அளித்தார்.

9. இராசராசர் தம் பெருநாட்டை மண்டலம், வளநாடு, கோட்டம், கூற்றம் எனப் பிரித்துப் பிரதிநிதிகளே ஆங்கு ஆங்கு அமைத்து அரசாண்டார். இவர் காலத்தில் நிலம் முழுவதும் அளக்கப்பட்டு நில வரி விதிக்கப்பட்டது. அதனுல் இவருக்கு உலகளந்தான் என்ற பட்டமும் உண்டு. இவருக்கு உலகமகாதேவியார், வானவன்மாதேவியார் என்ற இரு மனேவியர் இருந்தனர். வானவன்மாதேவியார் வயிற்றிற் பிறந்தவரே இவருக்குப் பின் சோழ நாட்டைச் சிறப்புடன் ஆண்ட இராசேந்திர சோழர்.

10. இராசராசர் சிறந்த சிவ பக்தர். ஆனுலும் பிற சமயங்களிடத்தில் வெறுப்பு இல்லாதவர். மைசூரில் இவர் வைணவக் கோயில்களேக் கட்டுவித்தார். நாகப்பட்டினத்திலிருந்த சூடாமணி விஹாரம் என்ற பௌத்த கோவிலுக்கு ஆனேமங்கலம் என்ற ஊரைத் தானமாக அளித்தார். தஞ்சாவூரில் இவர் ஒரு பெரிய சிவன் கோவிலேக் கட்டுவித்தார். அதனேப் பெரிய கோயில் என்றும் கூறுவர். இராசராசர் அதற்குப் பல ஊர்களேத் தானமாக அளித்தார். அப்பெரிய கோவில் கோபுரம் இருநூற்றுப் பதினுறடி உயரமுள்ளது. அக்கோவிலில் ஒரே கல்லில் செதுக்கப்பட்ட பன்னிரண்டடி உயரமுள்ள நந்தி ஒன்று இருக்கிறது. அக்கோவிலில் காணப்படும் சித்திரங்களும், சிற்பங்களும் அற்புதமானவை. அக்கோவிலேக் கருவூர்த் தேவர் என்பார் பாடியுள்ளார்.

11. இராசராசர் தமிழ் மொழிக்கும் சைவ சமயத்திற்கும் அரிய தொண்டு செய்துள்ளார். திருஞான

சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் என்பார் மூவரும் பாடிய தேவாரப் பதிகங்கள் தில்லை என்னும் சிதம்பரத்தில் நடராசர் கோவிலில் அடைபட்டிருந்தன. இராசராச சோழர், நம்பியாண்டார் நம்பி என்பவரைக் கொண்டு, அவற்றைத் தேடியெடுத்து ஏழு திருமுறைகளாக முறைப்படுத்தி அமைத்தார்.

12. அருள்மொழித் தேவன், மும்முடிச் சோழன், ஜயங்கொண்ட சோழன், நிகரிலி சோழன் முதலியன இவருடைய சிறப்புப் பெயர்கள் ஆகும். இவர் காலத்தில் இசை, நடனம், சிற்பம், சித்திரம் முதலான கலைகள் சிறந்தோங்கி விளங்கின.

*அரும்பதங்கள்: முடிமன்னர், ஆண்மை, தொன்றுதொட்டு, கப்பம், இடையூறு, சமயம், கோட்டம், கூற்றம், தானம், திருமுறை, சிற்பம், கலைகள்.*

**பயிற்சி**

I. விடை எழுதுக;-

1. தமிழகத்தின் முற்காலப் பிரிவுகள் யாவை?
2. பழங் காலச் சோழர்களுக்குத் தலை நகரமாக விளங்கியவை யாவை?
3. கரிகாலனின் இயல்பை விளக்குக.
4. பிற்காலச் சோழர்களில் சிறந்தவர் யார்?
5. பிற்காலச் சோழர்களுக்கு எது தலைநகராக விளங்கியது?
6. இராசராசருக்கு மும்முடிச் சோழர் என்ற பெயர் ஏன் ஏற்பட்டது?
7. சத்திவர்மர் என்பவர் யார்? அவருக்கு இராசராசர் எவ்வாறு உதவி புரிந்தார்?

II. கோடுள்ள இடங்களைத் தகுந்த சொற்களால் நிரப்புக:-

1. இராசராச சோழருடைய தந்தையார்———
(விஜயாலயர், சுந்தர சோழர், கண்டராதித்தர்)

2. இராசராசர் தம் தங்கையான———விமலாதித்தருக்கு மணம் செய்வித்தார்.
(வானவன் மாதேவியை, குந்தவ்வையை, செம்பியன் மாதேவியை)

3. இராசராசர் மைசூர் நாட்டின் கீழ்ப் பகுதியில் உள்ள ———வென்றார்

(தடிகைபாடி, நுளம்பபாடி, கங்கபாடி)

4. பெரிய கோவிலைப் புகழ்ந்து———பாடியிருக்கிறார்.

(சுந்தரர், நம்பியாண்டார் நம்பி, கருவூர்த் தேவர்)

III· பின் வரும் சொற்களை வாக்கியங்களில் பயன்படுத்துக :-

ஆதரித்து, வலிமை, வெற்றி, நுட்பங்கள், அறிகுறியாக, மிகவும்.

# 18. பேராசையின் விளைவு

1. மூப்புடைப் புலிதா(ன்) ஒன்று
மூழ்கியோ(ர்) ஏரி யின்கீழ்க்
காப்புடன் தருப்பை தன்னைக்
கையில்வைத் திருக்கும் போது
நாப்புடை மறைவ லாள(ன்)
நண்ணியவ் வழியிற் செல்லக்
கூப்பிடல் செய்தன் ஞேனைக்
குறித்தந்தப் புலிதான் கூறும்:

2. 'அந்தணு இந்தக் காப்பை
யளிப் ப(ன்)நீ வாவென்(று) ஓதச்
சிந்தையில் வேட்கை கூர்ந்து
செப்புவான்: புலியா ரேநீர்,
வெந்துயிர்க் கொலைமாந் தர்க்கு
விளைப்பது விட்டுத் தானம்
எந்தநல் வழியிற் செய்வீ(ர்)
எனக்கதை கூறு(க)' என்றான்.

3. புலியது கேட்டு, 'நானே
பூசுரா நகமும் பல்லும்
இலன்கிழ மானேன்; பாவம்
இழைப்பது விடுத்து நாளும்

பொலிதரு தானஞ் செய்கை
பொருளெனக் கொண்டே(ன்)! அஞ்சேல்
சலமதின் மூழ்கி வந்து
தருமிதைக் கொடுபோ' என்ன.

4. நன்றென மறையோன் மூழ்க
நண்ணினு(ன்) ஏரி நீரில்
அன்றவன் கால்கள் சேற்றில்
அழுந்திடத் திகைத்து நின்ருன்
சென்றது புலிநா(ன்) உன்னைச்
சேற்றினின்(று) எடுப்பே(ன்) என்னக்
கொன்றது குருதிதன்னைக் குடித்த(து)
என்(று) உரைத்த(து) அன்றே.

—பஞ்ச தந்திரம்.

### அரும்பத உரை

1. மூப்பு-முதுமை; நாப்புடை-நாவினுல் சொல்லக்கூடிய; மறை-வேதம்; நண்ணி-அடைந்து.

2. சிந்தை-மனம்; வேட்கை-ஆவல்; செப்புவான்-கூறத் தொடங்கினன்; வெந்துயர் -(வெம்மை+துயர்) - கொடிய துன்பம்; மாந்தர்-மக்கள்.

3. பூசுரன்-அந்தணன்; இலன்-இல்லாதவன்; இழைப்பது-செய்வது; பொலிதல்-விளங்குதல்; அஞ்சேல்-பயப்படாதே; சலம்-நீர்; கொடுபோ-கொண்டுபோ.

4. மறையோன்-வேதங்களை யுணர்ந்த அந்தணன்; நண்ணினன்-அடைந்தான்; குருதி-இரத்தம்.

### பயிற்சி

1. புலி அந்தணனிடம் என்ன கூறியது?
2. அந்தணன் புலியிடம் கூறியன யாவை?
3. தன்னிடம் வருவதற்கு அஞ்சிய அந்தணனிடம் புலி யாது கூறியது?
4. சேற்றில் திகைத்து நின்ற அந்தணனைப் புலி என்ன செய்தது?
5. இக்கதையால் நீ உணர்ந்து கொள்ளும் அறிவுரை யாது?



# 19. பாண்டித்துரைத் தேவர்

1. முற்காலத்தில் பாண்டியர்கள் சங்கங்கள் அமைத்துத் தமிழ் மொழியை வளர்த்தார்கள். முன்பு முதற் சங்கம், இடைச் சங்கம், கடைச்சங்கம் என்ற மூன்று சங்கங்கள் இருந்ததாக அறிஞர்கள் கூறுகின்றனர். அவற்றுள் கடைச் சங்கம் என்பது இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் மதுரையில் இருந்தது என்று கூறப்படுகிறது. சமணர் காலத்தில் கி. பி. நான்காம் நூற்றுண்டில் சமணர் தமிழ்ச் சங்கம் ஒன்று இருந்தது. அதன் பின் சங்கம் யாதொன்றும் இருந்ததாகத் தெரிய வில்லே. எனினும், அரசர்களும் குறு நில மன்னர்களும் செல்வர்களும் தமிழ்ப்புலவர்களே ஆதரித்துத் தமிழ்மொழியை வளர்த்தனர்.

2. இற்றைக்கு ஐம்பத்து மூன்று ஆண்டுகளுக்கு முன் மதுரையில் ஒரு தமிழ்ச் சங்கம் நிறுவப்பட்டது. அதனை ஏற்படுத்தியவர் பாண்டித்துரைத் தேவர் என்னும் தமிழ் வள்ளல். பாண்டிய நாட்டின் ஒரு பகுதி **சேதுநாடு.** அதனை ஆண்டு வந்த குறுநில மன்னர்கள் **சேதுபதி**கள் எனப்படுவர். இராமநாதபுரம் சேது நாட்டின் தலைநகரம் ஆகும். முத்து ராமலிங்கச் சேதுபதி என்பவரின் மூத்த சகோதரரான பொன்னுசாமித் தேவர் பாலவனத்தம் சமீன்தார் ஆவர். அவருக்கு மூன்று மைந்தர்கள் இருந்தனர். அவர்களில் இளையவரான **பாண்டித் துரைத் தேவர்** கி. பி. 1867-ஆம் ஆண்டு பிறந்தார். இவருக்குத் தந்தையார் இட்ட பெயர் **உக்கிர பாண்டி**யர் என்பதாகும்.

3. பாண்டித்துரைத் தேவர் இளமையில் தந்தையை இழந்தார். பின்னர் இராமநாதபுரத்திலுள்ள ஆங்கிலக் கல்வி கற்கும் பள்ளியில் சேர்ந்து கல்வி பயின்றார். பாண்டித்துரைத் தேவர் தம் பதினெட்டாம் வயதில் சமீனைத் தாமே நிர்வாகம் செய்யத் தொடங்கினார். அவர் சைவ புராணங்களையும் சமய நூல்களையும் நன்கு கற்றார். பாண்டித்துரைத் தேவர் நூலாராய்ச்சியில் தம் காலத்தைக் கழித்தார்.

4. பாண்டித்துரைத் தேவர் கேட்பவர் மகிழும்படி பிரசங்கம் செய்வதில் வல்லவர் ; தலைமை தாங்கிப் பெருங் கூட்டங்களை நடத்துவதிலும் வல்லவர். ஒரு சமயம் மதுரைக்குப் பாண்டித்துரைத் தேவர் வந்து சிலகாலம் தங்கியிருந்தார். அவர் பிரசங்கத்தைக் கேட்க மதுரை மக்கள் விரும்பினர். அதற்காகக் கம்பராமாயணமும் திருக்குறளும் பாண்டித்துரைத் தேவருக்கு வேண்டியிருந்தன. அவற்றை எவரிடத்திலிருந்தும் பெற முடியவில்லை. "தமிழ் நிலைபெற்று

வாழ்ந்த இந் நகரத்தில் தமிழ் நூல்கள் கிடைப்பது அரிதாய் இருக்கின்றதே! என்னே நம் மொழியின் நிலை! அதனை வளர்ந்தோங்கச் செய்ய வேண்டுவது நம்முடைய கடமை,'' என்று தேவர் நினைத்தார்.

5. மதுரையில் அரசியல் மாநாடு கூடியது. அதில் பங்கெடுத்துக்கொண்ட பாண்டித்துரைத் தேவர், அதுவே சமயம் என்று எண்ணித் தமிழ்ச் சங்கம் ஒன்று ஏற்படுத்த வேண்டியதன் அவசியத்தை அங்குக் கூடியிருந்த அறிஞர்களுக்கு விளக்கினர். 1901-ஆம் வருடம் செப்டம்பர் மாதம் 14-ஆம் தேதி பாண்டித்துரைத் தேவர் சேதுபதி உயர்நிலைப்பள்ளியில் **நான்காம் தமிழ்ச் சங்கத்தை** நிறுவினர். அப்போது தமிழ்நாட்டிலிருந்த புலவர் பெருமக்கள்பலர் வந்திருந்தனர். அச்சங்கத்தில் **செந்தமிழ்க் கலாசாலை, பாண்டியன் புத்தகசாலை, நூலாராய்ச்சிச் சாலை** முதலியன அமைக்கப்பட்டன. பாண்டித்துரைத் தேவர் நூல் நிலையத்திற்குப் பல நூல்களை அளித்தார். தேவரவர்கள் மதுரையில் தமக்குச் சொந்தமான பெரிய மாளிகையைத் தமிழ்ச் சங்கத்திற்கு அளித்தார்.

6. பாண்டித் துரைத் தேவர் தமிழ்ச் சங்கத்தைக் குழந்தையைப் பாதுகாப்பது போலக் கண்ணுங் கருத்துமாய் வளர்த்து வந்தார்; மாணவர் பலருக்கு உணவு, உடை, உறையுள் முதலியன அளித்து, அவர்கள் கல்வி கற்கும்படி செய்தார்; தமிழ்ச் சங்கத்திலிருந்து மாதம் ஒரு முறை 'செந்தமிழ்' என்ற பத்திரிகை வெளிவரும்படி செய்தார். பண்டித பரீட்சையை மூன்று வகையாகப் பிரித்து, நடத்தும்படி ஏற்பாடு செய்தார். மதுரைத் தமிழ்ச் சங்கத்திற்கு ஓர் அச்சகத்தையும் ஏற்படுத்தினர். கப்பலோட்டிய தமிழரான வ. உ. சிதம்பரம் பிள்ளை, 'சுதேசக் கப்பற் கம்பெனி' ஒன்றைத்

தொடங்கியபொழுது நாட்டுப் பற்று மிகவும் உடைய பாண்டித்துரைத் தேவர் ஓர் இலட்ச ரூபாய் அளித்தார். இவ்வாறு பல நன்மைகளை மொழிக்கும் நாட்டிற்கும் செய்த பாண்டித்துரைத் தேவர் 1911-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் இரண்டாம் தேதி இவ்வுலக வாழ்வை நீத்தார்.

7. பண்டைச் சங்கங்களைப்போல் பாண்டித்துரைத் தேவர் நிறுவிய இந்தச்சங்கமும் தமிழ்மொழி வளர்ச்சி-யில் கருத்தைச்செலுத்தி இன்றும் அவர் புகழைப்பரப் பிச்செம்மையாக நடந்து வருகிறது.

*அரும்பதங்கள்: குறுநிலமன்னர், நிறுவப்பட்டது, சமீன் தார், கண்காணிப்பு, பிரசங்கம், மாநாடு, புலவர், உறையுள், நீத்தார், பற்று, பேருதவி.*

**பயிற்சி**

I. விடை எழுதுக :-

1. முற்காலத்தில் நம் நாட்டில் இருந்த சங்கங்கள் யாவை?
2. சேதுபதி என்போர் யாவர்?
3. பாண்டித்துரை தேவர் எங்குப் பிறந்தார்? அவருடைய தந்தையார் யாவர்?
4. அவர் சங்கம் அமைக்க எண்ணியது எதனால்?
5. நான்காம் தமிழ்ச் சங்கம் எப்போது தோன்றியது?

II. பின்வரும் சொற்களை வாக்கியங்களில் பயன்படுத்துக :-

ஆதரித்து, கண்காணிப்பில், இளமையில், கண்ணுங் கருத்துமாய், செம்மையாக, பேருதவி.

III. எதிர்ப்பதங்கள் எழுதுக:-

முற்காலம் ×
இளமை ×
நன்மை ×
அரிய ×




# 20. கூட்டுறவுச் சங்கம்

1. இந்திய நாடு பயிர்த்தொழிலில் சிறந்து விளங்கும் நாடு. இந்நாட்டில் கிராமங்கள் மிகுதி. கிராமங்களில் பெரும்பாலும் வாழ்வோர் உழவர்களே. அவர்கள் மிக்க ஏழைகளாய் இருக்கின்றனர்; விவசாயம் செய்வதற்கும் பொருள் இல்லாமல் கடன் வாங்குகின்றனர். கடன் கொடுப்பவர்களோ அதிக வட்டி கேட்கின்றனர். குறைந்த வட்டிக்குப் பணம் கிடைப்பதில்லை. விவசாயத்தில் வரும் வருமானத்தைக் கொண்டு கடனையும் திருப்பிக் கொடுத்துத் தாமும் வாழ அவர்களால் முடிவதில்லை. எனவே அவர்கள் பலவகைக் கஷ்டங்களுக்குள்ளாகின்றனர். முடிவில் கிராமத்திலும் வாழ்க்கை நடத்த முடியாதவர்களாய் எங்கேனும் சென்று பிழைக்க எண்ணிக்கிராமங்களைவிட்டு வெளியேறுகின்றனர். கிராமங்கள் பாழாகின்றன. வேளாண்மைத் தொழிலும் குன்றுகிறது.

2. இந்தக் கொடிய நிலையை நீக்குவது முதன்மையான வேலையாகும். கிராமங்களுக்கு மக்கள் விரும்பிச் செல்லும் நிலையை உண்டாக்க வேண்டும். பயிர்த் தொழிலையும் பிற குடிசைத் தொழில்களையும் கிராம மக்கள் விருப்பத்தோடு செய்ய, அவர்களுக்குத் தக்க வசதிகள் அளிக்க வேண்டும். நகரத்தில் மக்கள் அடையும் நலன்களை யெல்லாம் கிராம மக்களும் பெற்று வாழச் செய்ய வேண்டும். அவர்களுக்குக் கல்வி, சுகாதாரம், நோய்க்குச் சிகிச்சை, குடிசைத் தொழில் வளர்ச்சிக்குரிய வசதி, சாலை வசதி, குடி தண்ணீர் வசதி முதலியன அளிக்க வேண்டும். இவற்றை எல்லாம் அரசாங்கமே செய்யவியலாதன்றோ ? ஆதலால் அரசாங்கமும் குடிமக்களும் சேர்ந்து ஆவன செய்ய வேண்டும்.

3. குடி மக்கள் என்ன செய்யலாம் ? அரசாங்கத்தார் என்ன செய்யலாம் ? அரசாங்கத்தார் கிராமங்களில் கூட்டுறவுச் சங்கத்தை ஏற்படுத்தி அதன் மூலம் குடியானவர்களுக்கு உதவி புரியலாம். கிராமங்களில் சிறிது வசதியுள்ளவர்கள் அச்சங்கத்தில் சேர்ந்து கொள்ள வேண்டும். அச்சங்கத்தில் அவர்கள் குறிப்பிட்ட தொகையைச் செலுத்தி உறுப்பினராக வேண்டும். அத்தொகையைச் செலுத்தக் கூடிய பலரைச் சேர்த்துக்கொள்ள வேண்டும். அதில் விவசாயிகளே அல்லாமல் கற்றவர்களும், செல்வர்களும் சேர்ந்து கொள்ள வேண்டும். அவர்கள் எல்லோரும் சேர்ந்து சங்கத்தை நடத்துவதற்குரியவர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும். ஒரு தலைவர், ஒரு காரியதரிசி, நிர்வாகக் குழுவினர் என்பார்களை அமைத்துக்கொள்ள வேண்டும். கடன் வாங்குதல், கடன் கொடுத்தல், என்பன அச்சங்கத்தின் வேலை. அங்கத்தினர்கள்

கொடுக்கும் பங்குத் தொகையையும், அரசாங்கத்தார் கொடுக்கும் பங்குத் தொகையையும் வைத்துக் கொண்டு கடன் கொடுத்துவர வேண்டும். கிராமச் சங்கங்கள் தமக்கு அதிகத் தொகை வேண்டியிருந்தால் தாலுக்கா, ஜில்லாச் சங்கங்களிலிருந்து கடன் வாங் கிக்கொள்ளலாம்.

4. ஒவ்வொரு குடியானவனும் இச் சங்கத்தின் உறுப்பினனுக வேண்டும். பழைய கடனைத் தீர்ப்பதற்-கும், விவசாயத்திற்கும், கைத்தொழில் செய்ய முதல் போடுவதற்கும் இச்சங்கத்தில் கடன் வாங்கிக்கொள்ள லாம். செல்வர்கள் தங்கள் செலவிற்குப்போக எஞ்சி யுள்ள பணத்தை இந்தச் சங்கத்தில் போட்டுவைக்க லாம். அதற்கு வட்டி கிடைக்கும். பின்னும் அப் பணம் தம் ஊர் மக்களுக்கே பயன்படுத்தப்படும். பெரு நலமுமுண்டாகும். இச்சங்கம் குறைந்த வட்-டிக்குப் பணத்தைக் கொடுக்கிறது. கடன் வாங்கிய பணத்தை மொத்த தொகையாகச் செலுத்த வேண்டி யதுமில்லை. பல தவணைகளில் சிறு சிறு தொகை யாகச் செலுத்தி, எளிதில் கடனைத் தீர்த்துவிடலாம்.

5. இத்தகைய கூட்டுறவுச் சங்கத்தைக்கொண்டு பல நன்மைகளைச் செய்துகொள்ளலாம். கூட்டுறவுப் பண்டசாலை ஏற்படுத்தி, நமக்கு வேண்டும் பொருளை அப்பண்டசாலையின் மூலம் தருவித்துக் கொண்டால் குறைந்த விலையில் நல்ல பொருள்களாகக் கிடைக்கும். கூட்டுறவுப் பண்டசாலை, பொருள்களை நேராக உற்-பத்தி செய்யுமிடத்திலிருந்து பெறும். அதனுல் நல்ல பொருள்கள் மலிவான விலைக்குக் கிடைக்கும்; அப் பண்டங்களை விற்பதனுல் கிடைக்கும் இலாபத்தினை அங்கத்தினர் அனைவரும் பங்கிட்டுக் கொள்வார்கள்.

6. கூட்டுறவுச் சங்கங்களைப் பல வகைகளிலும் அமைத்துக் கொள்ளலாம். கட்டடக் கூட்டுறவுச் சங்கம் அமைத்து வீடுகள் கட்டிக்கொள்ளலாம். உழவுக்குரிய ஏர், அரிவாள், மண்வெட்டி, கடப்பாறை, இறைசால் முதலியன வாங்குதற்கும், எரு, விதை முதலியன வாங்குதற்கும், துணிகள் வாங்குதற்கும், பாத்திரங்கள் வாங்குதற்கும் தனித்தனிக் கூட்டுறவுச் சங்கங்களை அமைத்துக் கொள்ளலாம். அவைபோலவே, துணி நெய்தல், பால் பண்ணை முதலியவற்றிற் கெல்லாம் தனித்தனிக் கூட்டுறவுச் சங்கங்கள் ஏற்படுத்திக் கொள்ளலாம்.

7. கிராமத்தில் உற்பத்தியாகும் பொருள்களை எல்லாம் விற்கவும், கிராமத்தினருக்கு வேண்டிய பொருள்களை யெல்லாம் எளிய விலைக்குக் கொடுக்கவும் ஒரு கூட்டுறவுச் சங்கத்தை ஏற்படுத்திக் கொள்ளலாம். அதனால் விளையும் நன்மை மிகப் பெரியது. பெரு லாபம் அடையும் வியாபாரிகளின் கொடுமையிலிருந்து குடியானவர்களைக் காக்கலாம். பெரிய வியாபாரிகள் அடையும் இலாபத்தை இதன் மூலம் குடியானவர்களே அடையும்படி செய்யலாம்.

8. கிராம மக்கள் தங்கள் வாழ்க்கைக்கு வேண்டிய பலவகைக் கூட்டுறவுச் சங்கங்களை ஏற்படுத்தி, அங்கத்தினர்களாகி, அச்சங்கங்களின் வழியாகப் பலவற்றையும் செய்வதென உறுதி கொண்டுவிட்டால் கிராமங்கள் விரைவில் முன்னேற்றமடையும். அக்கூட்டுறவுச் சங்கங்களில் கிடைக்கும் இலாபத்தில் ஒரு பகுதியைக் கொண்டு, பள்ளிக்கூடம், மருத்துவச்சாலை, குடி தண்ணீர் வசதிகள், சுகாதார வசதிகள், முதலியவற்றையும் கிராம மக்கள் எளிதில் எய்தலாம். எல்லாவற்றிற்கும் அடிப்படையாகக் கிராம மக்களுக்-

குள் ஒற்றுமை மனப்பான்மையும், உதவி செய்யு உள்ளமும், உண்மையும் இருக்கவேண்டும். இவற்றேடு ஒவ்வொருவரும் இப்பெருநலனை அடைய முயற்சி யுடையாராகவும் இருக்க வேண்டும். 'சேர்ந்து வாழ் வதே சிறந்த வலிமை'; 'ஒன்று பட்டா லுண்டு வாழ்வு இங்கு ஒற்றுமை நீங்கில் அனைவர்க்கும் தாழ்வு நன்றிது தேர்ந்திடல் வேண்டும்,' என்னும் ஆன்றோர் களின் அமுத வாக்குக்களை நன்கறிய வேண்டும். இந்த ஞானம் வந்தால் வாழ்க்கை இன்பமாக இருக்கும்.

அரும்பதங்கள் : ஆவன, உறுப்பினர், காரியதரிசி, நிர் வாகம், குழு, பெருநலம், தவணை, பண்டசாலை, உழவு, பண்ணை, அடிப்படை, அமுதவாக்கு, ஞானம், முன்னேற்றம்.

### பயிற்சி

I. விடை எழுதுக :-

1. விவசாயிகள் ஏன் கஷ்டப்படுகிறார்கள்?
2. கிராமங்கள் அழியாமல் இருக்க நாம் என்ன செய்ய வேண்டும்?
3. கூட்டுறவுச் சங்கத்தை எவ்வாறு அமைத்துக் கொள்ள வேண்டும்?
4. கூட்டுறவுப் பண்டசாலைகள் மக்களுக்கு எவ்வாறு உதவுகின்றன?
5. கிராமங்கள் முன்னேற்றம் அடைவதற்குரிய வழிகள் யாவை?
6. ஒற்றுமையை விளக்கும் பெரியோர் மொழிகளை எழுதுக.

II. கோடுள்ள இடங்களைத் தகுந்த சொற்களால் நிரப்புக :-

1. இந்திய நாடு ——— சிறந்து விளங்கும் நாடு.
(கைத்தொழிலில், பயிர்த்தொழிலில், இயந்திரத் தொழிலில்)

2. நம் நாட்டில் வசிப்பவர்களில் பெரும்பாலான மக்கள் ———.

(உழவர்கள், தொழிலாளிகள், செல்வர்கள்)

3. மக்கள் கிராமங்களை விட்டு வெளியேறுவதால் ——— குன்றுகிறது.

(வேளாண்மைத் தொழில், குடிசைத் தொழில், வியாபாரம்)

III. எதிர்ப்பதங்கள் எழுதுக :-

விரும்புதல் ×
குறைந்த ×
இலாபம் ×
ஒற்றுமை ×
உண்மை ×

# 21. மேல்நாட்டுத் தமிழ்த் தொண்டர்

1. தமிழ் மொழி நம் தாய் மொழி. இது மிகவும் தொன்மையான மொழி. இது எளிய மொழியும் ஆகும். தமிழ் என்னும் சொல்லுக்கு இனிமை என்பது பொருள். எனவே, இது இனிய மொழி. இம்மொழி ஒரு காலத்தில் இந்தியா முழுவதும் பரவியிருந்தது. பல்வேறு காலங்களில் பல்வேறு நாட்டார் நம் நாட்டில் குடிபுகுந்தனர். அதனால் நாளடைவில் தமிழ் மொழி வழங்கும் நிலப்பகுதி குறுகிக்குறுகி இன்று காணப்படும் எல்லைக்குள் அடங்கிவிட்டது.

2. தமிழ் மொழியை முன்பு சேர, சோழ, பாண்டிய மன்னர் வளர்த்து வந்தனர், அவர்கள் தமிழ்ப் புலவர்களை ஆதரித்து வந்தனர். அதனால் தமிழ் மொழியில் பல நூல்கள் தோன்றின. மொழியும் செம்மையுற்றது. அவ்வாறு தமிழ் மொழியைப் பேணி வந்த பெருமை பாண்டியர்க்கே சிறப்பாக உரியது. பின்னர்க் குறுநில மன்னர்களும் செல்வர்களும் தமிழ்

மொழியை ஆதரித்து வளர்த்தனர். பௌத்தர்களும், சமணர்களும் தமிழ் மொழிக்குச் சிறந்த தொண்டாற்றி வளப்படுத்தினர். அதன் பின்னர்ப் பல்லவ மன்னர்களும் தமிழை ஆதரித்துக் காத்துவந்தனர். நம் நாட்டிற்குத் தம் மதத்தைப் பரப்புவதற்காக வந்த ஐரோப்பியர்களிற் பலர் தமிழை நன்கு கற்றுத் தமிழிற்கு அருந்தொண்டு புரிந்துள்ளனர். அவர்களுள் சிறந்தவர் **கால்டுவெல், ஜி. யூ. போப்,** **வீரமா முனிவர்** என்ற **கான்ஸ்டன்டைன் பெஸ்கி** என்பவர் ஆவர்.




3. கி. பி. பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ் நாட்டிற்குக் கிறிஸ்தவ மதத் தொண்டாற்றுபவராக வந்தவர் இராபர்ட் கால்டுவெல். இப்பெரியார் அயர்லாந்தில் பிறந்தார்; கிளாஸ்கோப் பல்கலைக் கழகத்தில் படித்து, பி. ஏ. பட்டம் பெற்றார். இவர் சித்திரங்கள் எழுதுவதிலும் சிறந்தவர். இவர் மத நூல்களை நன்கு கற்றுச் சமயத் தொண்டாற்றச் சென்னைக்கு வந்தார். சென்னையில் மூன்றாண்டுகள் இருந்து தமிழ் கற்றார். இவர் திருநெல்வேலி ஜில்லாவில் உள்ள இடையன்குடி என்ற ஊருக்குச் சென்றார். சென்னையிலிருந்து

இடையன்குடி நானூறு மைல் தொலைவில் இருக்கிறது. கால்டுவெல் சென்னையில் இருந்து இடையன் குடிக்கு நடந்தே சென்றார். இடையில் பல ஊர்களில் தங்கித் தமிழர்களோடு உரையாடித் தமிழ் நாட்டைப் பற்றியும், தமிழ் மக்களைப் பற்றியும் அறிந்துகொண்டார்; இடையன்குடியை யடைந்தார். இவர் அச்சிற்றூரைச் சீர்படுத்தி அங்கு ஒரு பெரிய கோயிலையும் கட்டினார். இவர் அங்கு ஐம்பத்துமூன்று ஆண்டுகள் மதத்திற்கும் தமிழுக்கும் தொண்டு செய்தார். கடைசியில் அங்கேயே இறந்தார். கால்டுவெல் தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், துளு என்னும் மொழிகளை ஆராய்ந்து திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் என்ற நூலை எழுதியுள்ளார்; மற்றும் திருநெல்வேலி வரலாறு என்னும் நூலையும் எழுதியுள்ளார். ஒப்பிலக்கண நூல் மொழி ஆராய்ச்சியாளருக்குப் பெரிதும் பயன்படுகிறது.

4. ஜி. யூ. போப் என்ற பெரியார் கி. பி. 1820 ஆம் ஆண்டில் பிறந்தவர். அவர் ஆங்கிலேயர். அவர் பல மொழிகளைக் கற்றுணர்ந்தவர். அவர் கி. பி. 1839-ல் சமயத்தொண்டு புரியச் சென்னைக்கு வந்தார். அங்கிருந்து அவர் திருநெல்வேலி ஜில்லாவில் உள்ள சாயர் புரத்திற்கு அனுப்பப்பட்டார். தூத்துக்குடிக்கு அருகிலுள்ள சிற்றூரான சாயர்புரத்தில் சமயத்தொண்டு செய்து வந்தார். போப்பையர் சாயர்புரத்திற்குச் செய்த தொண்டுகள் பல. போப்பையர் உழைப்பால் சாயர்புரம் பெரிதும் முன்னேற்றம் அடைந்தது.

5. போப், 1850-ஆம் ஆண்டு இங்கிலாந்திற்குச் சென்று மீண்டும் சென்னைக்கு வந்தார். அவர் தஞ்சாவூரில் எட்டு ஆண்டுகள் தங்கித் தமிழ் மொழியை

நன்கு கற்றுக்கொண்டார். அவர் உள்ளத்தைத் தமிழ் மொழி கவர்ந்துவிட்டது அவர் 1858 முதல் 187 வரை உதகமண்டலத்தில் தங்கினார்; அங்கு ஒரு பள்ளிக்கூடத்தையும் நடத்தினார். பின் அவர் பெங்களூருக்குச் சென்று அங்குப் பிஷப் காட்டன் பாடசாலைக்குத் தலைவராயிருந்தார். 1885-ஆம் வருடம் முதல் இறக்கும்வரை அவர் ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராக இருந்தார். அவர் 1908-ல் இவ்வுலக வாழ்வை நீத்தார்.

6. போப்பையர் தமிழ் மொழியைக் குறித்துப் பல சொற்பொழிவுகள் ஆற்றினார்; பல கட்டுரைகள் வரைந்தார். அவர் திருக்குறள், நாலடியார், திருவாசகம் என்பவற்றை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிட்டது குறிப்பிடத்தக்கது. அவருடைய மொழிபெயர்ப்பு நூல்களைப் படித்த பின்னரே மேனாட்டார் தமிழின் சிறப்பை உணர்ந்தனர். மாணவர் எளிதில் படிப்பதற்கு ஏற்றவாறு அவர் இலக்கண நூல் ஒன்று எழுதினார்; போப்பையர் தாம் இறந்த பின் தமது கல்லறையின் மீது 'தமிழ் மாணவன்' என்று எழுதி வைக்கும்படி சொன்னார் என்றால் அவருக்குத் தமிழின் மீது எவ்வளவுபற்று இருந்தது என்று அறியலாம் அல்லவா ?

7. வீரமாமுனிவர் இத்தாலிய நாட்டினர். இவருக்குத் தைரியநாத சுவாமி என்ற பெயருமுண்டு. இவர் இயற் பெயர் கான்ஸ்டன்டைன் பெஸ்கி என்பது. இவர் கி. பி. 1680-ல் பிறந்தார். இவர் கிரேக்கம், இலத்தீன், போர்த்துகீசு, தமிழ், தெலுங்கு, சம்ஸ்கிருதம் முதலான மொழிகளைக் கற்றவர். இவர் காமநாயக்கன்பட்டி, வடக்கன்குளம் என்னும் இடங்-

ளில் மதப் பிரசாரம் செய்து வந்தார். பெஸ்கி, இந்தியாவிற்கு வந்து தமிழ் நாட்டில் தங்கியது முதல் தமிழ் முனிவரைப்போலவே உடை, உணவு என்பவற்றைக் கொண்டு வாழ்ந்து வந்தார். திருச்சிராப்பள்ளியில் நவாபாயிருந்த சந்தா சாஹிபிடம் திவானுகவும் இருந்தார். இவர் கி. பி. 1742-ல் மணப்பாடு என்னும் இடத்தில் இவ்வுலக வாழ்வை நீத்தார்.

8. வீரமாமுனிவர் தமிழ் மொழியை நன்கு கற்றவர். தமிழில் செய்யுட்கள் இயற்றும் ஆற்றல் வாய்ந்தவர். இவர் பல நூல்களைத் தமிழில் இயற்றியுள்ளார். தேம்பாவணி, திருக்காவலூர்க் கலம்பகம், அடைக்கலமாலை, தொன்னூல் விளக்கம், சதுர் அகராதி, வேதியர் ஒழுக்கம், வேத விளக்கம், பரமார்த்த குரு கதை முதலியன இவர் இயற்றிய நூல்கள். தமிழ் மொழிக்கு முதல் முதல் அகராதி எழுதியவர் இவரே. வெளிநாட்டார் ஒருவர் தமிழ் நாட்டில் வந்து தங்கித் தமிழைக் கற்றுத் தமிழ் மொழியில் நூல்களைச் செய்யுளில் இயற்றுவது எவ்வளவு அருமை! தமிழ் மொழியின் இனிமை அல்லவா அவர்கள் உள்ளத்தைக் கவர்ந்தது!

9. இவ்வாறு மேனுட்டு மக்களும் போற்றும் படியான நம் தமிழ் மொழியைப்பற்றி நாம் நன்ருக அறிந்துகொள்ள வேண்டும்; பல நூல்களையும் படித்துப் பெருமையுற வேண்டும்.

*அரும்பதங்கள் :-* தொன்மையான, செம்மை, பேணி, சமயத்தொண்டு, தொலைவு, ஆராய்ச்சியாளர், சொற்பொழிவு, முன்னுரை, பற்று, மதப்பிரசாரம், நவாப், ஆற்றல், அகராதி, சதுர் அகராதி, கவர்ந்து, பொருள் ஆழம்.

## பயிற்சி

I. விடை எழுதுக :-

1. நம் தாய் மொழி எது? அது எந்தன்மை பொருந்தியது?
2. தமிழ்மொழிக்குத் தொண்டு புரிந்த மேல் நாட்டு அறிஞர்கள் யாவர்?
3. இராபர்ட் கால்டுவெல் எந்த நாட்டைச் சேர்ந்தவர்?
4. அவர் இடையன் குடியில் செய்த சீர்திருத்தங்கள் யாவை?
5. போப்பையர் தமிழ் மொழிக்குச் செய்துள்ள தொண்டுகள் யாவை?
6. அவர் தமிழின் மீது பற்றுடையவர் என்பதை எவ்வாறு அறியலாம்?
7. வீரமா முனிவர் இயற்றிய நூல்கள் யாவை?

II. சேர்த்து எழுதுக :-

| | |
|---|---|
| 1. போப்பையர் | திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணத்தை இயற்றினர். |
| 2. வீரமா முனிவர் | திருக்குறளை ஆங்கிலத்தில் பெயர்த்து எழுதினர். |
| 3. கால்டுவெல் | தேம்பாவணியை இயற்றினர். |

III. பின்வரும் சொற்களை வாக்கியங்களில் பயன்படுத்துக :-

தொன்மையான, சுலபமான, ஆதரித்து, கடைசியில், தொலைவில், அருகில், குறிப்பிடத்தக்க, பற்று.



## 22. புதைந்த நகரம்

1. உலகிலுள்ள நாடுகளில் மிகப்பழமையானவை இந்தியா, எகிப்து, பாபிலோனியா, கிரீஸ், சீனு என்பவைகளாம். இவற்றுள் எகிப்தும், பாபிலோனும் மிகப் பழமையானவை என்று வரலாற்று நூலாசிரியர்கள் கூறுவர். அவ்விரு நாடுகளின் தொன்மையைப்பற்றிப் பேசும் நூல்களும் பல. அவற்றின் பண்பாடுகளோ மிகச் சிறந்தன என்று மக்கள் சமீபகாலம் வரை எண்ணிக் கொண்டிருந்தனர். ஆனால் சிந்து நதிக்கரையில் புதைந்து கிடந்த நகரங்களைக் கண்டறிந்து செய்த ஆராய்ச்சிக்குப்பின் எகிப்து, பாபிலோனியா நாகரிகத்தைவிடச் சிந்து வெளி நாகரிகமே மிக மிகப் பழமையானது என்ற முடிவிற்கு ஆராய்ச்சிக்காரர் வந்துள்ளனர்.

2. பழமையான மக்கள் வாழ்ந்த நகரங்கள் பல மண்ணில் மறைந்துவிட்டன. சில ஆண்டுகளுக்குமுன்னர் நம் நாட்டில் சிந்து சமவெளியில் புதைந்து கிடந்த மொஹெஞ்சோதாரோ, ஹாரப்பா என்னும் நகரங்கள்

கண்டு பிடிக்கப்பட்டன. சிந்து என்பது இந்தியாவின் வடமேற்கில் ஓடும் பெரிய ஆறு ஆகும். சிந்து வெளி-யில் பல மண்மேடுகள் காணப்படுகின்றன. பஞ்சாப் மாகாணத்தில் லார்கானு என்னும் இடத்திற்கு வடக்கே இருபத்தைந்து மைல் தூரத்தில் உள்ள மேடான நிலப்-பகுதியைத் தோண்டிப் பார்த்தபோது, அங்குப் பழமை-யான நகரத்தின் சின்னங்கள் காணப்பட்டன. அந்நக-ரமே மொஹெஞ்சோதாரோ என்பதாகும்.

3. 'மொஹெஞ்சோதாரோ' என்பதற்கு இறந்தவர்களின் மேடு என்பது பொருளாம். அந்நகர அமைப்பு இக்காலத்து நகர அமைப்பை ஒத்து விளங்குகின்றது. வீதிகள் ஒழுங்கும் அகலமும் உடையனவாக இருக்கின்றன. பெரிய வீதியிருந்து மற்றொரு வீதிக்குச் செல்லக் குறுக்கு வீதிகள் காணப்படுகின்றன. நகரின் கழிவுநீர் வெளியே போவதற்காகக் கால்வாய்கள் அமைந்துள்ளன. வீதிகளில் பொதுக் கிணறுகள் இருக்கின்றன. நீராடும் குளங்கள் பெரியனவாக இருக்கின்றன. அவற்றிற்கு நாற்புறமும் படிக்கட்டு-களும் இருக்கின்றன. அக்குளத்திற்கு நீரளிக்கும் கிணறுகள் நான்கு பக்கங்களிலும் இருக்கின்றன.

4. பல்வேறு வகையான வீடுகளும் அங்குக் காணப்படுகின்றன. இரண்டே அறைகளை உடைய வீடுகளும் உண்டு வீடுகளின் நடுவில் முற்றம் என்ற அமைப்பும் உண்டு. வீட்டில் அறைகளும் கூடங்களும் இருக்கின்றன. ஒவ்வொரு வீட்டிலும் மேல் மாடியும், மேல்மாடியில் குளிக்கும் அறையும், அங்கிருந்து கீழ் நோக்கி இறங்கும் குழாயும் காணப்படுகின்றன. வீட்டிற்கு ஒரே வாயில்தான் உண்டு.

5. அந்நகரில் வாழ்ந்த மக்கள் பருத்தியாடை, கம்பளி யாடை என்பவற்றை உடுத்தினர் என்று தெரிகிறது. அவர்கள் பலவகை அணிகளும் அணிந்திருந்தனர். ஆண்களும் பெண்களும் மேலாடை அணிந்தனர். அவர்கள் நீண்ட போர்வையையும் தரித்துக் கொண்டிருந்தனர் என்று தெரிகிறது. ஆண்கள் தலைமயிரைப் பின்புறம் முடிந்து கொண்டனர் என்றும், அவர்களுக்குச் சிறிது தாடியும் மீசையும் இருந்தன என்றும் தெரிகிறது.

6. ஆண்கள் ஆபரணங்களை அணிந்திருந்தனர். அவர்களுடைய ஆபரணங்கள் பொன், வெள்ளி, தந்தம், மணிகள் என்பவற்றால் ஆனவை. சங்கு, பித்தளை, கொம்பு, எலும்பு என்பவற்றால் ஆகிய ஆபரணங்களும் காணப்படுகின்றன. இவற்றால் ஏழைகளும், செல்வர்களும் அந்நகரில் வாழ்ந்தனர் என்று அறியலாம். பலவகை வடிவங்களுடைய மண் பாத்திரங்களும், கோப்பைகளும் கிடைத்துள்ளன. ஊதுகுழல், மனித உருவங்கள், பறவைகள், வண்டிகள் முதலியவற்றின் பொம்மைகள் கிடைத்துள்ளன. கல்லாலும் பித்தளையாலும் செய்யப்பட்ட போர்க்கருவிகள் கிடைத்துள்ளன.

7. அந்நகர மக்கள் தானியங்களையும், மாமிசத்தையும் உண்டனர்; சிவனையும், சத்தியையும் வணங்கினர். இறந்தவர்களின் உடல்கள் அங்குப் பெரும்பாலும் எரிக்கப்பட்டன என்பது தெரிகிறது. சுவர்களிலும், பாத்திரங்களின் மேலும் காணப்படும் ஓவியங்கள் அவர்களுடைய ஓவியத் திறமையையும், கடவுள் சிலைகளும் பொம்மைகளும் அவர்களுடைய சிற்பத்திறமையையும் காட்டுகின்றன. அக்காலத்தில் சித்திர வடிவமான எழுத்துக்கள் இருந்தன என்றும் தெரிகின்றது.

8. ஆரியர் இந்தியாவிற்கு வருவதற்கு முன்பு இந்தியா முழுவதும் திராவிடரே வாழ்ந்தனர் என்று ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர், சிந்து வெளி-யில் வாழ்ந்த மக்கள் திராவிடர்களே. அவர்கள் நாகரிகம் திராவிட நாகரிகமே யாகும் என்று அறிஞர் கூறுவது இந்திய மக்களுக்குப் பெருமை தரக்கூடியதாகும்.

*அரும்பதங்கள் :* பண்பாடு, நாகரிகம், துறை, மேலாடை, அணி, ஓவியம், மட்கலம், பழமை.

## பயிற்சி

I. விடை எழுதுக:-

1. உலகில் மிகப் பழமையான நாடுகள் யாவை ?
2. சிந்து வெளியில் புதைந்து கிடந்த நகரங்கள் யாவை?
3. மொஹெஞ்சோதாரோ நகரின் அமைப்பை விளக்குக.
4. மொஹெஞ்சோதாரோவில் வசித்த மக்கள் எவ்வாறு இருந்தனர் ?
5. சிந்துவெளி நாகரிகத்தைப்பற்றி அறிஞர் கருத்து யாது ?

II. வாக்கியங்களில் பயன்படுத்துக :-

பண்பாடு, மிகமிக, பல்வேறுவகையான, பெரும்பாலும், காணப்படும்.

III. எதிர்ப்பதங்கள் எழுதுக :-

1. நாகரிகம் ×
2. பழமை ×
3. இறங்குதல் ×
4. ஏழை ×
5. இறந்தவர் ×




# 23. விஞ்ஞானப் பேரறிஞர் சர் சி. வி. இராமன்

1. உலகமானது அது தோன்றிய காலத்தில்இருந்தது போல் இப்பொழுதில்லை. இன்று இருப்பதுபோல ஆயிரம் ஆண்டுகளுக்கு அப்பால் இராது. உலகம் நாளுக்கு நாள் பல மாறுதல்களை அடைந்து கொண்டே வருகிறது. மக்கள் மண் மீது தோன்றி இரண்டரை லட்சம் ஆண்டுகளுக்கு மேல் ஆகிறது என்று அறிவாளர் கூறுகின்றனர். நெருப்பினை உண்டாக்கத்தெரியாத மக்களும் பண்டைக் காலத்தில் வாழ்ந்தனர் என்று நாம் படித்திருக்கிறோம். பிறகு அவர்கள் தாம் கண்டவற்றைத் தம்முடைய சிந்திக்கும் ஆற்றலால் தம் வாழ்க்கைக்குப் பயன்படுத்திக் கொண்டனர்.

2. பற்பல அற்புதங்களை இன்று நாம் காண்கின்றோம். நீர்ப்பரப்பின் மீது நீராவிக் கப்பல் செல்கிறது. நிலத்தின் மேல் மோட்டார், புகை வண்டிகள் முதலியன மிகவும் விரைந்து செல்கின்றன. ஆகாய விமானத்தின் மூலம் மக்கள் நீண்ட தூரத்திலுள்ள இடங்-

களுக்குக் குறைந்த கால அளவில் செல்கிருர்கள் மின்சார விளக்கு, விசிறி, படக்காட்சி முதலியவற் றை நாம் உபயோகிக்கிருேம். இவை போன்ற புதுமை கள் மனிதனுடைய சிந்திக்கும் ஆற்றலால் தோன்றிய விஞ்ஞானக் கலையின் விளைவுகளேயாம்.

3. விஞ்ஞானம், மேனுட்டில் மிக வேகமாய் வளர்ந்தது ; வளர்ந்துகொண்டு வருகிறது. அங்கு விஞ்ஞானத்தில் வல்ல பெரியார் பலர் தோன்றினர் ; இன்றும் பலர் உள்ளனர். அவ்வாறே நம் நாட்டிலும் சிலர் விஞ்ஞானக் கலையில் சிறந்து விளங்கினர் ; இன்றும் இருக்கின்றனர். ஸர். பி. ஸி. ரே, ஜகதீச சந்திர போஸ் என்பார் நம் நாட்டில் இருந்த சிறந்த விஞ்ஞானிகள் ஆவர். இக்காலத்தில் நம் நாட்டில் விளங்கும் சர். சி. வி. இராமன் சிறந்த விஞ்ஞானியாக விளங்குகிருர்.

4. சர். சி. வி. இராமன் கி. பி. 1887-ஆம் ஆண்டில் பிறந்தார். இவர் பிறந்த இடம் திருச்சிராப்பள்ளியாகும். இவர் தந்தையார் பெயர் சந்திரசேகர ஐயர் என்பது. தாயார் பார்வதி அம்மையார். இவரது இயற்பெயர் வேங்கடராமன் என்பதாகும். அப்பெயரே இப்பொழுது சி. வி. இராமன் எனச் சுருக்கமாக வழங்குகிறது. இவரது தந்தையாராகிய சந்திரசேகர ஐயர் ஆசிரியராக இருந்தார். அவருக்கு மூன்று குழந்தை கள் உண்டு. அவருள் வேங்கடராமன் இரண்டாம் புதல்வர்.

5. இளம் பருவத்திலேயே கூரிய அறிவு படைத்து விளங்கிய வேங்கடராமன் நன்கு படித்துப் பதினுரும் வயதில் பி.ஏ. பட்டமும், பதினெட்டாம் வயதில் எம்.ஏ. பட்டமும் பெற்ருர். இவர் கல்லூரியில் படித்துக்

கொண்டிருந்த போதே ஒளியைப் பற்றி ஆராய்ந்து தம் கருத்துக்களை ஒரு கட்டுரையாக எழுதினார். இக் கட்டுரை இங்கிலாந்திலுள்ள விஞ்ஞானக்கலைப் பத்திரிகையில் வெளிவந்தது. அரசாங்கத்தார் நடத்திய போட்டித் தேர்வில் இவர் முதல்வராக வெற்றி பெற்றார். அதனால் இவருக்குக் கல்கத்தாவில் அரசாங்க உதவிக் கணக்கு அதிகாரி பதவி கிடைத்தது. இவர் **உலோக சுந்தராம்பாள்** என்னும் அம்மையாரை மணந்துகொண்டார்.

6. நிதியிலாகாவில் வேலை பார்த்து வந்தாலும், இவருடைய மனம் விஞ்ஞானத்தையே நாடி நின்றது. அதனால் வேங்கடராமன் ஓய்வு கிடைத்த பொழுதெல்லாம் **டாக்டர் மகேந்திரலால் சர்க்கார்** ஏற்படுத்திய விஞ்ஞானக் கலை வளர்ச்சிக் கழகத்தில் ஆராய்ச்சி செய்து வந்தார். இந் நிலையில் இவர் இரங்கூனுக்கு மாற்றப்பட்டார். சில மாதங்களுக்குள் இவர் தந்தையார் காலமானார். அதன் பொருட்டு இரங்கூனிலிருந்து திரும்பி வந்த வேங்கடராமன் நாகபுரியில் வேலையை ஒப்புக்கொண்டார்., மீண்டும் இவர் கல்கத்தாவுக்கே மாற்றப்பட்டார். இவ்வாறு இவர் பலவிடங்களுக்கு மாற்றப்பட்டாலும், தாம் இருக்குமிடத்தில் ஓர் அறையை அமைத்துக்கொண்டு விஞ்ஞான ஆராய்ச்சியை விடாமல் நடத்தினார்.

7. கல்கத்தாவில் **சர். அஸ்டோஷ் முகர்ஜி** என்பவர் நிறுவிய விஞ்ஞானக் கல்லூரியில் வேங்கடராமன் பேராசிரியர் பதவியை ஏற்றார். விஞ்ஞானத்தின் மீது வைத்த பற்றினால் அரசாங்க வேலையையும் இவர் விட்டுவிட்டார். வேங்கடராமன் ஒலி, ஒளி என்பவற்றை ஆராய்ந்தார்.

8. கடலும் வானமும் நீல நிறமாய் இருப்பதேன் என்பதைப் பற்றி வேங்கடராமன் ஆராய்ந்தார். இதற்காக இவர் உலகில் சிறந்த அறிஞர்களுக்குக் கொடுக்கப்படும் எண்ணுயிரம் பவுன் மதிப்புள்ள '**நோபெல் பரிசு**' என்பதை 1930-ஆம் ஆண்டில் பெற்ருர்.

9. வேங்கடராமனுக்கு அரசாங்கத்தார் **சர்** பட்டம் அளித்துப் பெருமைப்படுத்தினர். வேங்கடராமன் இங்கிலாந்து, கனடா, அமெரிக்கா, ஸ்வீடன், ஜெர்மனி, பிரான்ஸ் என்னும் நாடுகளுக்குச் சென்று பல அரிய விஞ்ஞானச் சொற்பொழிவுகள் ஆற்றினுர். 1933-ல் பெங்களூரிலுள்ள **டாட்டா இந்திய விஞ்ஞான ஆராய்ச்சிக் கழகத்** தலைவராக அமர்ந்தார். 1943-ல் அதனை விடுத்து, பெங்களூரில் தம் பெயராலேயே ஒரு விஞ்ஞான ஆராய்ச்சிச் சாலை ஏற்படுத்தி அதனைச் சிறப்பாக நடத்தி வருகிருர். இவருடைய ஊக்கமும், உழைப்பும், தன்னம்பிக்கையும், பொறுமையும் யாவரும் மேற்கொண்டு ஒழுகத் தக்க அரிய பண்புகள் ஆகும்.

*அரும்பதங்கள்;* அறிவாளர், அற்புதங்கள், விசையோடு, விஞ்ஞானக்கலை, காலமானர், பிரதிநிதி, சொற்பொழிவு, கதிர், ஊக்கம், தன்னம்பிக்கை.

### பயிற்சி

I. விடை எழுதுக:-

1. உலகம் எவ்வாறு மாறுதல் அடைகிறது?
2. நாம் இக்காலத்தில் காணும் அற்புதங்கள் யாவை?
3. நம் நாட்டின் சிறந்த விஞ்ஞானிகள் யார்?
4. இராமன் எங்கு எப்பொழுது பிறந்தார்?
5. இராமன் முதலில் என்ன வேலை பார்த்து வந்தார்?
6. இவருக்கு எதனுல் நோபெல் பரிசு வழங்கப்பட்டது?
7. இராமன் இப்போது என்ன செய்து வருகிருர்?

II. கோடுள்ள இடங்களை நிரப்புக;-

1. சர். சி. வி. இராமனுடைய இயற்பெயர்———.

2. இராமன்———என்னும் அம்மையாரை மணந்து கொண்டார்.

3. வேங்கடராமன்———, ———நீல நிறமாய் இருப்பது ஏன் என ஆராய்ந்தார்.

III. பின் வரும் சொற்களை வாக்கியங்களில் பயன்படுத்துக:-

அற்புதங்களை, தேவையான, விசையோடு, மிக வேகமாய், நாளுக்கு நாள், சிறப்பாக.

IV. எதிர்ப் பதங்கள் எழுதுக :-

1. குறைந்த ×
2. பலர் ×
3. தெரியாத ×
4. நீண்ட ×
5. பெரியோர் ×

## 24. நம் குடியரசுத் தலைவர் பிரசாத்

1. நாம் இன்று சுதந்தரக் குடியரசு நாட்டில் வாழ்கிறோம். 1950-ஆம் வருடம், ஜனவரி மாதம், 26-ஆம் தேதியன்று நம் நாடு சுதந்தரக் குடியரசு நாடாயிற்று. அக் குடியரசிற்குத் தலைவராக இருப்பவர் டாக்டர் இராஜேந்திர பிரசாத் ஆவர். இவர் காந்தியடிகளின் அன்பைப் பெற்றவர்; தன்னலமற்றவர்; நாட்டுக்குழைத்த பெரியார். இவர் பீகார் இராச்சியத்தைச் சேர்ந்தவர் ; காயஸ்தர் குடியில் பிறந்தவர். காயஸ்தர் என்பார் கல்வியிலும் செல்வத்திலும் சிறந்து விளங்கும் குடியினர் ஆவர்.

2. இளமைப் பருவத்திலிருந்தே பிரசாத் நுட்ப புத்தியுடையவராக விளங்கினார். பிரசாத் நன்கு கல்வி கற்றுக் கல்கத்தா சர்வகலாசாலையில் பீ.ஏ. பரீட்சை

யில் முதன்மையாகத் தேறினார். இவர் ஐ. சி. எஸ். பரீட்சைக்குப் படிக்க வேண்டுமென்பது இவரது தந்தையார் விருப்பம். ஆனால் பிரசாத் சட்டக் கல்வி படிக்க வேண்டுமென்று விரும்பினார். இங்கிலே- யில் இவர் தந்தையார் இறந்தார். பிரசாத் எம். ஏ. பரீட்சையிலும் தேர்ச்சி பெற்றார். உடனே இவருக்கு



முசபர்பூர் கலாசாலையில் பேராசிரியர் வேலை கிடைத்தது. பிரசாத் ஓராண்டு ஆசிரியராக வேலை பார்த்தார். அதன் பின்னர், தம் ஆவலைப் பூர்த்தி செய்துகொள்ள எண்ணிக் கல்கத்தாவிற்குச் சென்று சட்டக் கல்வி பயின்றார்; இவர் பி. எல். பட்டமும் பெற்று, உயர்நீதிமன்றத்தில் வழக்கறிஞராக வேலை பார்த்து வந்தார். தம் வழக்கறிஞர் தொழிலில் தக்க வருவா-

யையும் புகழையும் பிரசாத் விரைவில் தேடிக்கொண்டார். பிறகு எம்.எல். பரீட்சைக்குப் படித்து அதிலும் முதன்மையாகத் தேறினார்.

3. பிரசாத் பீகாரின் தலைநகராகிய பாட்னாவிற்குச் சென்று வழக்கறிஞர் தொழிலைப் பார்த்து வந்தார். தொழிலில் வெற்றியும், பொருட் பெருக்கமும் உண்டாயின. இவர் செல்வத்தால் பயன் எய்தியவர் பலர். சம்பரான் மாவட்டத்தில் உள்ள குடியானவர்கள் ஓர் ஏக்கர் நிலத்தில் ஆறில் ஒரு பங்கில் அவுரி பயிரிட வேண்டுமென்பது கட்டாயமானதொரு சட்டமாக இருந்தது. அங்குள்ள நிலங்களை ஐரோப்பியர் குத்தகைக்கு வாங்கியிருந்தனர். ஐரோப்பியர் வேலைக்கேற்ற கூலி கொடுப்பதில்லை. அதனால் உழவர்கள் அடைந்த துன்பங்கள் பல. அந்நிலையைக் கண்ட காந்தியடிகள் சம்பரான் சத்தியாக்கிரகத்தை நடத்தினார். அச்சத்தியாக்கிரகமும், காந்தியடிகளின் கொள்கைகளும் பிரசாத்தின் மனத்தைக் கவர்ந்துகொண்டன. அன்று முதல் பிரசாத், காந்தியடிகளைப் போல் எளிய வாழ்க்கையை மேற்கொண்டு வாழ்ந்து வரலானார்.

4. காந்தியடிகள் இந்தியர் சுதந்தரம் பெறுவதற்காகத் தோற்றுவித்த இயக்கங்கள் பல. அவற்றுள் ஒன்று ஒத்துழையாமை இயக்கம். இந்த இயக்கத்தில் சேர்ந்த பலர் பட்டம் பதவிகளையும், செல்வத்தையும், குடும்பத்தையும் துறந்து நாட்டுப் பணியில் இறங்கினர். பிரசாத்தும் காந்தியடிகளுடன் உப்புச் சத்தியாக்கிரகம் முதலானவற்றில் கலந்து கொண்டு தொண்டாற்றினார். அதனால் பிரசாத் பல முறை சிறைக்குச் சென்றார். பீகார் பூகம்பத்தின்பொழுது பெரும்பொருள் திரட்டுவதற்காக இவர் செய்த தொண்டு யாவராலும்

போற்றிக் கொண்டாடப்பட்டது. சுவாமி விவேகானந்தரின் கொள்கைகளைக் கடைப்பிடித்து ஸ்ரீராமகிருஷ்ண மடத்தில் சேர்ந்து தொண்டாற்றி வந்த அமெரிக்க நாட்டு அம்மையாராகிய நிவேதிதாதேவி பிரசாதைக் காங்கிரஸ் ஊழியராகப் பார்த்தபோது 'பிரசாத் இந்திய நாட்டின் தலைமைப் பதவிக்குத் தகுதியானவர். அவர் அப்பதவியை விரைவில் பெறுவாராக' என்று கூறினார்.

5. 1947-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் பதினைந்தாந்தேதி இந்தியா சுதந்தரம் அடைந்தது. அப்பொழுது, இடைக்கால ஆட்சிக் குழு ஒன்று ஏற்பட்டது. அக்குழுவில் உணவு, உழவு இலாகாக்களின் அமைச்சராக இராஜேந்திர பிரசாத் அமர்ந்து ஒழுங்குற வேலை பார்த்தார். 1950-ஆம் ஆண்டு சுதந்தரக் குடியரசு ஏற்பட்டபொழுது எல்லாக் கட்சியினரும் ஒன்றுகச் சேர்ந்து பிரசாதைக் குடியரசுத் தலைவராக்கினர். அவராட்சியின் நேர்மையைக் கண்டு பொதுத் தேர்தலுக்குப் பிறகு மறு முறையும் பிரசாதையே குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுத்தனர் என்றால் அவர் எவ்வளவு நேர்மை உடையவர் என்பது புலனாகிறது அன்றோ! பாபு இராஜேந்திர பிரசாத் நீடூழி வாழ்வாராக!

*அரும்பதங்கள்: சுதந்தரம், குடியரசு, சட்டக் கல்வி, நீதிமன்றம், குத்தகை, பேராசிரியர், வழக்கறிஞர், ஒத்துழையாமை இயக்கம், ஊழியர், ஒழுங்குற, நேர்மை, குழு.*

**பயிற்சி**

I. *விடை எழுதுக:*

1. *நம் நாடு எப்பொழுது குடியரசு நாடாக மாறியது?*
2. *பிரசாத் எவ்விதக் கல்வி கற்றார்?*
3. *சம்பரான் மாவட்டத்தில் உழவர் ஏன் துன்பமுற்றனர்?*
4. *காந்தியடிகளோடு பழகும் வாய்ப்பு இவருக்கு எப்படிக் கிடைத்தது?*

5. பிரசாத் நாடு விடுதலை யடைவதற்குச் செய்த தொண்டுகள் யாவை?
6. நிவேதிதாதேவி இவரைப்பற்றி யாது கூறினர்?
7. பிரசாத் நேர்மையுடையவர் என்பது எவ்வாறு புலனுகின்றது?

கோடுள்ள இடங்களை நிரப்புக :

1. இராசேந்திர பிரசாத் ---- குடியைச் சேர்ந்தவர்.
2. பீகாரின் தலைநகரம் ----.
3. இந்தியா ---- ஆண்டு —— மாதம் --- தேதி சுதந்தரம் அடைந்தது.
4. காந்தியடிகள் தோற்றுவித்த ——— இயக்கத்தில் பிரசாத் கலந்து கொண்டார்.

III. வாக்கியங்களில் பயன்படுத்துக :–

முதன்மையாக, விரைவில், எளிய, துறந்து, நேர்மை, ஒழுங்குற.

IV. எதிர்ப் பதங்கள் எழுதுக ;

1. வெற்றி ×
2. போற்றுதல் ×
3. புகழ்ச்சி ×
4. துன்பம் ×

## 25. கடிதங்கள்

1. கடிதம் எழுதுவது ஒரு நல்ல முயற்சியாகும். பிற நாட்டு மொழிகள் சிலவற்றில் சிற்சில பெரியோர்கள் எழுதிய கடிதங்கள் இன்றும் நாம் போற்றிப் படிக்கத் தக்க இலக்கியப் பண்புகளுடன் அமைந்துள்ளன. கடிதம் எழுதுவதில் கவனிக்கவேண்டிய விதிகளை முன் வகுப்பில் அறிந்தாய் :—

2. கடிதம் எழுதும்போது இவற்றை மறவாதே. உறையின் வெளிப்புறத்தில் அல்லது கடித அட்டை-

யின் பின்புறத்தில் எழுதப்படுவோரின் முகவரியை தெளிவாகவும், விளக்கமாகவும், தவறின்றியும் எழு வேண்டும்.

3, கடிதம் சுருக்கமாகவும், தாம் அறிவிக் நினைத்த செய்திகள் அனைத்தும் கொண்டதாகவும் படிப்பவருக்கு நன்கு விளங்குவதாயும் இருக் வேண்டும்.

4. கையெழுத்து அழகாக இருக்கவேண்டும் கீழே சில மாதிரிக் கடிதங்களைப் பார்ப்போம்:

## 1. ஆசிரியருக்குக் கடிதம்

74, தம்புசெட்டித் தெரு,
சென்னை,
**15—10—54**

ஆசிரியர் அவர்களுக்கு,

வணக்கம் பல. இன்று என் தந்தையார் என்னை என் அக்காளின் திருமணத்திற்கு அழைத்துச் செல்வ தால், இன்று முதல் ஐந்து நாட்கள்வரை எனக்கு விடு முறை அளிக்க வேண்டுமென்று வணக்கத்துடன் கேட் டுக் கொள்கிறேன்.

இப்படிக்கு,
தங்கள் கீழ்ப்படிந்துள்ள மாணவன்,
**வே. நெடுஞ்செழியன்.**

முகவரி :

ஐந்தாம் வகுப்பு 'பி' பிரிவு, ஆசிரியர் அவர்களுக்கு,
முத்தியாலுப்பேட்டை உயர்நிலைப்பள்ளி,
தம்புசெட்டிதெரு,
சென்னை 1.

## 2. வாணிகக் கடிதம்

66, மேற்குமாசி வீதி,
மதுரை.
**20—10—54**

ஐயா,

நீங்கள் வெளியிட்டுள்ள 'சந்திரா வாசகம்' என்னும் புத்தகத்தில் ஒன்றை வி. பி. தபால் மூலமாக அனுப்ப வேண்டுகிறேன்.

இப்படிக்கு,
அன்பன்,
க. முருகன்.

முகவரி:

தலைமைக் கணக்கர்,
முருகையபிள்ளை கம்பெனி,
ஸ்ரீவைகுண்டம்,
திருநெல்வேலி ஜில்லா.

## 3. அழைப்புக் கடிதம்

பாரதி கழகம்,
சென்னைக் கிறிஸ்தவக் கலாசாலை,
சேத்துப்பட்டு,
சென்னை 10.
**18—11—54**

அன்புடையீர் !

எம் கழகத்தின் ஆண்டு விழாவை வரும் டிசம்பர் மாதம் நடத்துவதெனக் கழகத்தார் தீர்மானித்துள்ளனர். அச்சமயம் யோகி சுத்தானந்த பாரதியார் தலைமை வகிக்க இசைந்துள்ளார். எம் பள்ளி மாணவர் அனைவரும் தங்கள் சொற்பொழிவினைக் கேட்கப் பெரு விருப்பினராயுள்ளனர். தாங்கள் அவ்விழாவில் கலந்து

கொண்டு 'பாரதியும் தமிழும்' என்பது பற்றிச் சொ பொழிவாற்றுதற்கு இசைந்தருள வேண்டுகின்றேன ஆண்டு விழா டிசம்பர் திங்கள் இருபத்து நான்கா நாளாகும். தங்கள் இசைவைத் தெரிவிக்குமா வேண்டுகின்றேன். வணக்கம்.

இப்படிக்குத்
தங்கள் அன்புள்ள,

சா. இளம்வழுதி
செயலாளன்.

முகவரி:

திருவாளர்,
டாக்டர். மு. வரதராசனார் அவர்கள்,
தமிழ்ப் பேராசிரியர்,
பச்சையப்பன் கல்லூரி,
சேத்துப்பட்டு,
சென்னை—10.

## 4. விண்ணப்பக் கடிதம்

75, லிங்கி செட்டித் தெரு,
சென்னை,
18—11—54

திரு.

தலைமை ஆசிரியர் அவர்கட்கு,
இந்து முஸ்லிம் உயர்நிலைப் பள்ளி
அங்கப்ப நாயக்கன் தெரு,
சென்னை—1.

அன்புள்ள ஐயா,

தங்கள் பள்ளியில் வேலை செய்ய ஒரு தமிழ் ஆசிரியர் வேண்டியிருப்பதாக அறிந்தேன். நான் S. S. L. C படித்துள்ளேன். சென்னைப் பல்கலைக் கழகத்தில் வித்துவான் பட்டம் பெற்றுள்ளேன். மற்றும், நான்

ஈரோடு மகாஜன உயர்நிலைப் பள்ளியிலும், கோபி செட்டிப்பாளையம் டையமண்டு ஜூப்ளி உயர்நிலைப் பள்ளியிலும் இரண்டாண்டுகள் தமிழாசிரியனாக இருந்துள்ளேன். சென்னையில், செயின்ட் காபிரியேல் உயர்நிலைப்பள்ளியிலும் ஓராண்டு வேலை பார்த்துள்ளேன். ஆங்காங்குத் தலைமையாசிரியரிடம் வாங்கிய நற்சான்று இதழ்களைத் தங்கள் பார்வைக்கு அனுப்பியுள்ளேன். எனக்கு அவ்வேலை அளிக்கப்படுமாயின் தங்கள் மனம் மகிழ்ச்சியுறும் வண்ணம் என் கடமையைச் செய்வேன் என்று வணக்கத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

இப்படிக்கு,
வணக்கமும் கீழ்ப்படிதலுமுள்ள,
**இரா. நச்சினார்க்கினியன்,**

முகவரி.

திரு. தலைமையாசிரியர் அவர்களுக்கு,
இந்து முஸ்லிம் உயர்நிலைப்பள்ளி,
சென்னை—1.

அரும்பதங்கள்: இலக்கியம், பண்பு, உறவினர், முகவரி, சொற்பொழிவு, விருப்பு, இசைவு. வித்துவான், நற்சான்று இதழ், விண்ணப்பம்.

**பயிற்சி**

1. கடிதம் எழுதும்போது கவனிக்க வேண்டிய முறைகள் யாவை?
2. ஏதேனும் ஒரு காரணத்தை முன்னிட்டு விடுமுறையை விரும்பி, உன்னுடைய வகுப்பு ஆசிரியருக்கு ஒரு கடிதம் எழுதுக.
8. உனக்கு வேண்டிய புத்தகம் ஒன்றை அனுப்பி வைக்கும்படி ஒரு புத்தகக் கம்பெனிக்குக் கடிதம் எழுதுக.
4. உன் வீட்டில் நடைபெற இருக்கும் கொண்டாட்டத்திற்கு உன் நண்பனை அழைத்துக் கடிதம் எழுதுக.

# செய்யுட் பகுதி

## I. வாழ்த்து

உருவமில் இறைவன் ஒருவன் என்றே
அருளிய முகம்மது பெருநபி வாழி!
'நேசி பகைவரை' என்று பேசி
ஆணி அறைந்த மாணிலர் இடத்தும்
இரக்கம் காட்டிப் பரக்கச் சிலுவையில்
நின்ற கிறிஸ்து அன்பு வாழி!
அருளறம் வளர்த்த அருகன் வாழி!
ஒருமையில் நின்று தருமம் உணர்த்திய
சத்திய ஞானப் புத்தன் வாழி!
அமரன் அழகுக் குமரன் வாழி!

—திரு. வி. கலியாண சுந்தரனார்.

அரும்பொருள்

உருவம் இல் - உருவம் இல்லாத; மாண் + இலர் - சிறந்த பண்புகள் இல்லாதவர்; அருள் - கருணை; அருகன் - சமணர்களுடைய கடவுள்; சத்தியம் - உண்மை; அமரன் - அழிவில்லாதவன்; குமரன் - முருகன்.

## II. நீதிப்பகுதி

### 1. நன்னெறி

பிறர்க்குதவி செய்யார் பெருஞ்செல்வம் வேறு
பிறர்க்குதவி யாக்குபவர் பேறும்—பிறர்க்குதவி
செய்யாக் கருங்கட(ல்)நீர் சென்று புயல்முகந்து
பெய்யாக் கொடுக்கும் பிறர்க்கு. 1.

தொலையாப் பெருஞ்செல்வத் தோற்றத்தோ(ம்) என்று
தலையா யவர்செருக்குச் சார்தல்—இலையால்
இரைக்கும்வண்(டு) ஊதுமலர் ஈர்ங்கோதாய் மேரு
வரைக்கும்வந் தன்று வளைவு. 2.

இன்சொலா(ல்) அன்றி இருநீர் விய(ன்)உலகம்
வன்சொலால் என்றும் மகிழாதே—பொன்செய்
அதிர்வளையாய் பொங்கா(து) அழற்கதிரால் தண்ணென்
கதிர்வரவால் பொங்குங் கடல். 3.

ந்தைநல் கூர்ந்தா(ன்) இரப்பவர்க்கீந்(து) என்றவன்றன்
மைந்தர்தம் ஈகை மறுப்பரோ—பைந்தொடீ
நின்று பய(ன்)உதவி நில்லா அரம்பையின்கீழ்க்
கன்றும் உதவுங் கனி. 4.

கைம்மா(று) உகவாமல் கற்றறிந்தோர் மெய்வருந்தித்
தம்மா(ல்) இய(ல்)உதவி தாம்செய்வர்—அம்மா
முளைக்கு(ம்) எயிறு முதுசுவைநா விற்கு
விளைக்கும் வலியனதா மென்று. 5.

உள்ளம் கவர்ந்தெழுந்(து) ஓங்கு சினங்காத்துக்
கொள்ளும் குணமே குண(ம்)என்க—வெள்ளம்
தடுத்தல் அரிதோ? தடங்கரைதான் பேர்த்து
விடுத்தல் அரிதோ? விளம்பு. 6.

நீக்க(ம்) அறு(ம்)இருவர் நீங்கிப் புணர்ந்தாலும்
நோக்கின் அவர்பெருமை நொய்(து)ஆகும்—பூக்குழலாய்
நெல்லின் உமிசிறிது நீங்கிப் பழமைபோல்
புல்லினும் திண்மைநிலை போம். 7.

கற்ற அறிவினரைக் காமுறுவர் மேன்மக்கள்
மற்றையர் தாமென்றும் மதியாரே—வெற்றிநெடும்
வேல்வேண்டும் வாள்விழியாய் வேண்டா புளிங்காடி
பால்வேண்டும் வாழைப் பழம். 8.

தங்குறைதீர்(வு) உள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம்
வெங்குறை தீர்க்கிற்பார் விழுமியோர்—திங்கள்
கறையிருளை நீக்கக் கருதா(து) உலகின்
நிறையிருளை நீக்குமேல் நின்று. 9.

எழுத்தறியார் கல்விப் பெருக்கம் அனைத்தும்
எழுத்தறிவார் காணின் இலையாம்—எழுத்தறிவார்
ஆயுங் கடவுள் அவிர்சடைமுன் கண்டளவில்
வீயுஞ் சுரநீர் மிகை. 10.

—சிவப்பிரகாசர்.

அரும்பொருள்

1. பேறு–செல்வம்; புயல்–மேகம்; முகந்து–கொண்டு; பெய்யாக்கொடுக்கும்–(மழையாய்) பெய்து கொடுக்கும்.

2. தொலையா—அழியாத; தலையாயவர்—சிறந்த பெரியோர் சார்தல்—அடைதல்; இலை—இல்லை; ஆல்—ஈற்றசை இரைக்கும்—ஒலிக்கின்ற; ஈர்ங்கோதை—குளிர்ச்சி பொருந்திய மாலை; வரை—மலை

3. வன்சொல்—கடுஞ்சொல்; இருநீர்—பெரியநீர்(கடல்); வியன் உலகம்—பரந்த உலகம்; அதிர்வளை—ஒலிக்கின்ற வளையல்; அழற் கதிர்—வெப்பம் பொருந்திய கிரணங்களையுடைய சூரியன்; தண் என்கதிர்—குளிர்ச்சி பொருந்திய கிரணங்களையுடைய சந்திரன்.

4. நல்கூர்ந்தான்—வறுமை யடைந்தான்; ஈகை—கொடுக்கும் தன்மை; பைந்தொடி—பசுமையான வளையல்களை அணிந்தவளே; அரம்பை—வாழை.

4. கைம்மாறு—பதில் உதவி; உகவாமல்—விரும்பாமல்; மெய்—உடம்பு; எயிறு—பல்; வலியன—கடினமான பொருள்களை.

6. கவர்ந்து—வசப்படுத்திக்கொண்டு; சினம்—கோபம்; தடம் கரை—அகன்ற கரை; விடுத்தல்—தண்ணீரை வெளியே விடுதல்; விளம்பு—சொல்லுவாயாக.

7. நீக்கம் அறும்—பிரிதல் அல்லாத; நொய்து—அற்பம்; பூக் குழல்—பூக்களை யணிந்த கூந்தல்; புல்லினும்—கூடினாலும்; திண் மைநிலை—உறுதியான நிலைமை.

8. காமுறுவர்—விரும்புவர்; புளிங்காடி-புளிப்புச்சுவை பொருந் திய காடிநீர்.

9. உள்ளார்-நினையாதவராய்; வெங்துறை-கொடிய துன்பங் கள்; விழுமியோர்-சிறந்தோர்; திங்கள்-சந்திரன்; கறை-களங்கம்.

10. காணின்-பார்த்தால்; ஆயும்-ஆராய்கின்ற; கடவுள்-சிவ பெருமான்; அவிர்சடை-ஒளி பொருந்திய சடை; சுரநீர்-கங்கை.

## 2. நீதிவெண்பா

செய்யு(ம்) ஒருகருமம் தேர்ந்து புரிவதன்றிச்
செய்யின் மனத்தாபம் சேருமே—செய்யவொரு
நற்குடியைக் காத்த நகுலனைமுன் கொன்றமறைப்
பொற்கொடியைச் சேர் துயரம் போல். 1.

சிற்றுணர்வோர் என்றும் சிலுசிலுப்ப(ர்) ஆன்(று) அமைந்த
முற்றுணர்வோர் ஒன்றும் மொழியாரே—வெற்றிபெறும்
வெண்கலத்தி(ன்) ஓசை மிகுமே விரிபசும்பொன்
ஒண்கலத்தி(ல்)உண்டோ ஒலி! 2.

கொம்புளதற்(கு) ஐந்து குதிரைக்குப் பத்துமுழம்
வெம்புகரிக்(கு) ஆயிரந்தான் வேண்டுமே—வம்புசெறி
திங்கினர்தங் கண்ணில் தெரியாத தூரத்து
நீங்குவதே நல்ல நெறி. 3

ற்பூரம் போலக் கடலுப்(பு) இருந்தாலும்
ற்பூரம் ஆமோ கடலுப்புப்—பொற்பூரும்
ண்ணியரைப் போல இருந்தாலும் புல்லியர்தாம்
ண்ணிய(ர்)ஆ வாரோ புகல். 4.

நாமரைபொன் முத்துச் சவரங்கோ ரோசனைபால்
பூமருதேன் பட்டுப் புனுகுசவ்வா(து)—ஆ(ம்) அழல்மற்(று)
ங்கே பிறந்தாலு(ம்) எள்ளாரே நல்லோர்கள்
ங்கே பிறந்தாலும் என். 5.

சகு விடந்தலையி(ல் எய்து(ம்)இருந் தேளுக்கு
வாய்த்த விடங்கொடுக்கில் வாழுமே—நோக்கரிய
பைங்க(ண்)அர வுக்குவிடம் பல்லளவே துச்சனருக்(கு)
அங்கமுழு தும்விடமே யாம். 6.

பொன்னும் கரும்பும் புகழ்பாலும் சந்தனமும்
சின்னம் படவருத்தம் செய்தாலும்—முன்னிருந்த
நற்குணமே தோன்றும் நலிந்தாலும் உத்தமர்பால்
நற்குணமே தோன்றும் நயந்து. 7

பகைசேரும் எண்ணுன்கு பற்கொண்டே நல்நா
வகைசேர் சுவையருந்து மாபோல்—தொகைசேர்
பகைவரிடம் மெய்யன்பு பாவித்(து) அவரால்
சுகமுறுதல் நல்லோர் தொழில். 8

இன்ன(ல்)தரும் பொருளை யீட்டுதலும் துன்பமே
பின்னதனைப் பேணுதலும் துன்பமே—அன்ன(து)
அழித்தலும் துன்பமே யந்தோ பிறர்பால்
இழத்தலும் துன்பமே யாம் 9

பொற்(பு)அறிவில் லாதபல புத்திரரைப் பேறலி(ன்)ஓர்
நற்புதல்வ னைப்பெறுத(ல்) நன்றுமே—பொற் கொடியே
பன்றிபல குட்டி பயந்தததனு(ல்) ஏதுபயன்
ஒன்றமையா தோகரிக்கன்(று) ஓது. 10

அரும்பொருள்

1. தேர்ந்து - ஆராய்ந்து; மனத்தாபம்-மனவருத்தம். செய்ய-சிறந்த; நகுலன்-கீரி; மறை-வேதம்; பொற்கொடி-பொற்கொடி போன்ற பெண்.

2. சிற்றுணர்வோர்–இழிந்த அறிவினையுடையோர்; சிலுசிலு பர் படபடத்துப் பேசுவா; ஆன்று–(கல்வியினால்) நிறைந்து; ஒ கலம்–சிறந்த பாத்திரம்.

3. வெம்புகரி–வருத்துகின்ற யானை; வம்புசெறி–கொடுமை மிகுந்த.

4. பொற்பு ஊரும்–அழகு மிகுகின்ற; புல்லியர்–இழிந்தவ புகல்–சொல்வாயாக.

5. சவரம்–சாமரை; பூமருதேன்–பூவில் பொருந்தியுள்ளதேன் அழல்–நெருப்பு; எள்ளார்–இகழார்.

6. விடம்–நஞ்சு; எய்தும்–இருக்கும்; இரும்தேள்–பெரி தேள்; வாய்த்த-பொருந்திய; நோக்கரிய-பார்த்தற்கரிய; துச்சன தீயோர்; அங்கம்-உடம்பு.

7. சின்னம்பட–நிலைகுலையும்படி; நலிந்தாலும்-துன்பமடை தாலும்; நயந்து-மிகுந்து.

8. எண்ணான்கு-முப்பத்திரண்டு; தொகை சேர்-பலவகையாக கூடியுள்ள; பாவித்து-மனத்தில் நினைத்து; உறுதல்-அடைதல்.

9. இன்னல்-துன்பம்; பேணுதல்-பாதுகாத்தல்; அந்தோ ஐயோ.

10. பொற்பு-அழகு; பேறலின்-பெறுவதைக் காட்டிலும்; பய ததனால் பெற்றதனால்; ஒன்றமையாதோ-ஒன்று+அமையாதோ ஒன்று போதாதோ; கரிக்கன்று-யானைக் கன்று.

## 3. சதகச் செய்யுட்கள்

### (1) செய்ய வேண்டிய செயல்கள்

பெற்றதாய் தந்தைதன் சுற்றமே முதலான
பெரியோரை முனியவேண்டா ;
பின்ஒன்று முன்ஒன்று பேசியே அவமானப்
பேர்கொண்டு திரியவேண்டா ;
உற்றவர்கள் போலஉள் பகையான வஞ்சகரை
ஒருநாளும் நம்பவேண்டா ;
ஒருவர்க்கு இச்சையாய்ப் பொய்சொல்லிப் பின்சபை
ஊமைபோல் நிற்கவேண்டா ; [யில்
சற்றுமே பொறுமையில் லாதவர் சண்டையில்
தாம்போய் விலக்கவேண்டா ;
தைரியந் தனில்விக்ர மாதித்தன் என்னினும்
தன்னையே புகழவேண்டா ;

## 4. விவேகசிந்தாமணி

### (1) குலத்தின் இயல்பு

குக்கலைப்பிடித்து, நாவிக்
　　கூண்டினில் அடைத்து வைத்து,
மிக்கதோர் மஞ்சள் பூசி,
　　மிகுமணம் செய்தா லும் தான்,
அக்குலம் வேற தாமோ
　　அதனிடம் புனுகுண் டாமோ ?
குக்கலே குக்கல் அல்லால்
　　குலந்தனில் வேற தாமோ ?

### (2) இரக்கத்தின் சிறப்பு

கலை எலாம் உணர்ந்தா ரேனும்
　　கரிசறத் தெளிந்தா ரேனும்
மலைஎன உயர்ந்தா ரேனும்
　　மனமயல் அகன்ற ரேனும்
உலகெலாம் புகழப் பல்லோர்க்கு
　　உதவிய கைய ரேனும்
இலகிய இரக்கம் இன்றேல்
　　எழுநர(கு) அடைவர் அன்றே.

1. குக்கல்-நாய், நாவி-புனுகு.
2, கரிசுஅற-குற்றம் இல்லாமல்; மனமயல்.மனமயக்கம்; கயர்-கையினையுடையவர்; இலக்கிய - விளங்கிய; அடைவர்-சர்வர்.

## 5. பலசுவைப் பாடல்கள்

### (1) பசு

பச்சைப்புல்லைத் தின்று வெள்ளைப்
　　பால்தர நீ என்ன
பக்குவஞ் செய்தாய் ? அதனைப்
　　பகருவையோ ? பசுவே !
உச்சியுடல் நக்கி ஈன்ற
　　உடன்உனது கன்றை
உயிர்எழுப்பும் மாயம் எதோ ?
　　உரைத்திடுவாய், பசுவே ! 1

வாய்க்கினிய பால் தருவாய் ;
வயற்குரமும் தருவாய் ;
வண்டிகட்டக் காளை யும்நீ
வளர்த்தளிப்பாய், பசுவே !
தாயில்லாப் பிள்ளை கட்குத்
தாயாவாய் ; நோயால்
தளர்ப வர்க்கு மருத்துவச்சி
தாஞவாய், பசுவே !

## (2) நாய்

வீட்டு வாசல் காப்பவன்,
வேட்டை யாட வல்லவன்,
ஆட்டுக் கிடைப் பாண்டியன்,
அன்பு மிக்க தோழன்.
உண்ட சோற்றை எண்ணி
உயிரும் விடத் துணிபவன்
மண்ட லத்தில் நாய்போல்
வாய்த்த துணை உண்டோ ?

—திரு. கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை